# கல்பலதா

அல்லது

# வெளிவராத இரகசியம்

1921



# KALPALATHA

OR

THE HIDDEN MYSTERY

BY

Pandit T. S. RAJAM IYER

SECOND EDITION

PUBLISHER
SARADHA VILAS BOOK DEPOT
NEGAPATAM
1921

 [Price Rs ]



# கல்பலதா

அல்லது

# வெளிவராத இரகசியம்

M. L. L. S. Tirumalai Rao
Nattalime

இஃது

பண்டிதர் T. S. இராஜமய்யர்

எழுதியது

இரண்டாம் பதிப்பு





சாரதாவிலாஸ புத்தகசாலை

நாகபட்டணம்

1921

# அத்தியாய அட்டவணை

# குறிப்பு



தமிழ் நவீனகங்களின் அவசியத்தைப்பற்றியும், அவை சாதாரண மனிதர்களுக்கு யாங்ஙனம் உதவி புரிபனவாக இருக்கும் என்பதைப் பற்றியும், நவீனகங்களின் நடை மாற்றப்பட்டிருக்கின்ற விஷயத்தைப் பற்றியும் விபரமாக நமது மாதவி என்னும் புனைந்துரைக் கதையின் முகவுரையில் எழுதியிருக்கிறோம். அவைகளை ஆண்டு கண்டுகொள்க. பிறகு இப்புத்தகத்தினைப் பற்றி ஒரு சில வாக்கியங்களில் குறிப்பொன்று கொடுத்து இதைப்பூர்த்தி செய்கிறோம்.

இப்புத்தகத்தினுக்குத் துப்பறியும் கதை யென்ற நாமகரணம் சூட்டவேண்டுமென்பது சிலருடைய — இந்த கல்பலதா நாவலின் கையெழுத்துப் பிரதியைக் கண்ட எம் நேயர் சிலருடைய — அபிப்பிராயம். ஆயினும் யாம் அதற்கு இசைந்தோமல்லோம். ஏனெனில் இக்கதையினுக்குத் துப்பறியும் கதையின் இலக்ஷணங்கள் பல குறைவுபட்டிருக்கின்றன என்பதை இதன் வாசகர் அறிந்து கொள்ளுவார். துப்பறியும் கதையினுடைய இலக்ஷணங்களில் ஒன்றேனும் அமைக்கப்பெறாத நவீனகங்கள் பல இப்பெயருடன் பிரசுரிக்கப்படுகின்றனவே என்று ஒருவர் வினவுவாராயின், அஃது அக்கதாசிரியரின்

இஷ்டமென்றே சொல்லல் வேண்டும். இவ்விதம் யாம் சொல்லியதிலிருந்தும், துப்பறியும் கதையென்றால் என்ன? அதின் இலக்ஷணங்களென்று சொல்லப்படுபவைகள் யாவை என்று யோசித்துப் பார்ப்போம். ஒரு கதையின் தொடக்கத்தில் நடந்த விஷயத்தை விட்டு, மத்திய பாகத்தில் நடந்த கொலை, களவு முதலிய விஷயங்களைப் பற்றி முதலில் பிரஸ்தாபப் படுத்தி, வாசகர்களுடைய மூளைக்கு வேலை கொடுப்பதும், வாசகர்கள் உண்மையைத் தெரிந்து கொள்ளாமலிருந்தபோதிலும் ஒரு துப்பறிபவன் வாயிலாக உண்மையைத் தெரியப்படுத்துவதுமே துப்பறியும் நாவல்களின் இலக்ஷணங்களாகும். பின்னும் வாசகர் யாரை மஹா நல்லவர்களாக எண்ணியிருந்தனரோ அவரே கொலையாளி, திருடன் முதலியவர் ஆவதும், எவர்களை வாசகர் கெட்டவர்களாக நினைத்திருந்தார்களோ அவர்கள் ஒன்றுமறியாத யோக்கியர்களாவதும் துப்பறியும் கதாசிரியரின் சாமர்த்தியத்தை சூசுப்பிக்கின்றனவாகும். மனிதர்களுடைய மனமானது அடிக்கடி நவ நவ விஷயங்களிலே ஆசை வைக்கின்ற இயற்கைக் குணமுடையதாகையால் இப்பொழுது துப்பறியும் நவீனகங்களில் நம்மவருடைய மனம் சென்றிருப்பது வியக்கற்பாலதன்று. இதுவரையில் வரையப்பட்டுள்ள நாவல்களில் பரிமளா என்னும் நவீனகத்தினைப் போன்ற துப்பறியும் நாவல்களே கிடையாவென்று சொல்லலாம்.

இப்புத்தகத்தில் கதை ஆரம்பத்திலே முன்னுரை என்று எழுதப்பட்டிருப்பதை என்னவோ என்று விட்டு

விட்டு முதலாவது அத்தியாயத்திலிருந்து படிக்க ஆரம்பம் செய்துவிடக்கூடாது. இந்த முன்னுரையும் கதையைச் சேர்ந்ததுதான். முன்னுரை எம்மால் சொல்லப்பட்டது போலவும், கதையின் தொடர்ச்சி, கதா நாயகனுல் சொல்லப்பட்டது போலவும் எழுதப்பட்டிருப்பதை வாசகர் மறந்து மயங்காமலிருக்க வேண்டியே இக்குறிப்பை எழுதலாயினேம்.

இந்த நவீனகத்தை வெளியிட்ட R. M. வீரப்பிள்ளையவர்களும், இதை நேர்த்தியாக அச்சேற்றிக் கொடுத்த P. R. இராமய்யர் கம்பெனியார்களும், எம்மாலெழுதப்படும் புத்தகங்களை யெல்லாம் வாங்கிப் படித்து எமக்கு உற்சாக மூட்டும் தமிழபிமானிகளும் எமது மனமார்ந்த வந்தனத்தை ஏற்றுக் கொள்ளுவார்களாக!

## இந்நூலாசிரியர் எழுதிய வேறு புத்தகங்கள்.

---

| | ரூ. அ. பை |
|---|---|
| ஹரிப்பிரியை அல்லது பாண்டி நாட்டுப் பணப்புதையல் ... ... ... | 1—2—0 |
| இந்துலீகா ... ... ... ... | 0—8—0 |
| மாதவி அல்லது மாதவனின் மாயக் கொலை ... ... ... ... | 0-10—0 |
| யாமினீபூர்ணதிலகா ... ... ... | 0—1—3 |
| புராதன திரிசிரபுரம் ... ... ... | 0—1—0 |

புஸ்தகம் வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாஸத்திற்கு எழுதவும்.

மானேஜர்

சாரதாவிலாஸ புத்தகசாலை,

நாகபட்டணம்.

# கல்பலதா

## அல்லது

# வெளிவராத இரகசியம்

## முன்னுரை

### I

### அபவாதமான வார்த்தை

"ஆயின் அவன் இறந்த விதம் மிகவும் விசித்திரமான தென்கின்றாயா?"

"நான் சொல்வதென்ன! அவன் இறந்தது உனக்கே விசித்திரமாகத் தோன்றுகின்றதுபோலும். ஆனால் அவன் சாதாரணமாக இறந்ததாகத்தான் வைத்தியர்கள் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்."

"ஆமாம், பூலோகமே அதை உண்மை என்று நம்பி இருக்கிறது. அவன்—வெகு சீக்கிரத்தில் மஹோன்னத பதவியை அடையப்போகிற அவன்—இறந்தது நம்முடைய ஜாதிக்கே ஒரு குறைதான். ஆனால், சுந்தரமூர்த்தி—அவ்விரகசியம்—தரையின் மீது கிடந்த பாதிப் புகைச்சுருட்டின் இரகசியம்—உனக்குத் தெரிந்தே இருக்கிறது."

"இதில் விசேஷமென்ன? அவன் புகைபிடித்துக் கொண்டிருக்கையில் திடீரென்று மூச்சுவிட்முடியாமல் திகைத்து உயிர் நீங்கி இருக்கிறான்."

"ஆமாம்" என்று அந்த வழுக்கைத்தலை மனிதன் மற்றவனண்டையில் நெருங்கி, சற்று மெல்லிய குரலாய்— "அவன் புகைச்சுருட்டைப் பிடிக்கையில் இறந்தது உண்மைதான்: ஆனால் அந்தச் சுருட்டு விஷங்கலந்திருந்ததன்றோ? இந்த விஷயம் உனக்கும் தெரிந்ததுதானே? என்னிடத்திலும் தெரியாதவன்போல், பாசாங்கு செய்வதில் பயனென்ன?" என்று கேட்டான்.

"சரி, மேலே?" என்று, புருவத்தைச் சுளித்துக் கொண்டு கேட்டு, தனக்கு முன்னிருந்த மனிதனை ஒரு மாதிரியாகப் பார்த்து அவனுடைய பதிலை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான் சுந்தரமூர்த்தி.

"சரி; உனக்குச் சம்மதமில்லாத இந்த துக்க சமாசாரத்தின் அந்தரங்கங்களை நானும் அறிவேன் என்பதை உனக்கு ஞாபகப்படுத்த வேண்டுமென்பதே தவிர வேறில்லை" என்று மற்ற மனிதன் சாவகாசமாகக்கூறித் தனக்கு முன்னிருந்த சுந்தரமூர்த்தியைக் கூர்ந்து கவனித்தான்.

"விசனமான அந்த சம்பவத்தை இப்பொழுதேன் ஞாபகப்படுத்துகின்றாய்? அதைப்பற்றி எனக்கொன்றும் தெரியாது" என்று சிறிது புன்னகை புரிய முயன்றான்.

"ஒரு விஷயத்தைப் பற்றிச் சிறிது ஞாபகமிருப்பது எப்பொழுதும் நலமன்றோ?" எனக் குறித்தான் நீலகன்.

"ஆ! நீ சொல்வதை நன்குணர்ந்தேன். ஆனால் இந்தக் கோணல் விஷயத்தில்மட்டும் உனக்கு யாதொரு உதவியும் செய்ய மனமற்றவனாக இருக்கிறேன். இதை விட்டுவிட்டு வேறெதையேனும் பற்றிப் பேசுவோம்." என்று சுந்தரமூர்த்தி திடமாகச் சொன்னான்.

"கோணலான விஷயமோ! சரி, கண்ணை மூடிக் கொண்டு கோணல் என்று நீயே யோசித்துக் கொள்ளு கிறதா என்ன? நானே கோணல்தான் போலிருக்கிறது" என்று கூறிய கீலகன், கறுப்புத் தடவப்பட்டிருந்த தன்னுடைய சிறிய மீசையை முறுக்கினன்.

"நான் அப்படிச் சொல்லவில்லையே."

"ஆனல் அதன் தாத்பரியம் என்ன? இன்னும் எவ்வளவு நாட்களுக்கு இவ்வித வேஷம் போட்டு இவ்வூர் ஜனங்களை ஏமாற்றிக்கொண்டு இருக்கலாம் என்று எண்ணுகின்றாய்? தினகாலம் இருவேளையும் கோவிலுக்குப் போய் வந்துவிட்டால், உன்னுடைய பழைய செயல்கள் மறைந்தா போகும்?" என்று பயமுறுத்துகிற விதமாகக் கேட்டான் கீலகன்.

"கீலக, எனது குழந்தைக்காகவேனும் இனி நான் சரியான வழியில் நடக்க எண்ணங் கொண்டிருக்கிறேன்."

"ஹா, இந்தக் கார்க்குடியில் இருக்கிற ஜனங்கள் உண்மையை—நீ யார் என்கிற உண்மையை—அறிவார்களேயானல்—"

"ஹஷ்! யாரேனும் கேட்கப்போகிறார்கள்!" என்று சொன்ன சுந்தரமூர்த்தியின் முகம் மாறுபட்டது. சந்தேகத்தால், தான் உட்கார்ந்திருந்த அறைக் கதவைப் பார்க்க அது மூடப்பட்டிருந்தமையால் சற்று தைரியங்கொண்டு "கடந்துப்போன காரியங்களைப் பற்றிப் பேசுவதில் பயனென்ன? கீலக, உன்னிடத்தில் ஒரே மொழியாகவும், கடைசி மொழியாகவும், சொல்வதென்ன வென்றால், இந்த பயங்கரமான செயலைச் செய்வதற்கு நான் பங்காளியாக—கூட்டாளியாக—இரேன், என்பதுதான்" என்றான்.

"ஹோ! ஹோ! திருச்சியின் விஷயமட்டும் மகா யோக்கியமானதோ! மேலும் சிவகுமாரன் கல்பலதாவின் மீது காதல் கொண்டதை யாரேனும் ஒருவன் ஆழ்ந்து யோசிப்பானாயின்—"

"கீலக, தயைசெய்து என்னுடைய குழந்தையின் பெயரை நமது சம்பாஷணையில் கலக்காதே: இல்லையேல் அதற்கு நீ அனுபவிக்கவேண்டி வரும்." என்று சொன்ன மனிதன், தான் உட்கார்ந்திருந்த நாற்காலியினின்றும் எழுந்து, தன்னைப் பார்க்கவந்த மனுஷ்யனைப்பயங்காட்டும் விதமாகப் பலத்த தொனியோடு "என்னைப்பற்றி எது வேண்டுமென்றாலும் சொல்! மகாபாதகன் என்றும், பசுத் தோலால் மூடப்பட்ட புலி என்றும், சுக்கிரவாரங்களில் அம்பிகை தரிசனம் செய்யாமல் இராதவனைப் போல் பாசாங்கு செய்து கொண்டிருக்கிறேன் என்றும் எனக்கே தெரியும். என்னுடைய தீச்செயல்களுக்கு நான் தண்டனை பெறுவது நியாயமேயொழிய, உலகம் அறியாத என் குழந்தையை என் குற்றங்களோடு ஏன் சேர்க்கின்றாய்? தெரிந்துக்கொண்டாயா! முகராத புஷ்பம்போலும், வண்டுண்ணாத் தேன்போலும் பரிசுத்தமுடையவள்; அவளுடைய தந்தையின் விஷயங்களொன்றையும் அவள் அறியாள்" என்று முடித்தான் சுந்தரமூர்த்தி.

"நண்பா, உனது புதல்விக்கு இப்பொழுது பதின்மூன்றாண்டாயிற்றன்றா? சென்ற வருடம் 'வஸந்த விலாசத்தில்' நடந்ததைத் தெரிந்துகொள்ளாமலா இருந்தாள்?"

இப்பொழுது பேசிய கிலகன் பருத்துத் தடித்துச் சாதாரண உயரத்திற்குக் குறைந்தே இருந்ததோடு, அவனுடைய முகத்தில்—சாதாரண மனுஷ்யர்களுக்கு யோக்கியனைப் போலும், சற்றுக் கூர்ந்து கவனிப்பவர்களுக்கு

அவனுடைய கொலைபாதகச் செயலை எளிதில் தெரியப் படுத்தக்கூடிய முகத்தில்—துடித்துக்கொண்டிருந்த மீசை, சாதாரண நிறத்தைவிட அதிகமாகக் கறுத்திருந்தமையாலும், தலையில் தோன்றும் வெளுத்த சிறு குடுமியினாலும், வர்ணம் பூசப்பட்டிருக்க வேண்டுமென்பதை எவருமே எளிதில் அறிந்து கொள்ளுவார்கள். அவன் அணிந்து கொண்டிருந்த கைச்சட்டை காற்சட்டைகளைப் பார்த்தால் சாமர்த்தியமான தையற்காரனால் அவை தைக்கப்பட்டன வென்பதை நன்கு விளங்கும்.

ஆடிமாதம் நடுப்பகலில் சூரிய வெப்பம் அதிகமாக இருந்தபோதிலும், அவ்வீடு ஒரு பூங்காவினுள் இருந்ததாலும், தடாகத்தினின்றும் வரும்காற்று அவர்கள் உட்கார்ந்திருந்த அறையின் சாளரவழியாக வீசியதாலும் அவ்வறையில் மட்டும் உஷ்ணம் அவ்வளவு அதிகமில்லை.

கார்க்குடி என்னும் கிராமம் கீழ்வேளூர் இரயில்வே ஸ்டேஷனுக்குப் பன்னிரண்டுமைல்கள் தெற்கில் உள்ளது. அந்தக் கிராமத்தின் வெகு சமீபமாக ஒடும் அழகிய ஓடையில் சதாகாலமும் நன்னீர் பிரவகித்துச் சென்றபடியேயிருக்கும். நாற்புறமும் கழனிகளால் சூழப்பட்டுள்ள அக்கிராமத்தில் சிலவேளாளர் வீடுகளும், ஓர் அந்தணர் கிரகமும், பிள்ளை வீடென்ற ஒருதனவான் வீடுமுண்டு. அமைதி என்பதின் பொருளே அறியாத நகர வாசிகளாகிய நாம் அக்கிராமத்தில் அமைதி குடிகொண் டிருந்ததென்றால் அநேகர் 'அத்தகைய ஓர் அபூர்வவஸ்து பூலோகத்தில் இருக்கின்றதா?' என்றே சந்தேகிப்பார்கள். அப்படிப் பட்டவர்கள் அந்த கிராமத்திற்குச் சென்றாலன்றி அதைப் பற்றி ஒருவிதமான சித்தாந்தத்திற்கு வருவது இயலாத காரியம். கிராமம் சிறியதேயாயினும் இடிந்த ஒரு பெரு

மாள் சந்நிதியும், அழகிய விக்நேஸ்வரர் ஆலயமும், சிவன் கோவிலும், ஸ்நானபானுதிகளுக்கு யோக்கியமான இரண்டு தடாகங்களும் உண்டு. வெகுகாலமாக அங்கு வசிப்பவர்களுக்கு மட்டும் அக்கிராமம் அழகற்றதாகத் தோன்றுமே யொழிய, பட்டணங்களில்—நாகரீகம் என்னும் போர்வையால் மறைக்கப்பட்ட நாகமயமான நகரங்களில்—வசித்து வரும் மனிதர்களுக்கு அது வெகு இரமணீயமாகவே தோன்றும்.

சுந்தரமூர்த்தி அல்லது அழகநாதன் என்பவன் கார்க்குடியில் தன் ஏகபுத்திரியாகிய கல்பலதாவுடன் வசித்து வந்தான். அவனுடைய பூர்வீக விருத்தாந்தம் எப்படிப்பட்டதாக இருந்திருப்பினும் சரியே, அக்கிராமத்திலுள்ளவர்கள் அவனை ஒரு பிரபுவென்றும், யோக்கியனென்றும், தெய்வபக்தி யுள்ளவனென்றும், எண்ணுமாறு நடித்து வந்தான். அதி சமீபத்திலிருக்கிற நாகபட்டணத்திற்குப் போனவன் அல்லன். அண்டை அயலார்களையும் அவன் அறிந்திலன். வெளியில் போவதென்றால் தனியாகவே போய் வருவான். அவன் பிறரை அறியானே யொழிய அவனைத் தெரியாதவர் அக்கிராமத்தில் யாருமிலர்.

எந்நேரமும் புஸ்தகத்தையே தனக்குத் துணையாகக் கொள்பவன்.

சுந்தரமூர்த்தியின் நடத்தை அந்தக் கிராமத்தவர்களுக்கு வியக்கத்தக்கதாகவே இருந்தது. அவனைப் பற்றிய இரகசியமேதேனும் தெரியவேண்டுமென்று அநேகர் முயன்றனர். வருஷங்கள் மூன்றாகியும் அவ்வூரார் கொண்ட எண்ணம் கைகூடிற்றிலது. எவ்வித தருமம் செய்வதிலும் அவன் பெயரே முதலில் நிற்கும். அவன் மாரிகாலத்தில் சின்னாட்கள் வெளியில் செல்லுவது இரகசியமான வியா

பாரங்களை முன்னிட்டு என்றாவது, அல்லது அவனுடைய ஜீவனோபாயம் பிறரால் அறியமுடியாத அவ்வளவு இரகசியமான தென்றாவது யாரும் சந்தேகித்தார்களிலர்.

தன்னுடைய சிருங்காரமான வீட்டின் புஸ்தக அறையில் போடப்பட்டிருந்த புதிய மேஜையின்மீது சாய்ந்த வண்ணம், சிங்கப்பூரில் இருந்து தன்னைக் காணவந்த தன் நேயனை உற்று நோக்கிக்கொண்டு நின்ற சுந்தர மூர்த்தியின் நிலைமையிலிருந்து, அவர் பூர்வீகம் கப்பல் மாலுமியாக இருந்திருக்கவேண்டுமென்பதை உலகானுபவமுள்ள யாவரும் அறிந்து கொள்ளலாம்—உண்மையாகவே அவன் இராஜ சக்கரவர்த்தியின் பிரதான சண்டைக் கப்பலொன்றிற்கு தளகர்த்தனாக இருந்தவன். அவ்வுத்தியோகத்தை விட்டு நீங்கித் தேசாடனம் சென்று, திரும்பி இருக்கிறான். அவ்வளவு பெரிய உத்தியோகத்திலிருந்தவன் எத்தொழிலையும் விட்டு கார்க்குடி கிராமத்தில் இருப்பதற்குக் காரணம் யாதோவெனில், வயதை யடைந்துள்ள தனது புதல்வி—பூலோகத்தில் தனக்கு உற்றார் உறவினர் எல்லோருமாக இருக்கிற தன் ஒரேபுதல்வி—தன்னை யோக்கியனென்றும், பிரபுவென்றும் எண்ணவேண்டும் என்னும் எண்ணத்தையன்றி வேறொன்று மின்று.

அழகநாதன், தான் ஒரு பெரிய இராணுவ வீரனாக மரியாதையும் கௌரவதையுமான உத்தியோகத்தை வகித்திருந்ததற்கு ஞாபகார்த்தம் தன்புத்திரிகா இரத்தினமான கல்பலதாவே. அவள் தன்னுடைய உண்மையான செயல்களை எங்கு தெரிந்துகொண்டு விடுவாளோ வென்று ஐயுற்று, தன்னால் கூடியவரையில் அவளைப் பிறருடன் பழக விடாதிருந்தான். அவனுடைய தீச்செயல்களுக்கு அவன் தான் காரணனோ வெனின்? அன்று. அச்செயல்

களை செய்தே தீரும்படியாக வந்து நேர்ந்தது. ஹா! ஆமாம், அவனுடைய சரித்திரம் மிகக்கைப்புள்ளதே. அவனுடைய புராதன இரகசியங்களைக் கல்பலதா அறிந்து கொள்ளுமுன் தன் உயிரையே மாய்த்துக் கொள்ளத் துணிந்தவன். அவன்மீது விஸ்வாசம் பாராட்டுபவள் அவன்புதல்வியே. அவனுக்கு மரியாதைசெய்பவள் அவன் புத்திரியே. அவனை இலக்ஷியம் செய்பவள் அவன் குமாரியே. அவனுக்கு அவளையன்றி இப்புவியில் சொந்தமாய் வேறொன்றிருப்பதாக நினைத்திலன். தன் புதல்வியின் நிமித்தமே தனது பழைய பாதகச் செயல்களை விட்டு யோக்கியனாக முயல்கின்றான்.

அவளுடைய குற்றமற்ற வார்த்தையைக்கேட்கும் சுந்தரமூர்த்திக்கு பழைய ஞாபகங்கள்வர தன்னையே நொந்து கொள்வான். ஏனெனில் அவனுடைய அடாத செயல்கள் அவனையே ஹிம்சிக்கலாயின. ஒருமனிதன், தான் அதுவரையில் செய்துவந்த குற்றங்களைக் குற்றமென்று அறிந்து சரியான வழியில் நடக்கமுயலுகையில் குற்றமற்ற நிஷ்களங்கமான ஹிருதயமுள்ளவர்களைக் கண்டு பேசும்போது அவர்களோடு பேசவும் யோக்கியமற்றவனென்று தன்னையே நொந்து கொள்ளுவான். அப்படிப் பட்டவர்களுக்கு யாதொரு தண்டனையும் அவசியமின்று. அவ்விதமாக எவ்வளவு பெயர்கள் தற்கொலை செய்துகொண்டு மாண்டிருக்கின்றனர்! மனிதர்கள் வசிக்கும் நாட்டை விட்டு காட்டிற்குச் சென்றோர் எத்தனை பெயர்! அலைகடல்பட்டு ஆவி நீத்தார் எவ்வளவு பெயர்! ஆகையால் சுந்தரமூர்த்தி தன் குற்றமற்றபெண்ணின் கபடமற்ற சொற்களைக் கேட்டுத் தன்னையே—கபட வேஷதாரியாகிய தன்னையே—நொந்துகொண்டது வியக்கற்பாலதன்று.

கிலகன் சொன்னபடி நடந்தானேயாயின் உண்மை யாகவே இருபதினாயிரம் பவுன் இலாபம் அடைய வழி உண்டு என்பதைச் சுந்தரமூர்த்தி அறிந்திருந்தானெனி னுந் தன் புத்திரியின் நிமித்தம் கிலகன் சொன்ன சொற் கிளை இலக்ஷியம் செய்தானில்லை. தன் பழைய வழக்கங் களினின்றும் திருந்த வேண்டுவதை முக்கியமாகக் கொண்டு கார்க்குடி வந்திருக்கிறவன், தோன்றி அழியும் செல்வத்தை ஒரு பொருட்படுத்தாதது ஆச்சரியமன்றே? சுந்தரமூர்த்தி எவ்வளவு நல்லவனாவதற்கு விரும்பி யிருந்த போதிலும் அவனுடைய பழைய செயல்கள், ஞாபகமாகிய விவரணஜாபிதாவில் வந்து கொண்டே யிருந்தன. ஹா! எவ்வளவு கொள்ளை! பணம் பிடுங்கும்படியான வழி எவ்வ ளவு! எவ்வளவு கோவில் சொத்துக்கள்! பணத்தையே தெய்வமாகக்கொண்டு அகம்பாவம் பிடித்திருந்த எத்தனை பெயர் அனாதைகளைப்போ லாயினர்! ஆஹா! இவ்வளவும் சுந்தரமூர்த்தியின் செயல்களல்லவா! அவைகள் நிமிஷத் திற் கோர்முறை ஞாபகத்திற்கு வந்தமையால் தன்னையே திருத்தமுற்பட்டுள்ளான் சுந்தரமூர்த்தி.

இந்தச் சமயத்தில் கிலகனுடைய கிலக புத்திகளும் கோணலான யோசனைகளும் இவனிடத்திலா பயன்படும்? இவைகளெல்லாம் பகவத்சங்கற்பம் என்றே சொல்ல வேண்டும். கெட்டவனாக இருக்குமொருவன் நல்லவனாகத் திரும்புகையில், அவன் மேலும்மேலும் கெடவே அதி சுலபமான மார்க்கங்கள் ஏற்படும். அவைகளே அப் பொழுது நல்லவைகளாகவும் தோன்றும். ஆயினும் அவைகளை ஒரே மனத்தோடு வெறுத்தானாயின் அவன் பெறுவது இன்பம். மனத்தின்படியே நடப்பானாயின் முன்னையினும் பன்மடங்கு கேடுகெட்டு கொலைகூடச்

செய்யத் துணிந்து விடுவான். பிறகு அவன்கதி "அதோ கதிதான்" நிற்க.

தனது சொற்படி சுந்தரமூர்த்தி வராமையால் சிவகுமாரன் இறந்ததையும் அதனால் தங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தையும்பற்றிப் பேசுபவன்போல இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் சமயோஜித புத்தியால் பேச்சைத் திருப்பினான் கிலகன்.

ஓர் யுவகன்—வெகு சீக்கிரத்தில் அதிஉன்னத பதவியை அடையப் போகும் யுவகன்—இறந்தது உண்மையே. கிலகனும் சுந்தரமூர்த்தியும் இப்பொழுது சேரும் வரையில் அப்படு கொலையில் சுந்தரமூர்த்தியின் சம்பந்தம் யாராலும் சந்தேகிக்கப்படவில்லை. ஆனால் கிலகன் சொன்ன நிமிஷம் முதல் உண்மை எவ்விதத்திலோ வெளியாகிவிட்டதென்றும், தன்னுடைய நிலைமை பரிதபிக்கும்படியாயதென்றும் யோசித்தான் சுந்தரமூர்த்தி. சுந்தரமூர்த்தி ஆச்சரியத்தால் ஊமை போலிருந்தான். கிலகன் உண்மையை அறிந்தவிதம் எப்படி? உண்மையாகவே இதைப்பற்றிய எந்த விஷயத்தை அறிந்துள்ளான்? எவ்வளவு உண்மை அறிந்திருக்கிறான்? என்ற கேள்விகளைத் தானே கேட்டுக்கொண்டிருந்தான் சுந்தரமூர்த்தி பற்களைக் கடித்துக்கொண்டு "இந்த அபவாதமான வார்த்தைகள் வெளியில் வருவதென்பதே தகாது. இவை அடங்கி இருத்தலல்லவோ நம்முடையதேசத்தவர்களின் க்ஷேமத்திற்குக் காரணம்!" என்று தன்னில் சொல்லிக்கொண்டான்.

ஆனால் கிலகனுக்கு அதன் உண்மை தெரியாமலிருக்கவில்லை. தான் உத்தேசித்து வந்த நவீன காரியத்திற்குச்

சுந்தரமூர்த்தியை உதவியாக இருக்கவே, இவனைப் பய முறுத்துகிறான்.

சுந்தரமூர்த்தி வெகுநேரம் வரையில் பேசாமலிருந்து சாவதானமாக "கல்பலதா ஏதோ தெரிந்து கொண்டதா கச் சந்தேகிக்கிறதற்குக் காரணம் யாது?" என்று கேட்க,

"காரணமா!" என்று கேட்டு "ஏன் அந்த வங்காளி யுவகன் வந்ததும், சாயங்காலம் தோட்டத்தின் வழியே வெளியே சென்றதும், அவளுக்குத் தெரியாதா? உனது வரும்படி இன்னவிதம் என்று தெரிந்துகொள்ளாமலா யிருக்கின்றாள்?" என்று முடித்தான் கிலகன்.

"அவள் அந்த வங்காளியை அறியாள். ஓ, அந்தப் பையன் ஹிந்தியில் அல்லவா பேசினான். ஹா! நான் ஏன் அவளை அங்கு கூட்டிச் சென்றேன். நான் ஒரு முட்டாள். எப்பொழுதும்போல கார்க்குடியில் விட்டுப் போயிருந் தால் இவ்விதம் ஆயிராதே" என்று தனக்குள் பேசுபவன் போல் மெல்லிய குரலாய் மறுமொழி பகர்ந்தான் சுந்தர மூர்த்தி.

"சில சமயங்களில் நாமெல்லோரும் மூடமதிகளா கவே ஆகின்றோம்" என்று கூறிய கிலகன் மேஜையின்மீது இருந்த சுருட்டு டப்பியைத் திறந்து ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக்கொண்டு "சுந்தரமூர்த்தி, ஆனால் உனது இரகசியங்களை அவளிடமிருந்து இன்னும் ஒளித்துவைப் பது பயனற்ற காரியம் என்று மாத்திரம் நான் அறிவேன். ஏனெனில் அவள் குழந்தையல்லள்" என முடித்தான்.

"ஒருபொழுதும் அவள் தெரிந்துகொள்ளக்கூடாது!" என்று அடித் தொண்டையோடு கூவி "தெய்வ சாக்ஷி யாகச் சொல்லுகிறேன். அவள் என்னுடைய அவமானத்

தைத் தெரிந்து கொள்ளவே கூடாது!" என்று பின்னும் பலத்த சப்தமாகக் கூறினன்.

"அப்படியானல், நான்சொன்ன சங்கதிக்கு வருவாயாயின்—பணம்—ஏராளமான செல்வத்தை யடைவாய்."

"இல்லை. நான்—நான் அந்த விஷயத்தில் கலக்க முடியாதென்று நிச்சயமாகக் கூறுகிறேன். என் உண்மையை அவள் அறிந்த பின்னர் அவளை நான் சந்திக்க மனமொப்பேன். ஹா! அவளுடைய தாயார் எவ்வளவு பரிசுத்தமான ஹிருதயத்தை யுடையவள், நானே—"

"ஆமாம், அவைகள் யாவும் நான் அறிந்தவைதானே. உனது மணத்தின் கேடுபாடுகள் எனக்கு நன்கு தெரியும். ஆனல், அவைகள் பலவருஷங்களுக்கு முன்னரன்ற? பழைய காரியங்கள் அப்படியே புதைந்து போய்விட்டனவே; இன்னுமேன் அவைகளைப்பற்றிப் பேசுகிறய். நடக்கப்போகிறவைகளின் மீதல்லவா நோக்க மிருக்கவேண்டும். சுந்தரமூர்த்தி, நான் சொல்லும் புத்தியைச் சாவதானமாகக்கேள். உனது புதல்வி உன்னுடைய இரகசியங்களை அறிந்துவிடுவாள் என்றும் அவளுக்கு நீ பயப்படுகிறய் என்றும் வீண் பாசாங்கு செய்வதை முற்றிலும் நீக்கிவிடு. எப்படி யிருந்தபோதிலும் அவள் உண்மையை அறியாமற் போகாள். உனக்குக் கிடைக்கப்போகும் அளவற்ற செல்வத்தைக் கெடுக்கக்குறுக்கிடாள் என்பதை நீயும் அறிந்தே இருக்கிறய். உனக்கு வேண்டியது பணந்தானே. அதை ஏன் நீ மறுக்கிறய்" என்று வெகு சாவதானமாகக் கூறினன் கீலகன்.

"நான் சொல்ல வேண்டுவது ஏற்கனவே சொல்லிவிட்டேன்" என்று பலவாக்கியங்களுக்கு ஒரே வாக்கியமாகப் பதிலளித்தான் மற்றவன்.

சிறிது நேரம் வரையில், பக்கத்துத் தோட்டத்தில் இலைகள் அசையும் சப்தத்தையும், அவ்வறையினுள் ஈக்கள் பறக்கும் சப்தத்தையும், சுவரில் தொங்கவிடப்பட்டிருந்த பழைய கடிகாரத்தின் "டிக், டிக்," என்ற ஓசையையும் தவிர வேறு சப்தமின்றி இருந்தது.

"யோசித்துப்பார்," என்று கடைசியாகக் கிலகன் பேச ஆரம்பித்தான்.

மறுபடியும் மெல்லிய குரலாய் "திருச்சியின்விஷயத்திலோர் மூலை உனக்கும் சொந்தமான தென்பதை மறுமுறையும் உனக்கு ஞாபகப்படுத்துகிறேன். அந்த விஷயம் வெளிவருமாயின் நானும் எனது நேயர்களும் உண்மையை ருசுப்படுத்தத் தயாராக இருக்கிறோம்," என்றான் கிலகன்.

"என்னை இப்பொழுது செய்யச்சொல்லும் வேலைக்குப்பிரதியாக நீங்கள் மௌனம் சாதிப்பீர்களோ?" என்று சந்தேகத்துடனும் ஆச்சரியத்துடனும் கேட்டான் சுந்தரமூர்த்தி. கிலகன், "ஆமாம்" என்று சொல்லும் விதமாகத்தலை அசைத்தான்.

இந்த யுக்திகளைகேட்ட சுந்தரமூர்த்தியின் முகம் மாறுபட்டது. அதரங்கள் துடித்தன; கிலகன் தன்னைப் பயமுறுத்தும் விதத்தை நினைக்குந் தோறும் நினைக்குந் தோறும் ஆற்றொணுக்கோபம் மூண்டவனுயினுன்.

"கிலக, நீ என்னை எதுவேண்டு மென்றாலும் செய்யலாம்; என்னை டாணுக்காரர்களிடம் கொடு—உண்மையை வெளியிடு—ஆனால் என்னுடைய பதில் மட்டும் மாருது. உனக்கு எந்தவிதமான உதவியும் செய்யேன்" என்று ஸ்திரமாகக் கூறினுன்.

" ஆயின் தண்டனைஅடையத் தயாராகவா இருக்கிருய்?"

" அது உனக்குச் சம்மதமானல்— சரி."

" பிறகு உன்னுடைய பெண்?"

" அது என்னுடைய சொந்தவேலை."

" சரி ; உன்னுடைய இஷ்டம்போல்-சரி." என்று சொல்லிய கிலகன் தனது கைப்பிரம்பை எடுத்துக் கொண்டு அதி விரைவாக வெளியேசென்று மறைந்தான்.

சுந்தரமூர்த்தியோ ஒரு சிலைபோல் நின்ருன். அவனுடைய இரகசியம் வெளியாயிற்று. யோசித்துச் சட்டென்று வெளியேபோய் கிலகனைக்கூப்பிடவும் எண்ணினன். மறுநிமிஷத்தில் மனேசமாதானம் செய்து கொண்டு நின்றுவிட்டான். தனக்கு அந்தரங்கமாக இருந்து மோசம் செய்தநேசனைக்குறித்து இன்னது யோசிப்பதென்பது தெரியாமல் தயங்கினன்.

ஆமாம்; இத்தகையவிஷயம் இப்பொழுது உலகத்தில் சர்வசாதாரணமாக இருக்கிறது ; இளையசகோதரனை ஏமாற்ற எண்ணங்கொண்ட மூத்தவன், சொத்துகளை எல்லாம் 'பெந்தகமாக' தனது அந்தரங்க நண்பனுக்கு எழுதி வைத்து சகோதரனை மோசம் செய்தபிறகு தன்சொத்துகளைப்பற்றித் தனது நேயனைக்கேட்க அவன் ஒன்றுமில்லை என்றும் தான் அவனிடத்தில் விலைகொடுத்து வாங்கியவைகளை எப்படித்திருப்பிக் கொடுப்பதென்றும் சொல்லிவிடுகிருன். அந்த திரவியத்தை தன்சகோதரன் அனுபவிக்கக் கூடாதென்று இவன் நினைக்கிருன். இவன் அனுபவிக்கக் கூடாதென்பது தெய்வசம்மதம்போலும். தன்தந்தை தன்னுடைய சகோதரிக்கு ஸ்ரீதனமாகக்கொடுத்த நிலங்களைப்

பிறருக்கு விற்றுவிட்டு தன் உடன் பிறந்தவனை மோசம் செய்பவர் எவ்வளவு பெயர்கள் சகோதரிசகோதர்களுள்ளே இத்தன்மையான மோசங்கள் நடக்கின்றனவெனின் நேயர்களுள் நடக்கக் கேட்பானேன். ஆதல் பற்றி கீலகன் சுந்தரமூர்த்தியைக் காட்டிக்கொடுக்க முயன்றானென்பது அதிக ஆச்சரியமன்று.

அழகநாதன் என்னும் பெயரையும், இன்னும் பல பெயர்களையுமுடைய சுந்தரமூர்த்தி, ஆகாயத்தைப் பார்த்தவண்ணம் தன்னைக் காப்பாற்றுமாறு பன்முறை பகவானைப்பணிந்தபடியே நின்றான்.

---

## II
## இறந்து கிடக்கும் அவனே

அன்றிரவு சுந்தரமூர்த்தி சாப்பாட்டு அறையில் தனியே .போஜனம் செய்துகொண்டிருந்தான். அவனுடைய புதல்வி கல்பலதா நாகையில் தன்னுடைய சிநேகிதியின் இல்லமேகி யிருந்தாள். அன்று அவள் அங்கில்லாதிருந்தது சுந்தரமூர்த்திக்கு இரட்டிப்பு சந்தோஷத்தைக் கொடுத்தது. ஏனெனில் பின்வரப் போகின்றவைகளைப் பற்றி தீர்க்காலோசனை செய்யத் தனியே இருக்க மிக்க ஆவல் கொண்டிருந்தான். அப்பொழுது செய்யும் போஜனமே அவ்வீட்டில் கடைசியாக அவன் செய்யும் போஜனமென வெண்ணினான். இரண்டு வழிகளையன்றி சுந்தரமூர்த்திக்கு வேறொன்று மிலது. ஒன்று தனக்குச் சொந்தமான பொருள்களையும் தன் உயிர்க்கு உயிரான கல்பலதாவையும் விட்டு விட்டு ஓடுவதும், மற்றொன்று போலீசார் கைகளில் படும் தண்டனையுமே.

அவனைக் காணவந்த மனிதன் திடீரென்று சென்றவுடன் அவனுடைய சந்தோஷமான புன்சிரிப்புடன் கூடிய முகம் இருளடைந்து விட்டது. கபோலங்கள் வெளுத்தன. அச்சமயம் அவனைக்கண்ட யாவரும், பயங்கொள்ளும் வண்ணமிருந்தான். இராப்போஜனமானதும் வெற்றிலையைக் கையிலெடுத்து மடித்து வாயிலிட்டு மென்றுகொண்டே தனக்கெதிரில் தோன்றிய இருளடைந்த பிரதேசத்தைப் பார்த்துத் தனக்கு சித்திக்கப் போகும் பாக்கியம் இவ்விதம் தனக்கு முன் தோன்றும் அந்தகாரத்தைப்போலவே இருக்குமென்று யூகித்து அறிந்து கொண்டான்

அவனுடைய செயல்களின்—அபவாதமும் அக்கிரமுமானசெயல்களின்-முடிவு வெகு சமீபித்து விட்டது உண்மைவெளியாகி விட்டது. அச்சமயத்தில் அனேக விதமான எண்ணங்கள் ஞாபகத்திற்கு வந்தன. தாம் அதுவரையில் செய்தகுற்றங்களை எல்லாம் பாபமென உணர்ந்து, சரியானவழியில்நடக்க முயன்று, நடந்தும் வருகையில் அதன் பலனாகத் தன்னுடைய அந்தரங்கம் வெளியாவதென்றால் சாதாரணமான மனத்தினர் உடனே தாம்கொண்ட சித்தாந்தத்தினின்றும் பிறழ்ந்து, தீயமார்க்கத்தையே பின் பற்றுவார்கள்; ஆனால் சுந்தரமூர்த்தியோவெனில் — திடமனத்தினனாகிய சுந்தர மூர்த்தியோவெனில்—அவைகளை இலக்ஷியம்செய்யவில்லை. உண்மை —ஹா! இறந்த மனிதனின் உண்மை—வெளிவருமேயானால் ஊர்ஜனங்களின் உணர்ச்சிஎவ்விதமிருக்கும்! தனக்கு அந்தரங்கநேயனாக இருந்து, தன்னையே வெளிக்காட்டிவிட பிரயத்தனங்கள் செய்து கொண்டிருக்கும் கிலகன் மீது கெட்ட அபிப்பிராயமாக முதலில் நினைத்தானேனும்,

ஆழ்ந்து யோசித்தபிறகு "அவன் செய்தது இரண்டு விதமாக அவனுக்கு நன்மையைச் செய்கின்றது—ஒன்று தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டும் மற்றொன்று இறந்த பெரிய மனிதனுகிய சிவகுமாரனின் வர்க்கத்தவர்களுடைய தயவைச் சம்பாதிக்கும் பொருட்டுமே.—தற்காப்பு என்பது ஜீவ சிருஷ்டிக்கே முதற் குறியாக இருப்பதுபற்றி, தான் பத்திரமாக இருக்கும் மார்க்கத்தைக் கிலகன் செய்துகொண்டது மிகவும் சரியான மார்க்கமே—" என்று தானே யோசித்து முடிவிற்கு வந்தான், சுந்தரமூர்த்தி.

விசித்திரமாக இறந்த மனிதனின் மரணத்தைப்பற்றி ஆராய்வோமென்ருலோ இயலாத காரியமாக இருக்கிறது. அவன் இறந்தது சாதாரணமானதென்று வைத்திய சாஸ்திரம் சரியாக ருசுப்படுத்தி இருக்க, மறுபடியும் மேல் அதிகாரிகள் அதை விசாரணைக்குக் கொண்டுவந்து கொலை தான் என்று எவ்விதம் ஸ்திரப்படுத்துவார்கள்? இதுபற்றியமட்டில் பத்திரிகைகளின் அபிப்பிராயமும், பொது ஜனங்களின் இஷ்டமும், இராஜாங்க சம்பந்தமான மனிதர்களின் நோக்கமும் இவைபோன்ற பலவும் அறியப்பட வேண்டும்.

சுந்தரமூர்த்தி தன் பழைய நேயர்களை விட்டு விலகி இருக்கின்றமையால் இவனைக் காட்டிக்கொடுக்க அவர்கள் முயன்றிருக்கின்றனர். ஓடிவிடலாமென்று எண்ணினுல் எங்கோடுவது? எங்கு ஒளித்துக்கொண்டால் ஜாக்கிரதையாக இருக்கக்கூடும்? இவனுடைய விரோதிகள்—பழைய நேயர்களாக இருந்த தற்போதிய விரோதிகள்—இவன் இப் பூவுலகின் எக்கோடியில் சென்றபோதிலும் விடப்போகிறவர்களாகக் காணப்படவில்லை. ஆனுல் அவ

னுடையவிரோதிகளின் கைகளினின்றும் தப்புவதற்கு வழி இல்லையோவெனின்—உண்டு—அதாவது மரணம். தனது பகைவர்களுக்குப் பயந்து மரணத்தை நினைத்தபொழுது ஒருவிதமான அசட்டுச் சிரிப்பு அவனை யறியாமலே அவனிடத்தில் தோன்றியது.

மெதுவான காற்று புஷ்பங்களின் மணத்துடன் வீசத் தலைப்பட்டது. என்ன மனோஹரமான பிரதேசம்! சுந்தரமூர்த்தியின் புதல்வியும், பரிசுத்த யுவதீரத்தினமு மாகிய கல்பலதாவினுல் அவ்விடம் மிகவும் விரும்பப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட இடத்தை விட்டுப் போகவேண்டும்; புதல்வியையும் விட்டுப் பிரியவேண்டும்; தன் உயிரையும் நீக்கவேண்டும்; அந்த சந்தர்ப்பத்தில் மனிதனின் மனோதருமமும் யாங்ஙன மிருக்குமோ வென்பதை சுந்தரமூர்த்தியை யன்றி பிறரால் இயம்பமுடியாது.

இவ்விதமாகச் சுந்தரமூர்த்தி யோசித்துக் கொண்டிருக்கையில் சதாசிவபண்டாரம் வந்து சேர்ந்தார். சுந்தரமூர்த்தி எழுந்து "வரவேண்டும்" என்று உள்ளே அழைத்துப்போக நடுக்கூடத்தில் இருவரும் இரண்டு சோபாக்களின் மீது உட்கார்ந்து கொண்டனர். பண்டாரத்தை வரும்படி சுந்தரமூர்த்தி ஏற்கனவே எழுதி இருந்தான்.

"இங்கு வரமுடியாமற் போமோ என்ற சந்தேகத்துடன் இருந்தேன். ஒரு அவசரமான காரியமாகப் போயிருந்தேன்" என்றூர் பண்டாரம்.

"ஆயின் பிள்ளையவர்கள் வைத்த பாட்டுக் கச்சேரிக்குப் போகவில்லையோ?" சற்று யோசித்து, "அவைகளுக்கெல்லாம் தாங்கள் போகும் வாடிக்கை இல்லைபோலிருக்கிறது" என்றுன் சுந்தரமூர்த்தி.

"போகாமலென்ன? வலிவலத்தில் தனவான் வீட்டுப் பெருமாட்டி ஒருத்திக்கு உடம்பு அசௌக்கியமென்று கேள்விப் பட்டதால் அங்கு போயிருந்தேன்" என்றார் பண்டாரம்.

"தங்களுக்கு வைத்தியம் தெரியும் என்பதை இது வரையில் நான் அறிந்தவனல்லன்!" என்று ஆச்சரியமாகப் பார்த்தான், சுந்தரமூர்த்தி.

"ஏதோ கொஞ்சம் தெரியும்" அதைப்பற்றி அதிகம் பேச இஷ்டமில்லாமல், "தங்கள் குமாரத்தி எங்கே காணோம்?" என்று வினவினார்.

"கல்பலதா, நாகைக்குப் போயிருக்கிறாள். நாளைக்கு வருவாள்" என்று மறுமொழிபுகன்றான். சுந்தரமூர்த்தியின் மனத்தில் உதிக்கும் எண்ணங்களையாவது, அவன் மனம் உதவிக்காகப்படும் பாட்டையாவது, சதாசிவபண்டாரம் அறிந்திலர். ஆனால், சுந்தரமூர்த்தி பண்டாரத்துடன் பூலோக விஷயமாக வெகுநேரம் வரையில் பேசிக்கொண்டிருந்தான். பேசிக்கொண்டிருக்கையிலேயே அவனையறியாமலே அவன் மனத்தில் ஓர் எண்ணம் உதித்தது. அதாவது அவனுடைய இரகசியங்களைக் காப்பாற்றி வைக்க அந்தப் பண்டாரமே தகுந்தவர் என்று தோன்றிற்று. தன்னுடைய அவமானத்தை அவரிடம் சொல்ல எப்படி மனம் துணிவான்? சந்திர வெளிச்சம் பரவ ஆரம்பித்தது. சற்று நேரம் இருவரும் மௌனம் சாதித்தனர். பிறகு சுந்தரமூர்த்தி எழுந்துபோய் அவர்கள் உட்கார்ந்திருந்த நடுக்கூடத்தின் இரண்டு கதவுகளையும் தாளிட்டு வந்து தன்னுடைய பழைய ஸ்தானத்தையடைந்தான்.

"பண்டாரத்தையா," என்று கூவியபின் சற்று யோசித்து "தங்களிடத்தில் ஒரு விஷயத்தைப்பற்றிப்

பேசவேண்டும். அதில் தங்களுடைய யுக்தியைச் சகாயம் செய்ய வேண்டுகிறேன்—ஆனால் விஷயம் மகா இரகசிய மானது. சொல்லலாமென்றால் பயப்படுகிறேன்" என்று கூறி முடித்தான்.

"எதன் நிமித்தம் பயப்படுகிறீர்கள்?" என்று அவர் சுந்தரமூர்த்தியின் வார்த்தையால் சந்தேகப்பட்டு வின வினார்.

"நான்மேலே சங்கதிகளைப் பேசவேண்டுமானால் ஓர் உண்மையை—என்னைப்பற்றிய ஓர் அவமானமான உண் மையைத்-தங்களுக்குத் தெரியப்படுத்தவேண்டியது அவ சியம். தாங்கள் இவ்விஷயத்தை அதிக இரகசியமாகக் காப்பாற்றவேண்டும்" என்று வேண்டினான்.

"எவ்விதமான உண்மையைப்புகன்ற போதிலும், அதை மந்திரத்தைப்போல் இரகசியமாக வைத்துக் கொள்ளுவேன். இதில் எவ்விதமான சந்தேகமும் கொள் ளாதீர்கள்" என்று அமைதியாகப் பதிலளித்தார். "இஃ துண்மையா?" என்று சந்தேகமாகக் கேட்டான். "ஆமாம் உண்மையே!" என்று உறுதியாகச் சொன்னார். உடனே சுந்தரமூர்த்தி தன்னுடைய கதையை—கர்ணகடூர மான கதையை, இதுவரையில் எந்த மனிதன் வாயிலிருந் தும் வெளிவராத கதையை, கேட்ட மாத்திரத்தில் மனம் நடுநடுங்கும்படியான கதையை-சுருக்கமாகச் சொன்னான்.

"எனக்கு மன்னிப்பு என்பது பகவான் கொடுப் பாரா?" என்று கதறி "இதைத் தங்களிடத்தில் தெரியப் படுத்தியதற்குக் காரணம் யாதெனில்; நான் போனபிறகு எனது குழந்தையைத் தாங்களே காப்பாற்ற வேண்டுவ தோடு அவளுடைய தகப்பனார் இன்னவிதமான மனிதன் என்று அவள் தெரிந்து கொள்ளாமல் இருக்கட்டுமென்று

தான். பணத்தைப் பற்றியோவென்ருல் அதைப்பற்றிய கவலை அவனுக்கொன்றும் இல்லை. தனம் எதேஷ்டமாக இருக்கிறது" என்று முடித்தான்.

"சுந்தரமூர்த்திபிள்ளையே!" என்று கூவித் தனது கரத்தை அவனுடைய தோளின்மீது வைத்து "நான் இந்தப் பதவியை அடைந்திருந்தபோதிலும், முற்காலத்தில் பாபரஹிதமானவனென்று எண்ணுதீர்கள். பூலோகத்தில் பாபம் செய்யாத மனிதர்களே கிடையாதென்பது என்னுடைய சித்தாந்தம். தாங்கள் பகவானை மன்னிப்புக் கேட்கிறீர்கள். பரம கருணநிதியாகிய கடவுள் தங்களை மன்னிப்பார் என்றே எண்ணுகிறேன். அவர் நினைத்தால் ஆகாத காரியமும் உண்டோ?" என்று கூறிச் சமாதானம் செய்தார் பண்டாரம்.

"எனக்குத் தண்டனை இல்லாமற் போகவேண்டுமென்பதன்று. நான் தண்டனையை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். தங்களைப் போலுள்ள புண்ணியவான்களுடனும், ஆசாரசீலர்களுடனும் நான்பேசவும்யோக்கியமற்றவனே. என்னைப்பற்றி நான்சிறிதும் கவலைப்படவில்லை. என் அருந்தவப்புதல்வியை நான் உள்ளன்புடன் நேசிக்கின்றமையால் அவளை நான் போனபிறகு சௌக்கியமாகத் தங்கள் மனைவி போன்றவர்களின் ஆதரணையில் வைக்கவேண்டுமென்பதே என் இஷ்டம். தங்களைக் கண்டவுடன் அக்குறையும் நீங்கிற்று. அவள் என்னையும் மறக்கவேண்டும்—நான் இன்னவிதமான நடத்தையை யுடையவன் என்பதையும் மறக்கவேண்டும்—" என்று துக்கம் மென்னியைப் பிடிக்கப் பேசினுன்.

"போதும்" என்று சொல்லிய பண்டாரத்துடன் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தான் சுந்தரமூர்த்தி.

அன்றிரவு தன்னுடைய அறையில் அங்கு மிங்கும் உலாவிக் கொண்டிருந்த சதாசிவ பண்டாரத்தின் முகத்தில் பிரதி பலித்த கோபாவேசத்தையும், ஒவ்வோர் வார்த்தையாக வெளிவந்த சொற்களையும் சுந்தரமூர்த்தி கவனித்திருப்பானேல் தன்னுடைய இரகசியங்களை அவரிடத்தில் வெளியிட்டது பிசகு என்பதை நன்குணர்ந்திருப்பான். அமைதியும் அன்புமே குடிகொண்டிருந்த அவருடைய முகத்தில் கோபத்துடன் கலந்த ஒரு விதமான சிரிப்புடன், "அவனுடைய குரல்! அதை நான் ஏன் முன்னரே அறியாமற் போயினேன்? ஆனல் இப்பொழுது உண்மையை—எவரும் எதிர்பாராத ஆச்சரியமான உண்மையை அறிந்தேன்," என்று வாய்விட்டலறினர்.

மறுநாள் அதிகாலையில் எழுந்த சுந்தரமூர்த்தி, தான் வாடிக்கையாகப் பிரதிதினமும் காலை நேரத்தைக் கழிக்கும் இடத்திற்குப் போய் கையில் புஸ்தகத்துடன் வெகு நேரம் யோசித்துக் கொண்டிருந்தான். "கிலகன் சொன்னதுபோல் செய்வதால் ஏராளமான செல்வம் உண்டாவதோடு உயிரும் பிழைத்து வாழலாம்," என்று யோசித்து பிறகு, "என்ன யோசனை இப்படி உண்டாகின்றது?—அந்த விஷயத்தை என் உயிர் போவதாக இருந்தபோதிலும் செய்ய முற்படேன். என் அருமைக் குழந்தையின் நிமித்தம் செய்ய முற்படேன்" என்று தீர்மானம்செய்து கொண்டான்.

சாயங்காலம் சுந்தரமூர்த்தி தன்னுடைய புஸ்தக அறையில் உட்கார்ந்துகொண்டு—பழைய புஸ்தகமொன்றைச் சிறிது படிப்பதும் சற்றுயோசிப்பதுமாக இருக்கையில் திடீரென்று கதவுதிறக்கப்பட்டு, அடர்ந்த கூந்தலையும் பரந்த கண்களையும், அழகிய தேககாந்தியையும் உடைய

பதின்மூன்று வயதுள்ள பெண் உள்நுழைந்து, “அப்பா, நமஸ்கரிக்கிறேன்,” என்று பணிந்து தனது தகப்பனாரின் பக்கத்தில் தோன்றிய சோபாவில் உட்கார்ந்தாள்.

“என் கண்மணீ! உனக்குச் சகலமங்களங்களும் உண்டாகுக! நீ இல்லாமலிருந்த ஒவ்வோர் நிமிஷமும் ஒரு பிர்ம்மயுகம்போல் தோன்றிற்று” என்று ஆதரவோடு சொன்னான்.

அன்று இராப்போஜனம் செய்த தந்தையும் புதல்வியும் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கையில் சுந்தரமூர்த்தி, “என் கண்ணே கல்பலதா, ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி உன்னிடத்தில் பேச விரும்புகிறேன்” என்றான்.

இதைக் கேட்ட கல்பலதா ஆச்சரியத்துடன் எழுந்து போய்த் தன்னுடைய தந்தையின் அருகில் உட்கார்ந்து கொண்டு அவருடைய வார்த்தையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தாள்.

“குழந்தாய், நான் ஒருகால் உன்னை விட்டு விலகி இருக்கவேண்டி வரும் என்றும், நம்முடைய பிரிவு வருஷக் கணக்காக இருக்குமென்றும் உத்தேசிக்கிறேன். ஒரு முக்கியமான விஷயத்தை முன்னிட்டு வெளிநாட்டுக்கு யாத்திரை போகிறேன்” என்று சாதாரணமான தொனியில் நவின்றான்.

“அப்பா! அப்பா!!” என்று விம்மி விம்மியழுது, “நீங்கள் என்னை—தங்களுக்கு இந்தப் பூலோகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் விட மேலானதாக இருக்கும் என்னை—விட்டுப்பிரிந்திருக்க எவ்விதம் மனம் துணிந்தீர்கள். நான்தான் தனிமையாகத் தங்களை—என்னை உண்மையாக நேசிப்பவரும், எனக்கு இப்புவியில் நேயரும்

உறவினருமான தங்களை—விட்டு எவ்விதம் இருப்பேன்" என்று முடித்துப் பலமாக அழத்தொடங்கினாள்.

"என் அருஞ்செல்வமே! என்னை விட்டுப் பிரிந்திருப்பதே உனக்கும் எனக்கும் நன்மையைக் கொடுக்கும். உன்னை என்னுடன் அழைத்துப்போவதென்பதோ இயலாத காரியம். நீ மறப்பதே சரி—நீ என்னை மறப்பதே நலமாகும்" என்று அவளைக்கட்டி முத்தியளிக்கையில் தன்னை யறியாமலே சுந்தரமூர்த்திக்குக் கண்ணீர் ஆறு போல் ஓட ஆரம்பித்தது.

"தந்தாய், இதுவரையில் இல்லாத சங்கதியை ஏன் இப்பொழுது சொல்லுகிறீர்கள்? நான் தங்களை விட்டுப் பிரிந்திருப்பதென்பது முடியுமா? உண்மையை ஏன் என்னிடத்தினின்றும் ஒளிக்கிறீர்கள்? நான் இன்னும் குழந்தையல்லவே! ஏன் இந்த இரகசியம்?" என்று கெஞ்சிக் கேட்டாள்.

"ஏனெனில்—ஏனெனில் கல்பலதா, இரகசியம் பாராட்டுவது அத்தியாவசியம். உண்மையைச் சொல்லிவிடுவேனேல் நீ என்னைக் கேவலமாக நினைப்பாய் என்றிருக்கிறேன். இதைத் தெரிந்து கொள்ளாமல் இருந்து என்னை நேசிப்பாயானால் நான் எடுத்த மானிடப்பிறவி சாபல்யமானதாக எண்ணுவேன்" என்று ஒரு மாதிரியான குரலில் நவின்றான்.

சுந்தரமூர்த்தி பேசி முடிப்பதற்குள் அவனுடைய வேலையாள் உட்புகுந்து, "தங்களை ஒரு கனவான் பார்க்க வேண்டுமென்றும் அவரைத் தங்களுக்கு ஏற்கனவே தெரியாதென்றும், அவருடைய பெயர் சுகுணன் என்றும் சொன்னார். அவர் உள்ளே வர உத்திரவா?" என்று தாழ்மையாகக் கேட்டான்.

சுந்தரமூர்த்தியின்முகம் மாறுபட்டது. அந்த அன்னியன் யாராக இருக்கலாம்; அவனைப் பார்க்க அந்நேரத்தில் வரவேண்டிய காரணம் என்ன? மணியோ இரவு பதினேரு மணியாகிற சமயம்.

"கல்பலதா! அந்த மனிதனை நான் தனியே பார்க்க வேண்டும். சற்றுநேரம் உன்னுடைய அறைக்குப் போய்வா" என்று கூறியவுடன் தன்னுடைய அறைக்குப் போயினுள் கல்பலதா.

இரண்டு நிமிஷங்களில், நடுத்தர வயதுள்ளவனும், நல்ல தேககாந்தி யுடையவனுமான, ஒரு வங்காளி பிரவேசித்தான். வந்த மனிதன் சாதாரண உயரத்தை விடக் குறைந்தவனுகவும் மூக்கில் தங்கத்தால் கட்டப்பட்ட மூக்குக் கண்ணுடியை அணிந்தவனுகவும் காணப்பட்டான்.

அவனைப் பார்த்த சுந்தரமூர்த்தி பயத்தால் நடுங்கினுனேனும் கூடியமட்டில் முகத்தை மாறுபட விடாமல் சாதுரியமாக இருந்தான். வந்தவன் வங்காளியைப் போலிருந்தானே யாயினும் தமிழ் நன்ருகப் பேசினுன் என்பது பின் வரும் சம்பாஷணையால் நன்கு விளங்கும்.

"ஐயா, நான் யார் என்பதைத் தங்களுக்குச்சொல்ல வேண்டிய தில்லையே. தங்களுக்கே தெரியு மன்ருே?' என்று வினவினுன் வந்த மனிதன்.

"ஆமாம், தாங்கள் தான் இராமப்பிரஸாத். துப்பறியும் உத்தியோகஸ்தரில் தலைமை ஸ்தானத்தை வகித்த இராமப் பிரஸாத் என்பதை நான் நன்கு உணர்வேன். நாம் இருவரும் ஒரு முறை சந்தித்திருக்கிருேம்" என்று சாவதானமாகப் பதிலளித்தான் மற்றவன்.

"நான் வந்திருப்பது எதுபற்றி என்பதையும் தாங்கள் அறிவீர்களல்லவா?"

" தாங்கள் என்னை " அரஸ்டு" செய்ய வந்திருப்பீர்கள் என்று ஊகிக்கிறேன் " என்று விடைபகர்ந்தான்.

பாதகண்டத்தில் பெயர்பெற்ற துப்பறியும் தலைமை அதிகாரி, தான் வந்த கதவு தாழிடப்பட்டிருப்பதையறிந்துதாழ்ந்த குரலில் " நான் தங்களை ' அரஸ்டு' செய்ய வரவில்லை. ஆனால் நீவிர் தப்பித்துக்கொள்ள ஒரு வழியைச்சொல்ல வந்திருக்கிறேன்" என்றான்.

" தப்பித்துக் கொள்ளவா!" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் சுந்தரமூர்த்தி.

" ஆமாம் தப்பிக்கவே. நான் சொல்லப் போவதைக் கவனமாகக் கேளும். நான் சொல்லும் யோசனையானது உம்மை வெளிப்படுத்தாது. உம்முடைய அவமானத்தை மேல் அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்தாது. உம்மையும் தண்டனை அடையும்படி விடாது. அதாவது யாதெனில், உம்முடைய கையால் உயிரை விடுவதே" என்று மெதுவாகச் சொன்னான்.

" தற்கொலையா!" என்று கதறிய சுந்தரமூர்த்தி " ஆ! தெரிந்துகொண்டேன்! இந்த அபவாதம் வெளிவரக் கூடாதென்பது அரசாங்கத்தாரின் அபிப்பிராயம் போலும்?" என்று சந்தேகத்துடன் தன் முன்னிருந்த மனிதனைக் கவனித்தான்.

"எனக்கிடப்பட்ட உத்தரவை உம்மிடத்தில் தெரியப்படுத்தி விட்டேன்" என்று சொன்ன இராமப்பிரஸாதின் இடக்கையில் மின்னிக்கொண்டிருந்த வைரமோதிரம் சுந்தரமூர்த்தியின் கண்ணுக்குப் புலப்பட்டது. " இன்று இரவு பன்னிரண்டு மணிக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டரை சந்திக்கவேண்டும். அவர் உம்மை கைதி செய்ய உத்த

ரவைவைத்திருக்கிறார். அவர் திரும்பி வருமளவும் நீர் உயிருடன் இருப்பீரேயானால், உம்மைக் கைதி செய்வது நிச்சயம். பிறகு உம்முடைய அவமானம் வெளிவரும் அதன்பின்——" என்று ஏதோ சொல்லப் புகுமுன் சுந்தரமூர்த்தி "எனது அவமானம் வெளிவந்த பின் இப்பொழுது உன்னத பதவியை அடைந்திருக்கிற இராஜத் துரோகிகளின் செய்கையும் வெளிவரும். ஆகையால் நான் போலீஸார் கைகளில் அகப்படுவது அவர்களுக்கு இஷ்டமில்லைபோலும்" என்று முடித்துக் கூறினன்.

"உம்முடைய அவமானம் வெளிவரக்கூடாதென்றும் அதிலும் உம்முடைய புதல்வி அதைத் தெரிந்துகொள்ளலாகாதென்றும் விரும்புகின்றீரன்றோ?" என்று சந்தேகிக்கும் விதமாகப் பேசி, "உம்மிடத்தில் யுக்தியை சொல்லி விட்டமையால் இதோ நான் போகிறேன். இன்னும் கொஞ்சநேரத்தில் அதிகார தோரணையில் நான் வருவதற்குள், மேல் அதிகாரிகளால் உமக்கு விடப்பட்ட மார்க்கத்தின் வழியே சென்று தப்பித்துக் கொள்வீர் என்று நினைக்கிறேன். இல்லையேல் நீர் காராக்கிரஹம் அடைவதென்பது நிச்சயம்" என்று பின்னும் கூறினர்.

"நான் ஓடிவிட்டால் நீர் என்னைத் தொடருவீரோ?"

"அதில் என்ன சந்தேகம், நிச்சயமாகத் தொடருவேன். என்னை விட்டோடிவிட முடியாது. என்னிடத்தில் நீர் தப்பித்துக்கொள்ளுவதென்பதற்கு ஒரு வழியே உள்ளது. அதாவது தற்கொலை. ஆகையால் இதைப்பற்றி நான் அதிகம் சொல்லவேண்டுவதில்லை. நான் சென்று வருகிறேன்" என்று சலாம் செய்து வெளியே போனர் இராமப்பிரஸாத்.

சுந்தரமூர்த்திக்கு இன்னும் ஒரு மணி நேரந்தான் வாய்தா கொடுக்கப்பட்டிருக்கிறது. பிறகு தற்கொலை! அவனுடைய விரோதிகள் அவனைக் காட்டிக்கொடுத்து விட்டார்கள். தற்காப்புக்கு யோசிப்பானேயானால் தற்கொலையே நிச்சயமாகிறது.

சற்று நேரத்தில் கல்பலதா பிரவேசிக்கும் பொழுது அவளுடைய தந்தையாகிய சுந்தரமூர்த்தி நாற்காலியின் மீது யோசித்த வண்ணம் வீற்றிருந்தார். பக்கத்திலிருந்த கடிகையாரம் பதினொன்றடித்து நாற்பத்தைந்து நிமிஷங்கள் காட்டிற்று. இன்னும் கால்மணி நேரமே இருக்கிறது. அக்கால் மணி நேரமாயதும், போலீஸார் உள்நுழைந்து சுந்தரமூர்த்தியைக் கைதிசெய்வார்கள். பிறகு உண்மை— இதுவரையில் பூலோகமே அறியாத உண்மை—வெளி வரும். இந்தவிதம் யோசித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் தன் புத்திரி கல்பலதா தன்னண்டையில் இருப்பதாக அறிந்து திரும்பிப் பார்த்தான் சுந்தரமூர்த்தி.

“தந்தையே, தங்களுக்கென்ன? தங்களுக்கு யாது வேண்டும்?” என்று பயத்தால் வார்த்தை தடுமாறக் கேட்டாள்.

“கண்மணீ, கல்பலதா! நீ ஒன்றும் செய்யவேண்டுவதில்லை. சில கெட்ட சமாசாரங்களைக் கேட்டமையால் சற்று மனவருத்தமாக விருக்கிறது, நீ இதுவரையில் படுக்கைக்குச் சென்றிருப்பாய் என்றெண்ணினேன்” என்று அன்பாகப் புகன்றான்.

“அப்பா, தாங்கள் என்றும்போலில்லை. ஆகையால் இன்றிரவு தங்களை விட்டகலேன்” என்று கல்பலதா சொல்லி முடிக்குமுன் அவர்களுடைய வேலையாள் உட்

பிரவேசித்து, "சுவாமி தங்களுடன் இரகசியமாக ஒருசங்கதி சொல்லவேண்டும்" என்று கூறினான்.

உடனே சுந்தரமூர்த்தி எழுந்து நடுக்கூடத்திற்குச் சென்றான்.

"நமது வீட்டு வாயிலுக்குப் பக்கலில் ஓர் கௌரதையான மனிதன் இறந்து கிடக்கிறதை நம்முடைய தோட்டக்காரன் கண்டு பயங்கொண்டு ஓடி வந்திருக்கிறான். இறந்த மனிதன் கொலை செய்யப்பட்டிருக்கிறான்" என்றான் வேலையாள்.

"கொலையா !" என்று பயத்தோடு "அவன் யார் ?" என்று கேட்டான் சுந்தரமூர்த்தி.

"சற்றுமுன்னர் தங்களைக் காணவந்த மனிதனே அவன். அவன் உயிர் இன்றிக்கிடக்கிறான்" என்று பதிலளித்தான்.

"ஒரு விளக்கைக் கொண்டுவா. நான் போய்ப் பார்க்கிறேன்" என்று சுந்தரமூர்த்தி கூவினான்.

சில நிமிஷங்களில் சுந்தரமூர்த்தி அவனுடைய இரண்டு மனிதர்களாகிய, வேலையாளனுடனும் தோட்டக்காரனுடனும், இறந்துகிடக்கும் இராமப்பிரஸாதின் மிருததேகத்தண்டையில் நின்றான். இறந்ததற்குக் காரணம் யாதென்று உற்று நோக்கும் பொழுது வலக்கையில், நல்ல கூரிய கத்தியால் வெட்டப்பட்டிருந்த காயத்தை தவிர வேறொன்றும் காணப்படவில்லை.

சுந்தரமூர்த்தி ஒரு கையால் விளக்குடன் முழந்தாளிட்டு பிரேதத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கையில் இரண்டு மனிதர்களின் காலடிச்சத்தம் கேட்டது. இரண்டு நிமிஷத்தில் அவ்விரு உருவங்களும் ஏற்கனவே இருந்த மூவரைச் சேர்ந்து கொண்டன.

ஒன்று சற்று உயரமாகக் கறுப்புக் கைச்சட்டை கால்சட்டை யணிந்திருந்தது. மற்ருென்று அதிகக் குட்டையாயும் சற்றுப் பருமனுயும், மூக்கில் மூக்குக்கண்ணுடி யணிந்திருந்தது. பின்னுல் சொல்லப்பட்டகுட்டையான மனிதனைக் கண்ட சுந்தரமூர்த்தி தன்னையறியாமலே வாய்விட்டலறினுன்.

"ஹா ஹா! இதென்ன!" என்று மூக்குக் கண்ணுடி அணிந்திருந்த மனிதன் தன்னைப்போலவேயே சகலவிதத்திலும் வேஷம் போட்டுக்கொண்டு இருந்த பிரேதத்தைப் பார்த்து ஆச்சரியமாகக் கேட்டார்.

பயந்த மனிதர்களாகிய சுந்தரமூர்த்தியும் அவனுடைய ஆட்களும் அப்படியப்படியே ஸ்தம்பித்து நின்றனர்.

மூக்குக் கண்ணுடியுடன் வந்த மனிதன் பிரேதத்தை நன்றே பரிக்ஷித்துப் பார்த்ததில் அவன் தன்னைப்போல் வேஷம் போட்டு வந்திருக்கிறுன் என்ற ஆச்சரியமான உண்மையை அறிந்தான். அதன் காரணம் எவருக்குமே தெரியாத அவ்வளவு இரகசியமாக இருந்தது. ஆனுல் ஓர் உண்மை மட்டும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கிற்று. அதாவது, அவன் துப்பறியும் உத்தியோகஸ்தனைப்போல் வேஷம் போட்டபடியினுல்தான் கொலை செய்யப்பட்டிருக்கிறுன் என்பதே. அவன் யாவன்? சுந்தரமூர்த்தி பிடிபடுவதிலும் தற்கொலையே சிலாக்கியமானதென்று சொன்னவன் அவன்தானு? அல்லது உண்மையான இராமப்பிரஸாதே அந்த யுக்தி சொன்னுரா? இச்சகல சந்தேகங்களும் சுந்தரமூர்த்திக்குத் தோன்றி மனதைக் கலக்கின.

"ஐயா, தாங்கள் சொன்ன யுக்தியின்படி நடக்கத் தயாராக இல்லை. ஆதலால் என்னைக் கைதிசெய்யுங்கள்.

பிறகு இறைவன் விட்டவழி விட்டும்" என்றான் சுந்தரமூர்த்தி.

"நான் சொன்ன யுக்தியா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் வந்த உத்தியோகஸ்தர்.

"ஆமாம். தாங்கள் ஒரு மணி நேரத்திற்கு முன்பு சொன்னது."

"நானா, ஒருமணி நேரத்திற்கு முன்பு வந்திருந்தேன்? நான் இங்கு வெகு நாட்களாக வரவில்லையே. அப்படி யாரேனும் உன்னிடம் வந்திருந்தால் இந்த இறந்த மனிதனே வந்திருக்கவேண்டும். என்னைப்போல் வேடம் பூண்ட இறந்த இந்த மனிதனே உன்னைச் சந்தித்திருக்க வேண்டும்" என்றார் உண்மையான இராமப்பிரஸாத்.

அவருக்குப் பதிலளிப்பதை விட்டுச் சுந்தரமூர்த்தி அவருடைய இடக்கையை வெடுக்கென்று இழுத்துப் பார்த்தான். அங்கொன்றும் காணப்படவில்லை. உடனே கீழே கிடந்த பிணத்தின் இடக்கையைப் பரிசோதிக்கையில் சந்தேகம் நிவர்த்தியாயிற்று. தான் ஒரு மணி நேரத்திற்கு முன்பு கண்ட வைரமோதிரம் இறந்த மனிதன் இடக்கையில் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

ஆதலால் சுந்தரமூர்த்தியைக் காண வந்த மனிதன் இறந்து கிடக்கும் அவனே.

# முதலாவது அத்தியாயம்

## இரங்கையாவும் அவருடைய குமாரி அமிர்தமும்

பணம்! சதுர்வித புருஷார்த்தங்களுள்ளும் முதன்மை பற்றிய பணம்! எப்பேர்ப்பட்ட விஷயத்தையும் எளிதில் சாதிக்கக்கூடிய பணம்! உயிர்போகும் நிலைமையிலும் தைரியத்தைக் கொடுக்கும் பணம்! கிருபணர்களால் தெய்வமாகக் கொண்டாடப்படும் பணம்! கொலை, களவு முதலியவைகளுக்குக் காரணமாக இருக்கும் பணம்! அருமருந்தன்ன சகோதரர்களை வேம்பினும் கைக்கும் வண்ணம் செய்யும் பணம்! உடலும் உயிரும் போன்றிருக்கும் நேயர்களைக் கீரியும் பாம்புமாக்கும் பணம்! ஆடவர் மகளிர் இருவருடைய நற்குணத்தையும் நன்கு பரிக்ஷிக்க உபகாரியாக இருக்கும் பணம்! ஒருவனுடைய கையிலிருந்து மற்றொருவனிடம் சென்றுகொண்டே இருக்கும் பணம்! யோகிகளால் பாஷாணமாகப் பாவிக்கப்படும் பணம்! காலை முதல் இரவு சையாகிருகம் புகும் வரையில் சகல மனிதர்களுக்கும் அதி அவசியமான பணம்! எழுத்து வாஸனை தெரியாதவனுக்கும் மேலான கௌரதையைக் கொடுக்கக்கூடிய பணம்! பூலோக இரகசியங்கள் எல்லாவற்றையும் தெள்ளிதின் எடுத்துக் காட்டும் பணம்! இவ்வளவு யோக்கியதைகள் வாய்ந்த பணத்திற்கு நான் பாத்தியஸ்தனுயினேன், என்றதைக் கேட்டவுடன் நான் நம்பவில்லை. பரம தரித்திரனுகிய எனக்கு இவ்வளவு செல்வம் எங்கிருந்து வந்தது? எனது தாயாதி யொருவர் சந்ததி இன்றி இறந்தமையால் நானே அதற்கு உரியவனுனேன். எந்த நேயர்கள் என்னை அலக்ஷியம் செய்து என்னேடு பேசவும் வெட்கமடைந்ததாகக் காட்டிக் கொண்டனரோ

அவர்களே வலுவில் என்னுடன் நட்புரிமை பாராட்டினர். என்னைப் புகழாதவர்கள் புவியில் இல்லை. அவர்கள் என்னையா புகழ்ந்தனர்? அப்படி என்னைப் புகழ்வதென் றால் சென்ற வருடமேன் என்னை எவருமே இலக்ஷியம் செய்யவில்லை? இப்பொழுது வருகிறகௌரதை எல்லாம் எனக்குச் சேர்ந்திருக்கும் செல்வத்தினுடையதே. செல் வம் செல்லும்பொழுது அதனுடன் சகல கௌரதைகளும் சென்றுவிடுமென்பதை நான் நன்குணர்ந்தவனே. ஆயி னும் "நாய் வேஷம் போடுகிறவன் குலைக்க வேண்டியது அவசியம்" என்பது போல, பூலோகமாகிய அரங்கமேடை யில் நான் பூண்ட "செல்வவான்" என்னும் வேடத்திற்கு இயைந்தவாறு நடிக்கவேண்டுமென்பதை யுணர்ந்து வந்த வர்களை யெல்லாம் நேயர்களாகக் கொண்டேன். அவர் களில் குடிகாரர் அநேகர்; கூத்தாடிகள் பலர்; கேவல மான தொழில்களையும் சர்வ சாதாரணமாக எண்ணுபவர் சிலர்; அடுத்துக் கெடுக்கும் அநியாயக்காரர் வேறு சிலர்; இவ்வளவு பெயர்களில் என்னுடைய உண்மையான தோழர் ஒருவரையாவது, என்னுடைய க்ஷேமத்தில் கருத் துள்ளவர் ஒருவரையாவது காணுதல் கூடாத காரியம். இவர்களில் ஒருவர், வியாபாரம் செய்து பெரியகடைக்கு அதிகாரியாகலாம் என்பார். மற்றவர் தேசாடனம் செய்து அவ்வத் தேசத்தவர்களின் கைத்தொழில், சிற்பம் முத லியவைகளைக் கற்றுவந்து நம்முடைய நாட்டிலும் அவைக ளுடைய அபிவிருத்திக்குத் தகுந்த மார்க்கம்தேடலா மென்பார். வேறு சிலர் இவைகளெல்லாம் அநுபவத்திற் குப் பொருத்தமுள்ளவைகள் அல்லவென்றும் செல் வம் இறைவனால் மனிதர்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்ப தால் அதை அநுபவிக்க வேண்டுவதே மனிதர்களாகிய

நாம் செய்யவேண்டிய முக்கிய கடமை என்றும் தர்மோபதேசம் செய்வார். நான் வீதியில் புறப்பட்டு விட்டால் பெரிய மனிதர்கள் முதல் குப்பைவண்டிக்காரன் வரையில் அவரவர்களுடைய அந்தஸ்துக்குத் தக்கவாறு நமஸ்கரிப்பதும் க்ஷேமம்விசாரிப்பதுமாக இருக்கும். கொலையாளிகளைச் சூழ்ந்துபோகும் காவலாட்களைப் போல் என்னுடன் சதாகாலமும நால்வர் இல்லாம லிரார். அவர்கள் செய்யும் உபசாரணைகள் எனக்கே வெறுப்பைக் கொடுக்கின்றவைகளாகும். முன்னோர் தேடிவைத்திருக்கும் சொத்துக்களைச்செலவு செய்து தானும் பெரியமனிதன் என்று வெளிவரும் மகா உழைப்பாளிகளும் எனக்கு நேயராயினர். இவர்களுடைய இராமாயணம் தாசிகளின் கதைகளே யாகும். இவர்களின் ஆலய வழிபாடென்பது பாத்தையரின் பாதபூஜையே! இவர்களின் கதா காலக்ஷேபம் அங்காரீமணிகளின் கொஞ்சும் குதலை மொழிகளே! இவைகளால் விளையும் பலன்களோவெனில் வைத்தியர் பலருடைய நட்பு. கொஞ்ச நாட்களில் என்னைத் தெரியாதவர்கள் திருச்சியில் வெகு சிலரே. உண்மையான பிரபுக்களுடைய சிநேகம் அதிகப்படவே போலிப் பிரபுக்கள் தானுகவே விலகலாயினர். போலிப் பிரபுக்கள் பதினைந்து பெயர்கள் என்னுடன் இருந்த காலத்தில் நாள் ஒன்றுக்கு நாற்பது ரூபா போல் செலவாகும். ஆனால் இப்பொழுது என் நேசராகியபிரபுக்களின் சங்கியை குறைந்தபோதிலும் தினம் ஒன்றுக்கு நூறு ரூபாவுக்குமேல் செலவாக ஆரம்பித்தது. எனது அந்தஸ்திற்குத் தக்கவாறு ஒரு நான்கு சக்கரவண்டியும் அழகிய குதிரையொன்றும் பிக்ஷாண்டார் கோவில் பிள்ளையிடம் வாங்கிக்கொண்டேன்.

இவ்விதம் இருக்கையில் எனது நண்பன் கோவிந்த

ராம் என்பான் புனுவில் கூட்டுவியாபாரம் செய்துவருகிற தாகவும் தன்னுடைய கூட்டாளி வெகு சீக்கிரம் விலகிப் போகிறபடியால், அந்த பாகத்தை வாங்கும்படியும் எனக்கு எழுதியிருந்தான். கோவிந்தராம் என்னுடைய உண்மை யான நண்பனுகையால் இலக்ஷ ரூபாவுக்கு அப்பங்கை வாங்கினேன். இவைகள் எல்லாம் நான் வாங்கிய குதிரை யின் அதிர்ஷ்டமே என்றார்கள். ஒருவர் என்னை முனிசி பாலிடி "கவுன்சிலர்" வேலைக்குப் பிரயத்தினம் செய்யும் படி போதித்தார். வேறொருவர் சட்டசபையில் அங்கத் தினராகவேண்டிய ஏற்பாடுகள் செய்யத் தலைப்பட்டார். உண்மையாகவே எனக்கு இவைகளில் சிறிதும் பிடித்த மில்லை. அந்த விதமான பதவியை விரும்புவோர் தங்க ளுக்கு அவை கிடைக்கும் வரையில் மட்டும் பரோபகாரிக ளாகப்பாவனைசெய்து குறித்த காரியம் கைகூடிய பின் னர் தான் இந்திரப் பதவியில் இருப்பதாயும் மற்றவர்கள் கேவலம் மிருகங்களினும் தாழ்மையான புழுக்களுக்குச் சமானமெனவும் கருதிவிடுகின்றதை யான் அறிந்துளேன். ஒன்றிரண்டுமுறை அவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவேண்டி பிரயத்தினமும் செய்தேன். ஆனால் என் னுடைய நல்லகாலமே அந்தப் பதவிகள் எனக்குக் கிடைக்கவில்லை.

என்னுடைய நேயர்களின் உண்மையபிமானத்தை அறிய விரும்பி ஒரு ஏற்பாடுசெய்தேன். எனது கூட் டாளியாகிய கோவிந்தராமுக்கு ஒரு கடிதம் எழுதி, வியா பாரத்தில் நஷ்டம் வந்ததென்றும் வரவு செலவு கணக்குப் பார்த்ததில் என்னுடைய பங்கிற்கு ஐந்நூறுரூபாவுக்கும் குறைந்தேஇருக்கிறதென்றும் எழுதும்படி சொன்னேன். இம்மாதிரியான கடிதம் மறுவாரம் வந்தது. இரண்டு

வாரங்களில் சகல நண்பர்களுக்கும் இச்செய்தி எட்டியது. உடனே ஒவ்வொருவராக விலகத் தலைப்பட்டனர். ஹா! இப்பொழுதே உலகத்தின் உண்மையையும் பணத்தின் உண்மையான கௌரதையையும் அறிந்தேன்! கூட்டி லிருந்த தேனைக்குடித்த தேனீக்கள் பிறகு கூட்டை இலக்ஷியம் செய்யாமல் போவதுபோல் என்னுடைய நண் பர்கள் அனைவரும் விலகினர். என்னைக் கண்டபோதிலும் காணாதவர்களைப்போல் போவதும், நானே வலுவில் பேசப் புகுந்தால் பல்லைக் காட்டிப்பேசி ரொம்ப வேலை இருப்பதாகத் தெரிவித்துச் செல்வதுமாக இருந்தனர். எவர்கள் என்னை இடைவிடாமற் சூழ்ந்துகொண்டிருந்த னரோ அவர்களே என்னைக் காணுவதற்கு அஞ்சினர்.

அவ்விதமான தந்திரம் செய்யாமற் போகேனேயா யின் இப்பொழுதிருக்கிற நிலைமையைக் கனவிலும் நினைக்க வொண்ணாது. கொஞ்ச நாட்களில் தேசாடனத்திற்கு ஆரம்பித்தேன். முதலில் மதுரை, திருநெல்வேலி, திருவ னந்தபுரம், மலையாளம் முதலிய ஜில்லாக்களையும், பிறகு சென்னை இராஜதானியின் எல்லா ஜில்லாக்களையும், அங் கங்கேயுள்ள விசேஷ ஸ்தலங்களையும் பார்த்து வந்தேன். இவ்விதமான பிரயாணத்தில் ஆசை அதிகரிக்கவே மறுபடி யும் யாத்திரையே செய்துகொண்டிருந்தேன். அதன் பயனாக தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் இவை போன்ற பலவேறு பாஷைகளைப் பேசவும் படிக்கவும் நன்றே கற்றுக்கொண்டேன். பிறகு வடதேசங்களுக்குப் பயணமாகி ஹிந்தி, ஹிந்துஸ்தானி, வங்காளி, பஞ்சாபி இவைபோன்ற வேறு பல பாஷைகளையும் பேசப் பழகிக் கொண்டு மூன்று வருஷங்களைக் கழித்தேன். எனது வியா பாரம் நன்றாக நடந்து வந்தமையால் பணச்செலவை நான்

இலக்ஷியம் செய்தேனில்லை. ஒருவருக்குப் பணம் மட்டும் இருக்குமேயானால் அவனுடைய ஆயுளைத் தேசாடனத்திலேயே கழிக்கலாம். ஜப்பான், சீனுபோன்ற தேசங்களுக்கும் அமெரிக்கா, ஓஷியாணியாபோன்ற பிறகண்டங்களுக்கும் செல்லலாம்—கடவுள் நமக்கு ஆயுளையும் ஐஸ்வரியத்தையும் மட்டும் கொடுத்தருளவேண்டும்—கோடை காலத்தில் நான் உதகமண்டலம், ஏற்காடு முதலிய இடங்களுக்கும், மாரிகாலத்தில் பெண்மலையாளம் என்று சொல்லப்படும் திருச்சூருக்கும், பனிகாலத்தில் பம்பாய், சென்னை போன்ற கடற்கரையை அடுத்துள்ள பட்டணங்களுக்குச் சென்று விடுவேன். இவ்விதம் சுற்றிவருகையில் அப்பையா என்னும் ஒரு தெலுங்கு தேசத்தவனை வேலையாளாக நியமித்துக்கொண்டேன். அவனுக்கு வயது நாற்பத்தைந்திற்கு மேலிராது. நான் போகுமிடங்களுக்கெல்லாம் என்னுடன் வருவான். நான் எவ்வூருக்குச் சென்றபோதிலும்பெரியமனிதர்களால் கௌரவிக்கப்பட்ட சாப்பாட்டுக் கடைகளிலேயே இறங்குவேன். அப்பேர்ப்பட்டகடைகளில் வாலிபஎலிகளைப் பிடிக்கும் பொறியாகிய அங்கனை ஒருவர் அல்லது இருவர் இருக்கும் வாடிக்கையுண்டு. அவர்களின் நிமித்தம் நான் சென்றேன் என்று நினைக்கவேண்டாம். அனுபவம் என்பதைக் கூடுமான வரையில் வாங்கவேண்டுமென்னும் முழுநோக்கம் பற்றியே சென்றேன். பம்பாய் போயிருக்கையில் "மோட்டார்கார்" ஒன்று வாங்கினேன். அது அறுபது குதிரை சக்தி கொண்டது. எங்கு போனபோதிலும் என்னுடைய வேலையாளோடு அந்த நூதன வண்டியிலேயே போவேன். இரயில் வண்டிக்குக் கொடுக்கும் பணம் சற்றுக்குறைந்தது. அதைப்போல் பலமடங்கு அந்த வண்டியைக் காப்பாற்றுவதில் செலவாயது. வருஷ

முழுமையும் வெளியே போக்கினேனெனினும் வைகாசி ஆனி மாதங்களில் ஒன்று அல்லது இரண்டு வாரங்கள் திருச்சிக்கும் போவேன்.

இவ்விதமாய் மூன்று வருஷகாலங் கழித்து, நான்காவது வருஷத்தில் வங்காள நாகபூர் இரயில்வேயில் ஒரு ஸ்டேஷனாகிய "இரம்பா" என்னும் அழகிய ஊருக்குப் பேய்ச்சேர்ந்தேன். நமது வாசகர்களிற் அநேகர் இந்த ஸ்டேஷனைப்பற்றி அநேகமாய் அறியார்கள். ஆனால் வட நாடுகளுக்குச் சென்றிருப்பவர்களுக்குத் தெரியாமலிராது. நான் இறங்கி இருந்த சத்திரத்தின் கீழ்ப்புறம் நீலவர்ணத்தைக் கொண்ட ஆழமான ஓர் ஏரியும், அவ்வேரிக் கரையில் பலனையும் நிழலையுங் கொடுக்கும் பல விருக்ஷ ஜாதிகளும், அவைகளை அடுத்து அடுக்கடுக்காயும் பசுமையுமான பலகுன்றுகளும், கண்ணுக்கினிய காக்ஷியைக்கொடுத்தன. எவ்வளவு அழகாக மனிதர்களால் செய்யப்பட்ட பொருளும் இயற்கையாய் உண்டாகும் பொருளுக்கு ஈடாகாதென்பது திண்ணம். மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும்மனிதரால்—சிற்ப சாஸ்திரத்தில்பயின்று தேர்ச்சியடைந்தமனிதரால்—கட்டப் பட்டபோதிலும், இயற்கை விநோதங்களாகிய நீல நிறமான ஆகாயத்தின் வனப்பும், மாகதம் போன்ற அடிக்குன்றுகளின் அழகும், கடற் போன்று நீண்டகன்ற ஏரியின் இனிமையான காக்ஷியும், அக்கட்டிடங்களை விடப் பலவிதத்திலும் சிறப்புற்றே விளங்கின. நான் இறங்கியிருந்த அறையின் பலகணியைத் திறந்து வைத்திருந்தால் மலைகளில் ஏறி இறங்கும் அநேகருடைய கூட்டத்தையும் ஏரியில் மீன்பிடிக்கச் செல்லும் செம்படவர்களின் குழாத்தையும் நன்றே காணலாம்.

இவ்விதம் பத்து தினங்கள் இரம்பாவில் கழித்து வரு

கையில் ஒரு நாள் மாலே, நான் இறங்கி இருந்த சத்திரத்தில் என்னுடைய அறைக்கு எதிர் அறையில் ஒரு வயோதிகனும் ஓர் யுவதியும் வந்து இறங்கினர். அவள் உள் நுழைகையில் என்னேப் பார்த்தமையால் எம்மிருவருடைய திருஷ்டிகளும் சந்தித்தன. அவளுடன் கூடவந்த மனிதனின் சரீரம், கறுத்துத் தடித்து சாதாரண உயரத்தைவிட சற்றுக் குறைந்து இருந்ததோடு தலே மயிரின்றி வழுக்கையாயும் இருந்தது. அவன்நல்லுடைகள் அணிந்திருந்தான். அப்பெண்ணுடன்பேசிய மாதிரியிலிருந்து அவன் அவளுடைய தந்தையென்பது நிச்சயமாயது. மற்றும் அவனுடைய நடையுடை பாவனேகளின்றும் அவன் தகுந்த அந்தஸ்துள்ள மனிதன் என்பதையும் அறிந்தேன். அம்மனிதன் கேட்ட கேள்விகளுக்கு அவள் ஹிந்துஸ்தானியில் பதிலளித்தமையால் அவர்கள் தக்ஷிணதேசத்தவர்களல்லரென்பதையு முணர்ந்தேன். அவளுடைய ஆடை புறுதேசத்து மாதினது போன்றிருந்தமையால் எனது சந்தேகம் நிவர்த்தியாயது. என்னுடைய பிரயாணத்தில் பல தேசத்திலும் அநேகமாதர்களேக்கண்ணுற்றிருந்தேனெனினும் அந்தப் பெண்மணியின் ரூபலாவண்யங்கள் மட்டும் என்மனதுக்கு ஒத்திருந்தன.

வந்த அவர்களே நான் கவனித்தபடியே இருந்தேன். அதற்குக் காரணம் அம்மனிதன் இருந்த சுருசுருப்புத் தன்மையோ அல்லது அவன் காணப்பட்ட பெரிய மனிததோரணேயோ, அல்லது அப்பெண்மணியின் தேககாந்தியோ, தெரியவில்லே. அவளுடைய மான்போலும் மருண்டபார்வையில் ஒரு விதமான மந்தத்தன்மை குடிகொண்டிருந்தது. அவள் இறங்கியிருந்த அறை பற்பல வேடிக்கை விநோதங்களால் சிருங்காரிக்கப் பட்டிருந்தும்

அவள் சந்தோஷம் அடைந்ததாகக் காணப்பட்டாளில்லை. சிற்சிலசமயம் என்னைப் பார்த்தாளேனும், வேண்டு மென்று என்னைப் பார்த்தவளாகத் தெரியவில்லை. அவள் தகப்பனார் கேட்ட கேள்விகளுக்கு அலக்ஷியமாகப் பதி லளித்தாள். அவள் இருந்த நிலைமையில் தன்னையே மறந்த வளாகக்காணப்பட்டாள். அதனாலேயே அவர்களைப்பற்றி அதிகம் கவனிக்கும்படி நேர்ந்தது, அவளுடைய மெலிந்த இடையில் பிரகாசித்த தங்க ஒட்டியாணமும், கையில் சோபித்து நின்றசுவர்ணக்காப்பும், கழுத்தில் ஊசலாடா நின்ற கடியாரச்சங்கலியும், காதில் தோன்றிய கம்மலும் அவளுடைய இயற்கையழகை அதிகப்படுத்தின. அவள் அப்பொழுதே வயதை யடைந்திருக்க வேண்டுமென்று ஊகித்துக்கொண்டேன். யௌவனம் என்பது ஓர் உரு வெடுத்து வந்தது போலும், அழகென்பது ஆவிர்பவித் தமை போலுந் தோன்றிய மெல்லியளால்மீது என் மனம் சென்றது வியக்கத் தக்கதன்று. அந்தச் சத்திரத்தின் கீழே ஒரு சாப்பாட்டுக் கடையுண்டு. என்னைப்போல் இன்னுஞ்சிலர்—அச்சத்திரத்தின் அறைகளைக் குடிக் கூலிக்கு வாங்கி வசித்து வந்த சிலர்—மெத்தையின் மீது வருவார்போல் வந்துலாவி அப்பொழுது வந்த தந்தை மகள் இருவரையும் பார்த்துச்சென்றனர். அவர்கள் இரு வருக்கும் கீழ் சாப்பாட்டுக் கடையிலிருந்தே போஜனம் வந்தது. வெகுநேரம் வரையில் வார்த்தையாடிக் கொண்டே போஜனம் செய்தனர். அவர்கள் பேசும் வார்த்தைகளைக் கேட்க அவாமிகக்கொண்டு எனது வாயி லண்டை நின்றேனெனினும் ஒரு வார்த்தையையும்கேட் டிலேன். ஆனால் அப்பெண் பதில் கூறிய ஒவ்வோர் ஹிந் துஸ்தானி பதங்களிலிருந்து அவர்கள் இருவரும் அந்

தப்பாஷையில் சம்பாஷிக்கின்றனர் என்று அறிந்தேன். அவள் யார்? என்ன இரகசியம் அவளைச் சூழ்ந்திருக்கிறது? என்ற கேள்விகளைப் பன்முறையும் யானே கேட்டுக் கொண்டேன். அவளுடைய தகப்பனுருடன் அவள் வந் திருந்தபோதிலும் அச்சமயம் அவளுக்கு உண்மையான நட்பு அவசியம் என்பதை மட்டும் அவளிருந்த நிலைமையி லிருந்து கண்டுகொண்டேன். அவர்களுடைய பெயர் ஊர் முதலியவைகளைத்தெரிய எண்ணங்கொண்டு கீழிறங்கிச் சென்று சத்திரத்தின் கணக்கனைக் கண்டு அவர்கள் யார் என்று வினவினேன்.

"பதினெட்டாவது இலக்கத்தையுடைய அறையில் இறங்கிஇருக்கிறவர்களா? தந்தையும்புதல்வியும்; தெலுங்கு தேசத்தவர்கள். இன்றையதினமே இரயில் இறங்கிவந்த னர்," என்றான் கணக்கன்.

"அவர்களுடைய பெயர்?"

"இதோபாருங்கள்;" என்றொரு புஸ்தகத்தைக்காட்ட ஆங்கிலத்தில் இரங்கையாவும் அவருடைய குமாரி அமிர்தமும் என்றெழுதப்பட்டிருந்தது.

இதைப்பார்த்த யான் ஆச்சரியம் அடைந்து "அவர் ஹிந்துஸ்தானி தேசத்தவரல்லவா?" என்று வினவினேன்.

"நானும் அப்படியேதான் சந்தேகித்தேன். ஆனால் அவர்கள் தெலுங்கு தேசத்தவர்கள்தானும்" என்று மறு மொழி புகன்றான் சத்திரத்துக் கணக்கன்.

# இரண்டாவது அத்தியாயம்

## உயிர்க்கே கேட்டை விளைவிக்கும்

அமிர்தம்! எவ்வளவு அழகான பெயர்! அமிர்தத்தினின்றுதான் அவள் உண்டானவளோ? அவளைக் கண்டதுமுதல் சதா என் முன்னிலையில் அவளுடைய உருவெளித் தோற்றத்தைக் கண்டேன். இரவில் அவளையன்றி வேறொன்றும் கனவு கண்டிலேன்.

மறுநாட்காலையில் எழுந்து அறையைவிட்டு வெளியே வருகையில் என்னுடைய வேலையாளனாகிய அப்பையா காத்துக்கொண்டிருந்தான். அவன் எனது அந்தரங்க வேலையாளனாகையால் அப்பெண்மணியைப் பற்றிய விபரங்களைத் தெரிந்து வரும்படி அனுப்பினேன். நான் வெளியே போய் வந்து காப்பி சாப்பிட்டுக்கொண்டிருக்கையிலேயே அப்பையா வந்து சேர்ந்து, அப்பெண் இரவு முழுமையும் அழுதுகொண் டிருந்ததாகவும், தந்தையும் குமாரியும், நேயத் தன்மையிலில்லை என்றும் கீழே வேலையாட்கள் பேசிக் கொண்டிருந்ததாகச் சொல்லி, "அவர்கள் ஹிந்துஸ்தானி தேயத்தவர்கள் தான் என்று வேலையாட்கள் நிச்சயம் செய்கின்றனர். ஆனால் அவர்கள் தெலுங்கர்கள் என்று நான் நம்பவேண்டி இருக்கிறது. அவர் கொஞ்ச நேரத்திற்கு முன்பு பேசிய விதத்திலிருந்து அவர்தெலுங்கு மனிதர்என்றே எண்ணுகிறேன்" என்று மீண்டுங் கூறினான்.

"சரி அப்பையா, அவர்கள் இருவரையும் பற்றிய சகல உண்மைகளையும் யான் அறிய விரும்புகின்றமையால் நீ அவர்களுடைய செய்கைகளைக் கவனித்து வா. அப்

பெண்ணுக்கு வேலைக்காரி இல்லை போலும்;" என்று யான் உசாவினேன்.

"இல்லையே," என்று வருத்தப்பட்டவனாகக் கூறி, "இருந்தால் நீங்கள் கேட்கும் விஷயங்களை அரைவினாடியில் தெரிந்து வருவேனே," என்று விடையளித்தான்.

எனது வேளையாளனாகிய அப்பையாவிடம் ஓர் அலுவலைச் சொன்னேனாயின் அதை எவ்விதத்திலாவது சாதிப்பான். அமிர்தத்தையும் அவளுடைய தந்தையையும் பற்றி விசாரிக்க உத்தரவு செய்தமையால் அவன் எந்தவிதத்திலும் உண்மையைக் கண்டுபிடிப்பான் என்கின்ற நம்பிக்கையோடிருந்தேன். இருவரும்—தந்தையும் புதல்வியும்—பகல் போஜனத்திற்கு உட்கார்ந்தனர். போஜனம் செய்யும் போது ஹிந்துஸ்தானியில் பேசிக்கொண்டிருந்தனர்.

போஜனம் முடிந்தவுடன் அவளுடைய தந்தை வெளியே சென்றார். அப்பெண்மணி தனியாக ஒருசாய்வான நாற்காலியில் யோசித்த வண்ணம் சாய்ந்து கொண்டிருந்தாளேயன்றி அவளைச்சூழ்ந்துள்ள இயற்கை விநோதங்களைப்பற்றிச் சிறிதும் யோசித்தவளாகவே காணப்படவில்லை. கொஞ்சநேரத்தில் திரும்பிவந்த இராங்கையா தன்னுடைய குமாரத்தியை அழைத்துக்கொண்டு கீழேபோய் ஏரியை நோக்கிச் செல்லும்பொழுது என்னுடைய அறையின்கீழ் வந்து சுருட்டுப் பிடித்து மேலே திரும்பிப் பார்க்கையில் என்னைப்பார்க்க, என்னுடைய மனோஅபிப்பிராயங்களைத் தெரிந்து கொண்டாரோ, எனப் பயந்த நான் அவ்வேரியில் வரும் படகைக் கவனிப்போன் போலப் பாவனை செய்து நின்றிருந்து அவர்கள்சந்தேகியாவண்ணம் நானும் கீழேசென்று படகுக்கரையை அடைந்து அற்புதக் காக்ஷிகளைக் கண்ணுற்று, "சுவர்க்கத்தினோர் பகுதிதான் கீழே

உடைந்து விழுந்து விட்டதோ" என்று என்னுள் எண்ணிக்கொண்டு திரும்பினேன்.

அன்றையத்தினம் முழுமையும் என்னை அவள் பாராமையால் அவளுடைய தந்தை என்னைப்பார்க்கக் கூடாதென்று ஆக்ஞை செய்திருக்க வேண்டுமென்று எண்ணினேன். பிறகு வழக்கம்போல் அவர்கள் மெதுவாகப் பேசத் தொடங்கினர். என்ன இரகசியம் பேசினார்களோ யான் அறியேன்.

"நான் இதோ வெளியில் போகிறேன். வருவதற்கு நேரம் அதிகமாகும். இன்றிரவு திரும்பாமல் இருப்பினும் பயமடையாதே" என்று இரங்கையா தெலுங்கில் கூறினார்.

"தாங்கள் எங்கு செல்லுகின்றீர்கள்?" என்று அப் பெண் வினவியதற்கு,

"அது என்னுடைய சொந்தக் காரியம்" என்று விடை பகர்ந்து வெளியே வந்தார்.

அவரைத் தொடர்ந்தாள் அமிர்தா; யானும் உண்மையை அறிய எண்ணங்கொண்டவனாக என்னுடைய சால்வையை எடுத்துப் போர்த்திக்கொண்டு அவர்களுக்குமுன் கீழேபோய் அவர்களை எதிர்பார்த்தவண்ண மிருந்தேன். நான் வெகுநேரம் காத்துக்கொண்டிருக்கவில்லை. பச்சை சால்வையுடனும் கையில் வெள்ளிப் பூண்போட்ட கைப் பிரம்புடனும் இரங்கையா மட்டும் வெளியே வந்து கடுகி நடந்து ஏரியின் தென்கோடியை அடைந்தார். யானும் அவரைப் பின்தொடருகையில் அந்தக் காட்டுமார்க்கத்தில் போய் அவர் இரவைக் கழிக்க என்ன காரணமிருக்கு மென்று யோசித்தேன். கைத்தடியைச் சுழற்றிக் கொண்டே அதிக விரைவாகப் போய்ப் பக்கத்தே தோன்

றிய ஒரு குன்றின்மீது ஏறினர். அந்தப் பாதை, வண்டிகள் போக யோக்கிய முள்ளதாக இருந்தது. நான்கு இரஸ்தாக்கள் சேருகிற இடத்தை யடைந்து ஆங்குதோன்றிய ஒரு பாறையின்மீது அவர் உட்கார்ந்து கொண்டதைக் கவனிக்க யாரையோ அங்கு எதிர்பார்க்கிறார் என்பது தெற்றெனவிளங்கிற்று. அவர் பேசிடில் கேட்கும்படியான ஒரு மறைவான இடத்தில் நின்று கொண்டிருந்தேன். இரங்கையா ஒரு தீக்குச்சியைக் கிழித்துத் தன்னுடைய கைக்கடியாரத்தால் மணியை அறிந்து கொண்டு பின்னும் அப்பாறையின்மீதே வீற்றிருந்தார். மைஇருள் சூழ்ந்து கொண்டு இருந்தது. மேகம் மூடிக்கொண்டது. மழை வெகு சீக்கிரத்தில் பெய்யும்போலு மிருந்தது.

இவ்விதம் கால்மணி நேரம் இருவரும் அவரவர்களுடைய ஸ்தானத்தை விட்டு அகலாமலிருந்தோம். பிறகு ஆகாயத்தே ஓர் விதமான வெளிச்சம் தோன்றிற்று. எனக்கு ஆச்சரியமும் பயமும் அதிகரித்தன. ஆனால் வெகு சீக்கிரத்தில் எனது பயம் நீங்கிற்று. வரவா அந்த வெளிச்சம் எம்மைச் சமீபித்தமையால் அஃது ஒரு "மோட்டார்" வண்டியின் தலைவிளக்கென்பது நிச்சயமாயது. மனிதன் ஞானத்தை அடைந்தவுடன் காணும் ஜெகஜ்ஜோதியைப்போல், அந்தகாரத்தால் நிறைந்திருந்த அந்தக் காட்டில் திடீரென்று பிரகாசம் உண்டாயிற்று. உடனே யாவர் கண்ணுக்கும் படாமலிருக்கும்படி நான் ஒரு மரத்தின் நிழலில்படுத்துக்கொண்டேன். வெகுவேகமாக ஓடிவந்தமோட்டார் வண்டி இரங்கையா செய்த சத்தத்தைக்கேட்டு சட்டென்று நின்றது. உடனே இருவர் வண்டியினின்றும் கீழிறங்கி அவர்கட்காகக் காத்துக் கொண்டிருந்த இரங்கையாவுக்குவந்தனம் செய்தனர்.

"போவோம், வாருங்கள். அரை நிமிஷமும் தாமதிக்கலாகாது. உடனேபோகவேண்டும். அந்தப் பெண் எப்படி இருக்கிருள்?" என்று வந்தவர்களில் ஒருவர் தெலுங்கில் வினவினர்.

மறுநிமிஷத்தில் மூவரும் அந்த வண்டியில் ஏறிக்கொள்ள வண்டி வந்த வழியே திரும்பி வேகமாகப் போய் மறைந்தது. முழுவெளிச்சமும் எனது திருஷ்டியினின்றும் மறைகிற வரையில் ஆச்சரியத்தால் அவ்விடம் விட்டு அகலாமலிருந்தேன்.

இரங்கையாவின் நேயர்களாகிய அவர்கள் யாவர்? அவ்விதம் அவர்களை இரகசியத்தில் சந்திக்க வேண்டியதென்ன? என்று வெகுநேரம் யோசித்தும் ஒருவிதமான ஆலோசனையின் முடிவிற்கும் வரக் கூடவில்லை.

"அந்தப் பெண் எப்படி இருக்கிருள்?" என்றது அமிர்தாவைப் பற்றியதாக இருக்குமோ? அப்படியாளுல் தங்கள் பெண் என்று சொல்லாமல் அந்தப் பெண் என்று ஏன் சொல்லவேண்டும் என்று யோசித்தேன். எப்படி இருந்தபோதிலும் அவளுடைய இரகசியம் மட்டும் சாமானியமானதல்ல என்பதையும் நிச்சயம் செய்தேன்.

வந்த வழியே திரும்பிச் சத்திரத்தை அடைந்து பார்க்கையில் அநேகமாக எல்லோரும் இராப்போஜனம் செய்து நித்திரை செய்து கொண்டிருந்தனர். ஆனல் அமிர்தம்மட்டும் நித்திரை செய்யாமல் தன் அறையில் ஒரு புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தாள். வெகு நேரம் விழித்துக்கொண்டிருப்பது எனக்கு இயல்பேயாதலால் அவள் நித்திரை செய்யாமலிருந்தது எனக்கு வியப்பைக் கொடுக்கவில்லை. நடந்த விஷயங்களைத் தனிமையில் இருந்து யோசிக்க எண்ணங்கொண்டு மேல்மாடியை

அடைந்து கைப்பிடிச்சுவரின்மீது உட்கார்ந்திருந்தேன். மேகங்களால் சூழப்பட்ட ஆகாயத்தின் பிரதிபிம்பம் மங்கிய சந்திரன் ஒளியுடன் எதிரே தோன்றிய ஏரியில் பிரதிபலித்ததானது பயங்கரமான காக்ஷியாக இருந்தது. நான் திருப்பிப் பார்க்கையில் சால்வையால் பாதாதி கேசம் மூடிக்கொண்டு என்னை நோக்கி வரும் ஒருபெண் உருவத்தைக் கண்டு ஆச்சரியங் கொண்டேன்.

வருவது அமிர்தம் என்று நிச்சயமாயதும் ஆநந்தம் அடைந்தேன். அப்பொழுதும் அவளுடைய அழகு சிறிதும் குறையக் காணோம். அவள் என்னை யடைந்ததும் நான் கீழிறங்கி நின்று கொண்டேன். நான் அவளோடு முதலில் எவ்விதம் பேச ஆரம்பித்தேன் என்பது எனக்கே ஞாபகத்திலில்லை. ஐந்து நிமிஷங் கழித்த பின்னர் நான் அவளுடைய பக்கலில் உலாவிக்கொண்டிருந்தேன். உலாவுகையில் பலவித விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம்

"இல்லை, இல்லை, எனக்கு எந்த விதமான தொந்தரவும் இல்லை. என் தகப்பனாருடன் நான் முன்னர் இருந்த டாரா டன்னைவிட இவ்விடத்தில் அதிகமாகக் குளிர் இல்லை. இடம்மிகவும் இரமணீயமாக இருக்கிறது" என்று, நான் ஏற்கனவே கேட்ட கேள்விக்குப் பதில் அளித்தாள்.

"டாராடன்னு!" என்று ஆச்சரியத்தோடு,

"அது ஹிமயகிரியிலல்லவா? பாதகண்டத்தின் மற்றொரு மூலை என்றும் சொல்லலாமே!" என்று கடவினேன்.

"ஆமாம்; தாங்கள் சொல்வது சரி. அங்குள்ள குளிரை மனிதர்கள் சகிப்பது முடியாது. எவ்விதந்தான்

அங்கு மனிதர் வாசம் செய்கின்றனரோ தெரியவில்லை" என்று விடை தந்தாள்.

"நான் கேட்பது தகாதாயினும், தாங்கள் அவ்வளவு தூரம் வடக்கில் செல்லவேண்டியதின் காரணம் யாதென்பதை யான் அறியலாமோ?" என்று மிகவும் பணிவாகக் கேட்டேன்.

"ஆ! எனது தந்தை சதா பிரயாணத்தில் பிரியப்பட்டவர். சதா நாங்கள் தேசா தேசமாக சஞ்சரித்துக் கொண்டிருப்போம். இந்தியாவிற்கு வெளியிலுங் கூட போவோம்," என்றாள் அமிர்தம்.

"ஆயின் தங்களுக்கு அது—பிரயாணம்—திருப்தியாக இல்லை என்றுணர்கிறேன்" என்று குறித்தேன்.

"அமைதியாக இருக்க எவ்வளவு ஆசைப்படுகிறேன்! மனோசாந்தி அடையும் வீட்டில் வசிக்கவும் எவ்வளவு தூரம் பிரியப்படுகிறேன்!!" என்று மிகுந்த ஆர்வத்தோடு கூறினாள்.

"தங்களுடைய மனை எங்கிருக்கிறது?"

"இக்காலத்தில் எங்குமிருக்கிறது. என் பிதா ஊர்களைச் சுற்றவேண்டி இருக்கிறது. யானும் அவரைப் பின்பற்ற வேண்டியவளாகிறேன். நாங்கள் கொஞ்ச காலத்திற்கு முன்பு தென்தேசத்தில் வசித்து வந்தோம். ஆனால் அஃதோர் பழங்கதை. இந்த உபயோகமற்ற சங்கதியைச் சொல்லித் தங்களைக்கஷ்டப்படுத்தியது எவ்வளவு மடமைத்தனம். தங்களைப் போன்ற புதிய மனிதர்களுக்கு இதை நான் சொல்லாமலிருக்க வேண்டும்" என்று புன்சிரிப்புடன் புகன்றாள்.

"நான் இதுவரையில் தங்களுக்குப் புதியவனே யாயி

னும் இனிமேல் நேயனாகலாமல்லவா?" என்று கேட்டேன். இதைக்கேட்டு திடீரென்று நின்று யோசித்துப் பிறகு "அதைப் பற்றி இன்னொருமுறை பேசாதேயுங்கள்."

"ஏன், பேசக்கூடாது"

"ஏனென்றால்—தாங்கள் எனக்கு நண்பராக இருக்க முடியாது"

"தாங்கள் தனிமையாக இருக்கிறீர்கள்; தங்களுக்கு நம்பிக்கையான நண்பர் அவசியமென்பதை யான் அறிவேன். தாங்கள் இல்லை என்று மறுக்க முடியுமா?" என்று வினவினேன்.

"இல்லை. நான்—நான்—ஆமாம். தாங்கள் சொல்வது, ஹா, முற்றிலும் உண்மையே! இல்லை, என்று எவ்விதம் மறுக்க முடியும்? எனக்கு நண்பரிலர். நான் ஏகாங்கியே" என்று விட்டு விட்டுப் பதிலளித்தாள்.

"ஆயின் என்னை நண்பனாக ஏற்றுக்கொள்ளுங்கள். எவ்விதம் வேண்டு மென்றாலும் பரிக்ஷியுங்கள். நான் பொருத்த முள்ளவனாக இருப்பேன் என்றே எண்ணுகிறேன். நானும் ஏகாங்கியே—ஊர் சுற்றுபவன்தான். உண்மையைச் சொல்வதற்கும், அவர்களுடைய யோசனையைக் கேட்பதற்கும் தகுந்ததோர் நட்பு எனக்கும் அத்தியாவசியம். உண்மையாகவே, ஒரு தனித்த மனிதனுக்கு நல்ல பெண்பிள்ளையை விட மேலான நேயர் வேறிருப்பதாக நான் நினைக்கவில்லை" என்று விளித்துக் கூறினேன்.

"ஆ! இல்லை," என்று தனது இரு கரங்களாலும் தன்னுடைய முகத்தை மூடிக்கொண்டு, "தங்களுக்குத் தெரியவாது—இன்னும் தாங்கள் அறிந்துகொள்ளவில்லை. நீங்கள் இதை ஏன் சொல்லுகிறீர்கள்?" என்று கதறினாள்.

"ஏனு? ஏன் என்று சொல்லவா?" என்று மிகவும் வினயமாக, "ஏனெனின் நான் தங்களைக் கவனித்தேன்—ஏனெனில் தாங்கள் சந்தோஷமில்லாமலிருப்பதை நான் அறிவேன்" என்று நவின்றேன்.

அப்போது தோன்றிய மங்கலான சந்திரனொளியால், அவளுடைய முகம் அடைந்த மாறுதலைத் தெரிந்துகொண்டேன். முகத்தினின்றும் வந்த முத்துப்போன்ற வெயர்வையைத் தன் முன்றானையால் துடைத்துக்கொண்டு, "இல்லை முடியாது; என்னிடம் நட்புப் பாராட்டுவதென்பதை முற்றும் மனத்தினின்று அகற்றுங்கள்—அது முடியாத காரியம்—சிறிதும் முடியாது" என்று நிச்சயமாகக் கூறினாள்.

"அவ்வளவு அதிருப்தியானதா என்னுடைய நேசம்?" என்று கேட்டேன்.

"இல்லை. அப்படியல்ல," என்று என்னுடைய சட்டையின் நுனியைத் தொட்டு "தங்களுக்குத் தெரியவாது—நான் இருக்கும் நிலைமையைத் தாங்கள் அறியீர்கள்—தங்களுக்குவரும் அபாயத்தையும் தாங்கள் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை" என்று புகன்றாள்.

"அபாயமா! தாங்கள் சொல்வதின் பொருளென்ன?" என்று மிகவும் கலங்கினவனாகக் கேட்டேன்.

"தாங்கள் பெருத்த கஷ்டத்திலகப்பட்டுக்கொண்டிருக்கிறீர்கள். தாங்கள் தங்களைப்பற்றியே கவலை எடுத்துக்கொள்ளவேண்டியது அவசியம். தற்காப்பின் நிமித்தம் தாங்கள் எப்பொழுதும் தகுந்த ஆயுதபாணியாக இருத்தல் அவசியம்; ஏனெனில்—" என்று ஏதோ சொல்லப் புகுமுன் நிறுத்திவிட்டனள். "ஏனெனில்—பிறகு?"

என்று நான் வினவ "சரி, ஏனென்றால், ஒருக்கால் தாங்கள், விரோதிகளால் செய்யப்பட்ட சதியாலோசனைக்குள்ளாகவும் இடமுண்டு" என்றனள்.

"தாங்கள் சொல்வதின் கருத்து இன்னதென்று நன்கு விளங்கவில்லை. என்னுடைய விரோதிகள் என்னைக் கெடுக்கும் சதியாலோசனைகள் செய்கின்றதாகச் சொல்லுகின்றீர்களா?" என்று சந்தேகமாகக் கேட்டேன்.

"நான் தங்களை எச்சரிப்பதாவது யாதெனில்—இன்றிரவே இவ்விடத்தை விட்டுப் போய்விடுங்கள். நீங்கள் போகும் விலாசம் எவருக்கும் தெரியவேண்டாம். எங்காவது—தூரதேசத்திற்கு—சென்று விடுங்கள். அங்குபோய் வேறு நாமதேயத்தோடு இருங்கள். நாகநாதன் என்ற பெயரையே பூமி விழுங்கி விடட்டும்" என்று யுக்தி சொல்லினள்.

"ஆயின் என்னுடைய பெயரைத் தாங்கள் அறிவீர்களோ!" என்று ஆச்சரியத்தோடு கேட்டான்.

"நன்றாக அறிவேன் தயவுசெய்து போய்விடுங்கள். இதைச்சொல்லவே தாங்களிருக்கும் இடந்தேடி வந்தது" என்று மறுமொழி பகர்ந்தாள்.

"என்னிடத்தில் கைத்துப்பாக்கி எப்பொழுதும் இருக்கிறது. குறிதவறாமல் சுட நான் நன்கு அப்பியாசித்திருக்கிறேன்" என்று சௌரியமாகப் பேசினேன்.

"ஆபத்து இன்னவிதம் வருமென்று தெரியாததலால் எப்பொழுதுமே தயாராக இருங்கள். நான் உண்மையைச் சொல்லிவிட்டேன். நான் உள்ளே போக வேண்டும்" என்று அவசரமாகக் கூறினாள்.

"ஆயின் தாங்கள் என்னுடன் நட்புக்கொள்ள இஷ்ட

மில்லாதவர்களாக இருக்கிறீர்கள்போலும்? தாங்கள் இந்த சங்கதியை எனக்குச் சொன்னமையால் எனக்கு நட்பாயினீர்" என்று நான் கூறினேன்.

"ஆமாம், ஆனால் உண்மையைத் தாங்கள் அறியீர்கள். அறிந்திருந்தால் என்னை இவ்விதம் கேட்கமாட்டீர்கள். அப்படிக் கேட்பதற்குப் பதிலாக என்னை வெறுப்பதோடு சபிக்கவும் சபிப்பீர்கள்" என்று முடித்தாள்.

"ஆனால் ஏன்?" அவளுடைய வார்த்தையால் தடுமாறியவனாக, "ஏன் தாங்கள் பேசுவது வியக்தமாக இராமல் கூடகமாகவும் இரகசியமாகவும் இருக்கிறது?" என்று கேட்டேன். சிறிது நேரம் மௌனம் சாதித்தாள். அவளுடைய பத்மம்போன்ற வலக்கை எனது புஜத்தின்மீது வைக்கப்பட்டது. மின்சாரத்தை என் தேகத்தின் வழியே செலுத்தி இருந்தபோதிலும் அவ்விதம் அசைந்திருப்பேன் என்று எண்ணவில்லை. உடனே அமிர்தம் பின்வருமாறு பேசலாயினள்.—

"ஏனென்றால், நேசம்—நம்மிருவருள்ளும் நேசம்—என்பது ஒருபொழுதும் கூடாது. அது எனக்கு எவ்வளவு ஆபத்தை யுண்டுபண்ணுமோ அவ்வளவு ஆபத்துக்குள் தங்களையும் ஆழ்த்தும். மரணம்—ஆமாம், எனக்கு மரணம் வெகு சமீபத்திலும் சீக்கிரமாகவும் இருக்கிறது—ஒருக்கால் இன்றிரவேவரினும் வரும், அல்லது நாளை வந்தாலும் வரும். அதை எப்பொழுதுமே நான் எதிர்பார்க்கிறேன்—தயாராகவும் இருக்கிறேன். எல்லாவற்றையும் நான் இழந்துவிட்டேன். திரும்பி யடைய முடியாமல் இழந்து விட்டேன். நான் தங்களைக் கேட்பதெல்லாம் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும்படியே யொழிய வேறில்லை. நான் சொல்லுவதைத் தயவுசெய்து கேளுங்

கள்—நேரம் இருக்கையிலேயே தப்பித்துக் கொள்ளுங்கள்—தங்களுடைய விரோதிகளின் கைகளினின்று, நேரமிருக்கும்போதே தப்பித்துக்கொள்ளுங்கள். இந்த உண்மையைச் சொன்ன ஒரு ஸ்திரீயை—நண்பர்கள் அற்ற ஒரு ஸ்திரீயை தாங்கள் நினைத்தலும் கூடும்" என்று கூறினாள்.

"நான் தங்களுடைய நண்பனாக இருப்பேன்!" என்று மறுமுறையும் கூவினேன்.

"கூடாது; ஒரு பொழுதுங்கூடாது. உயிரைப்பற்றிய விஷயத்தில் வீண் சௌரியம் பயன்படாது. நன்றாக யோசித்து—ஓடி விடுங்கள். தங்களை எவரும் பின்தொடரவில்லையா என்பதையும் பார்த்துக் கொள்ளுங்கள். நாம் ஒரு பொழுதும் நேயர்களாக இருக்க முடியாது என்பது மட்டும் ஞாபகமிருக்கட்டும். நாம் நேயர்களாவது உயிருக்கே கேட்டை விளைவிக்கும்" என்று சொல்லியவள் திரும்பிக் கீழே தன் அறைக்குச் சென்றனள்.

அதுவரையில் கேட்ட விஷயங்களால் ஊமையைப் போலாயினேன். அவளுக்கு உண்மை எவ்வளவு தெரியும் என்று கேட்க எண்ணித் திரும்பிப் பார்க்கையில் எம்மிருவருக்கும் நடந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த ஓர் உருவம் தோன்றி மறைந்தது. அதுவரையில் அப்படி யொருவன் நின்றதையே நான் கவனிக்கவில்லை.

## மூன்ருவது அத்தியாயம்

### நம்முடைய நேயத்தையல்ல

அதனுடைய பொருள் என்ன? நாங்கள் இருவரும் பேசியதைக் கேட்டுக்கொண்டிருந்த நீண்ட உருவம் யார்? அவன் எம்முடைய சம்பாஷணையைக் கேட்கக் காரணம் என்ன?

ஒரு விஞடியில் அமிர்தாசொன்ன எச்சரிப்பு வார்த்தைகள் யாவும் ஞாபகத்திற்கு வந்தன. அவள் சொல்லியபடி ஓடி ஒளித்துக் கொள்ளலாமா, அல்லது அவர்கள் அனைவரையும் போலீஸாரிடம் பிடித்துக் கொடுக்கலாமா என்று யோசித்தேன்? அந்த மனிதனைப்பற்றி சத்திரத்தில் வந்து விசாரித்ததில் அவர் ஒரு பூசாரி என்றும், அவருடைய பெயர் சதாசிவ பண்டாரம் என்றும் சத்திரக் கணக்கன் புகன்ருன். அன்றிரவு மட்டும் அங்கு தங்கியிருப்பதாகவும் மறுநாட் காலையில் புறப்பட்டுப்போய் விடுவதாகவும் தெரிய வந்தது. அமிர்தா எச்சரித்ததையும், பூசாரி கேட்டுக் கொண்டிருந்ததையும் மனத்தில் எண்ணிக்கொண்டே என்னுடைய அறையை அடைந்தேன்.

மறுநாட்காலை பதிஞேருமணி சுமாருக்குச் சத்திரத்தின் பின்புறத்திலுள்ள தோட்டத்திற்குச் சென்று பார்க்கையில் அமிர்தா ஒரு புஸ்தகத்துடன் ஒரு விருக்ஷத்தின் நிழலில் வீற்றிருந்து படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய சமீபத்தில் ஒரு நெட்டையான மனிதன் உலாவிக் கொண்டிருந்தார். அவரை நன்ருகப் பார்க்கையில் அவரே எங்களுடைய சம்பாஷணையை முதல் நாள் இரவு

கேட்டுக்கொண்டிருந்தவரென்று நன்கு தெரிய வந்தது. ஆழ்ந்த யோசனை உடையவரென்றும், யோக்கியரென்றும், தேவதா பக்தி வாய்க்கப் பெற்றவரென்றும் அவரைப் பார்த்த மாத்திரத்தில் தெரிந்து கொள்ளலாம். அவரைப் பார்த்தது முதலே அவரிடத்தில் எனக்கு ஒருவிதமான பற்றுதல் உண்டாயிற்று. ஆயினும் அமிர்தாவுக்கும் அவருக்கும் என்ன சம்பந்தம்? நேசத்தின் இரகசியந்தான் என்ன? ஈசனே அறிவார்.

தான் சொன்ன சொல்லை உறுதிப்படுத்த எண்ணங்கொண்ட அவர், அமிர்தா பயந்தவளாகக் காணப்படினும் தன்னுடைய இடக்கையின் முன் விரலால் வலக் கையில் குத்திக்கொண்டு பேசினர். அவள், அவர் சொல்லியதற்கு எதிர்ச்சொல்லும் சொல்லவில்லை, பதில் கூறவும் இல்லை. எங்களைப்போல அச்சத்திரத்தில் தங்கி இருக்கும் அநேகர் அங்கு வந்துலாவா நின்றனர். அவர்களில் பத்திரிகைப் படிப்போரும் நவீனகங்கள் படிப்போருமாகச் சிலர் இருக்க மற்றும் பலர் தத்தம் நேயர்களோடு உரையாடிக் கொண்டிருந்தனர்.

அமிர்தாவும் சதாசிவ பண்டாரமும் பேசிக்கொண்டிருக்கையில் அவர் அச்சமயம் சொல்லியதற்குக் கொஞ்சமும் மனமிசைந்தவளாகக் காணப்படாததோடு அதிவிறைவாக மறுத்துங் கூறினள் என்று தெரியவந்தது. உடனே சதாசிவ பண்டாரம் அவளுடைய தோளில் கையைவைத்து ஏதோ பேசியதானது தான் சொன்னதின் உண்மையை அவளுக்கு விவரித்துக்கூறி சமாதானம் செய்கிறார் என்று ஊகிக்கும்படி இருந்தது. பிறகு நான் நின்றுகொண்டிருந்த பக்கமாக அவள் திரும்பவே என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள்; நானும் தலையை

அசைத்து என் வழியே போவோன் போலச் செல்லுகையில் சதாசிவபண்டாரமும் என்னைப் பார்த்தார். நான் அவரைச் சந்தேகியாதவன்போலப் பார்த்து நடந்தேன். ஒருமணி நேரம் வரையில் அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். பிறகு அந்த ஏரியில் ஒரு படகு வரக்கண்டு சதாசிவபண்டாரம் அமிர்தாவிடம் விடைபெற்று ஏகினர்.

அவர் சென்றவுடன் நான் அமிர்தாவை அணுகினேன். அவள் உடுத்தி யிருந்த மெல்லிய ஆடையின் வழியே அவளுடைய தேககாந்தி பிரகாசித்தது. அவள் அழகிற்கு இணை அவளே என்னும் விதமாக இருந்தாள். நான் சமீபித்தவுடன் மரியாதையாகத் தன் இருக்கையிலிருந்து எழுந்து "ஆ, நாகநாதரே!" என்று வருத்தத்தோடு கூவி "நான் நேற்று இரவு சொல்லியதை ஏன் இலக்ஷியம் செய்யவில்லை? தாங்கள் ஏன் இன்னும் செல்லவில்லை? சென்று விடுங்கள். நேரமாவதற்கு முன்சென்று விடுங்கள்" என்று கெஞ்சும் விதமாகப் பேசினள்.

"அமிர்தா, தாங்கள் சொல்வது இன்னும் இரகசியமாகவேயல்லவா இருக்கிறது. நான் இவ்விடத்தைவிட்டு ஏன் போகவேண்டும்? அப்படி என்ன அபாயம் என்னைச் சூழ்ந்திருக்கிறது?" என்று நான் வினவினேன்.

"ஒருபெருத்த அபாயம்; தங்களுடைய பிராணனைக் காப்பாற்றவேண்டுமானல் இவ்விடத்தைவிட்டு இக்ஷணமே ஏகுங்கள்" என்று இரகசியமாகச் சொன்னள். "என்னுடைய விரோதிகளென்று தாங்கள் சொல்லும் மனிதர் யாவர்! நான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியாவது நீங்கள் அதைச் சொல்லவேண்டும்" என்றேன்.

"தாங்கள் ஜாக்கிரதையாக இருப்பதென்பது இவ்

விடத்தை விட்டு ஓடவேண்டிய தொன்றே" என்று நவின்ருள்.

"என்ன உத்தேசிக்கப் பட்டிருக்கிறது என்று தாங்கள் சொல்லக்கூடாதா? எனக்கு விரோதமாக ஏதேனும் சதியாலோசனை நடந்தால், என்மீது நட்புரிமை பாராட்டும் தாங்கள் உண்மையை வெளியிடுதல் தங்களுடைய கடமையன்ரு?" என்று வினவினேன்.

"நான் தங்களுடைய சிநேகிதி யல்லவென்று ஏற்கனவே நேற்றிரவு சொல்லிவிட்டேனல்லவா? நம்முடைய நேயம் மறுக்கத்தகுந்தது" என்று மறுமொழி தந்தாள்.

"நான் அறிந்தவரையில் இப்புவியில் எனக்கு விரோதி என்பதே கிடையாது. என்னை அறியாத மனிதர்களைப்பற்றி நான் பயங்கொள்ளுவானேன்?" என்றேன்.

"ஆ! நான் ஏற்கனவே சொல்லியவற்றைக் கவனிக்கமாட்டீர்களா? இப்பொழுதே சென்னையை நோக்கிச் செல்லுங்கள். இந்த அபாயம் நீங்குகிறவரையிலேனும் வெளிவராமலிருங்கள்" என்று பயத்தால் நடுக்குற்றவளாகப் பேசினுள்.

"'இந்த இரகசியமான அபாயத்திற்காகச் சிறிதும் யான் பயப்படவேண்டிய அவசியமில்லை. நான் எப்பொழுதும் தயாராக இருக்கின்றமையால் அவர்களால் என்னை எதிர்ப்பதென்பது முடியாதகாரியம்" என்றேன்.

"அவர்கள் நேராகவந்து எதிர்ப்பார்கள் என்று நினைக்காதேயுங்கள். தங்களுக்குத் தெரியாமலும், தாங்கள் சிறிதும் சந்தேகப்படாமலிருக்கும்பொழுதுமே வந்து சூழ்ந்துகொள்ளுவார்கள். பிறகு அதினின்றும் வெளிவருவதென்பதைக் கனவிலும் நினைக்கவேண்டாம்"

"நாம் நேற்றிரவு பேசிக்கொண்டிருக்கையில் யாரோ

மறைந்திருந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள் போன்றிருந்தது. நான் கவனித்தது சரியாக இருக்குமாயின் இப்பொழுது பேசிக்கொண்டிருந்து சென்ற பூசாரியே அவர் என்று ஊகிக்கிறேன். அவர் யார்?" என்று வினவினேன்.

"அவர்தான் சதாசிவபண்டாரம். எனக்கு வெகு நாளைய நண்பர். எனது தந்தையரின் அத்தியந்தநேசர். அவருக்கு நான் மிகவும் கடமைப்பட்டவள். அவர் இங்கிருந்தார் என்பது ஒருமணி நேரத்திற்கு முன்புங் கூட எனக்குத் தெரியவராதே. அவரை நான்பார்த்து ஒரு வருஷமாகிறது. நாங்கள் தஞ்சை ஜில்லாவைச்சேர்ந்த ஒரு கிராமத்தில் வசித்துவந்தபொழுது இவர் ஒருவரே எங்களுடைய நண்பர்" என்று விஸ்தாரமாகப் பதில் பகர்ந்தாள்.

"அவர் நாம் பேசியதை மறைந்திருந்து கேட்பானேன்?"

"அவர் அப்படிச் செய்தார் என்பது எனக்குத் தெரியாது. அப்படி நேர்ந்தபோதிலும் அவர் வேண்டுமென்று செய்திருக்கமாட்டார். தற்செயலாய் அங்கு வந்திருக்க வேண்டும். மேலும் சதாசிவபண்டாரத்தினிடத்தில் தாங்கள் சிறிதும் பயங் கொள்ள வேண்டிய அவசியமன்று. அவரும் அவருடைய மனைவியும் மிக்க நல்லவர்கள். அவளுடைய தாயார்வீட்டில் அவள் இருப்பதால் அவளைச் சந்திப்பதற்கே இப்பொழுது அவர் செல்லுகிறார்" என்று பதிற் கூறினாள்.

"தங்களுடைய தகப்பனார் ஊரிலில்லை என்றெண்ணுகிறேன்" என்று பேச்சை வேறுவழியில் திருப்பினேன்.

"ஆமாம் அவர் சொந்தக்காரியமாகப் போயிருக்கி

ளுர்; இன்றிரவுவரையில் திரும்பார் என்று நினைக்கிறேன்" என்ருள்.

" இன்னும் எவ்வளவு தினங்கள் நீங்கள் இங்கிருப் பீர்கள் ?"

"யார் கண்டார்கள்? எங்களுடைய வாசம் எவ்வளவு நிச்சயமற்றதோ அவ்வளவு நிச்சயமற்றது எம்முடைய பயணம். இன்றிரவே பிரயாணமாகி இந்தியாவை விட்டு வெளியே போனுலும் போய்விடுவோம்; அல்லது இந்த சத்திரத்திலேயே பலமாதங்கள் இருக்கும்படி நேர்ந்தா லும் இருப்போம்?" என்று விடையளித்தாள் அமிர்தா.

" நான் போய்விட வேண்டியதைப்பற்றித் தாங்கள் ஏன் அவ்வளவு கவலைப்படுகிறீர்கள் ? தங்களுக்கு நேயர் அவசியமேயாயினும் என்னை ஏன் நட்புக்கொள்ளேன் என்கின்றீர்கள் ?" என்று-மீண்டும் வினவினேன்.

" ஏனெனில், ஹோ ! தாங்கள் என்னை நேசிப்பது தகாதென்று அப்பொழுது நான் சொல்லவில்லையா ?"

"என்னுடைய இரகசியமான விரோதி யார் என் பதை என்னிடம் ஒளியாமல் சொல்லவேண்டும்" என்று வினயமாகக் கேட்டேன்.

சிறிதுநேரம்வரையில் அவள் பேசாதிருந்தமை கண்டு என்னை ஏமாற்றவே எண்ணங்கொண்டிருக்கிருள் என நினைத்து நான், " தங்களுடைய தகப்பனுருக்கு விரோத மாகவா என்னை எச்சரிக்கிறீர்கள் ? அவருக்குப் பயந்தா என்னை இவ்விடம் விட்டுப் போகும்படி சொல்லுகிறீர்கள்? வரும் அபாயத்தை இலக்ஷியம் செய்யாமல் நான் இருந் தால் என்று மறுபடியும் வினவினேன்.

" சிற் சில சமயங்களில் அபாயத்தை இலக்ஷியம்

செய்யாமலிருப்பது உசிதமன்று—ஆகையால் தாங்கள் பயமற்றிருக்கவேண்டுமானால் இவ்விடத்திலிருந்து தப்பிப் போகவேண்டும் இவைகளைத்தவிர யான் யாதொன்றும் சொல்லுவதற்குத் தயாராக இல்லை" என்று மறுமொழி சொன்னாள்.

"அமிர்தா, தங்களுடைய வார்த்தை மிக்க விசித்திரமானதாகவே இருக்கிறது. நம்மிருவருடைய நிலைமையும் விநோதமாகத் தோன்றுகின்றது. தாங்கள் என்னுடைய நட்பினளாக இருந்தும் என்னுடைய விரோதியைப்பற்றி வியக்தமாகப்பேசேன் என்கிறீர்கள்" என்றேன்.

சிறிதுநேரம் மௌனம் சாதித்தபிறகு நான் சொல்லும் வார்த்தைகளைப் பொருட்படுத்தி உடனே இவ்விடத்தை விட்டகலமாட்டீர்களா? இதைத் தங்களுடைய நன்மையை உத்தேசித்தே நான் சொல்ல வாரம்பித்தேன்" என்று கூறினாள்.

"எனக்குத்தெரியாத ஒரு விரோதியைப்பற்றி யான் பயங்கொண்டு இவ்விடம் விட்டகலுவானேன்? நான் எவருக்கும் தீங்கு செய்தவனல்லனே! அப்படி இருக்க என் மீது பகைமை பாராட்டக்கூடிய மனிதன் எவனோ?" என்று சந்தேகமாய்க் கேட்டேன்.

"ஆ, எனக்கு எவ்விதம் தெரியும்! நாம் சந்தேகிக்காத எவ்வளவோ இடங்களில் நமக்குப் பகைவர் இருக்கின்றனர். நாம் எவரை அத்தியந்த நண்பராகப் பாவித்திருக்கிறோமோ அவரே ஒருகால் ஜன்ம விரோதிகளாகிறார். ஆதலால் ஒருவரோடு நேசம்செய்யுமுன் நன்றே யோசிக்கவேண்டுவது அவசியம்" என்று பயத்துடன் கூறினாள்.

" தாங்கள் சொல்லுவது முற்றும் உண்மையே ; ஒரு போலி நட்பினைவிட இரக்கமற்ற பகைமை சிலாக்கியமானது. என்மீது ஏற்பட்டிருக்கும் பகைமைக்குக் காரணம் யாதென்றுமட்டும் அறிய மிக்க ஆவலுள்ளவனாக இருக்கிறேன் " என்று குறித்து " தங்களுடைய தகப்பனார் எங்கு சென்றுளார் ?" என்று உசாவினேன். " பக்கத்து கிராமத்திலிருக்கும் அவருடைய நேயர்களைப் பார்க்கப்போயிருக்கிறார் என்று நினைக்கிறேன் " என்று பதிலுரைத்தாள்.

" அவர்கள் யாவர்?"

" அவர்கள் என் தகப்பனாரின் வியாபார நேயர்கள். எனக்கு அவர்களைப்பற்றி அதிகமொன்றும் தெரியவராது. அவர்களெல்லோரும் ஏதோ ஒரு சுரங்கவேலையில் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் என் தகப்பனை அடிக்கடி சந்திப்பதுண்டு. சென்றமாதத்தில் டோடன்னில் சந்தித்தனர்."

இவ்வசனம் எனக்கு வியப்பைக்கொடுத்தது; அவர்களை, வியாபாரக் கூட்டாளிகளாகிய அந்த மனிதர்களை— அவ்வளவு இரகசியமாகச் சந்திக்க காரணமென்ன? அவர்கள் நள்ளிருளில் மோட்டார் வண்டியில் வருவானேன் ? என்று இவை போன்ற பல எண்ணங்கள் ஞாபகத்திற்கு வரினும் நான் முதல்நாளிரவு கண்டதை அவளிடம் கூறவில்லை.

" இங்கிருந்து மாலை இரண்டுமணிக்கு இரயில் புறப்படுகின்றது. அதில் புறப்பட்டுச் சென்று விடுங்கள்;" என்று எனக்கு சொல்லி என்னையோர் முறை பார்த்ததானது என்னைக் கெஞ்சும்பாவனையாக இருந்தது. "இல்லை, அமிர்தா" அவள் கேட்டதற்கு மறுமொழியாக " இப்

பொழுது இருக்கிறநிலைமையில் இவ்விடத்தைவிட்டு யான் அகலேன். இங்கு என்ன அபாயமிருந்தபோதிலும், இருந்து அனுபவிப்பதையே நான் மிகவும் விரும்புகிறேன்" என்றேன்.

"ஏன்? என்று கலங்கியகண்களுடன் பலமாகக் கூவினாள்."

"ஏனென்றால், தங்களுக்கு ஒரு நண்பன் அவசியமென்றும், தாங்கள் அபாயத்திலே இருக்கிறதாகவும் ஒப்புக்கொண்டமையால் தங்களைப் பாதுகாத்துக்கொண்டு சமீபத்திலிருப்பதையே விரும்புகிறேன்" என்று உத்தரம் கொடுத்தேன்.

"ஆ!" என்று அலறி "தாங்களாகவே வலையில் அகப்படுவதை அறியீர்கள். தயவுசெய்து சென்று விடுங்கள்—அவசியம் தாங்கள்செல்லவேவேண்டும்—நாகநாதரே என்னிமித்தமேனும் போவது அவசியம்"—என்று வற்புறுத்தினள்.

"என்னைப்பற்றி நான் இலக்ஷியம் செய்யவில்லை. தங்களுடைய நிமித்தமே இங்கிருக்க எண்ணங்கொள்ளுகிறேன்" என்றேன்.

"என்னைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டியதில்லை, உடனே கல்கத்தாவுக்காவது சென்று விடுங்கள்" என்று மறுமுறை ஆக்ஞையிட்டாள்.

"கல்கத்தாவுக்குப் போய் தங்களை மறந்துவிடச் சொல்லுகின்றீர்களோ?" என்று வினவினேன். இன்றையத்தினம் இவ்விடத்தை விட்டுச் செல்லுவீர்களேயானால் ஒருக்கால் தங்களை யான் கல்கத்தாவில் சந்திக்கவும் ஹேதுவுண்டு" என்றனள்.

"ஒருக்காலா! ஒருக்காலென்பது நிச்சயமற்ற வார்த்தையல்லவா ?" என்று கேட்டேன்.

"தங்களுக்கு நிச்சயமாக வாக்குக்கொடுக்கவேண்டுமேயானுல் இதோ வாக்குக் கொடுக்கிறேன். எதை வேண்டுமென்ருலும் செய்வதாய் வாக்குக்கொடுக்கிறேன் தங்களை நான் கல்கத்தாவில் அவசியம் சந்திப்பேன்— என்னை அதுவரையில் அபாயம் சூழாமலிருந்தால்—" என்று வாக்குத் தத்தம் செய்தாள்.

"தங்களை அபாயம் சூழ்வதென்பது என் உயிர் உள்ள வரையில் இல்லையென்றே நிச்சயம் செய்துகொள்ளலாம். இப்பேர்ப்பட்ட சமயத்தில் தங்களை விட்டு விலகுவது என்னுடைய ஆண்மைத்தனத்திற்குப் பொருந்துமா? ஆகையால் தங்களைவிட்டுப் பிரிய முடியாது" என்று நிச்சயமாகக் கூறினேன்.

"வேண்டாம்; நாகநாதரே வேண்டாம்—இப்பொழுதே சென்று தங்களுடைய பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். தாங்கள் விரும்பும் பக்ஷத்தில், நாம் கல்கத்தாவில் சந்திப்போம். நம்முடைய சந்திப்பு இரகசியமாக இருக்கும்" என்று கூறி என்னை நோக்கினுள்.

"இது உண்மைதானு ? என்று கேட்டு என்னுடைய கையை நீட்டினேன். உடனே அதை எடுத்து தன்னுடைய கண்களில் ஒற்றிக்கொண்டு—

"ஆமாம்; இஃது உண்மைதான். தங்களின் கல்கத்தா விலாஸத்தை மட்டும் கொடுத்துச் செல்லுங்கள். அங்கு வந்து விருத்தி செய்துகொள்ளுவோம். நம்முடைய அறிமுகத்தை—நம்முடைய நேயத்தையல்ல!—அது ஒருபொழுதும் முடியாது" என்று உறுதியாகக் கூறினுள்.

## நான்காவது அத்தியாயம்

### உண்மையைச் சொல்லிவிடுவேன்

எனது மோட்டார் வண்டி, என்னால் வாங்கப்பட்ட கல்கத்தா வைத்திய கலாசாலை வீதியிலுள்ள வீட்டின் வாசலில் நிறுத்தப்பட்டது. நான் இறங்கி உள்ளே சென்றேன். வியாபாரத்தில் மிகுந்த அப்பட்டணம் எனக்கு மனோஹரமாக இருக்கவில்லை. நான் தனவந்தனான பிறகு வாங்கிய வீடு நான்கு அடுக்கு மாளிகைகளை யுடையது. மாதம் ஒன்றுக்கு வாடகை இருநூறு ரூபாயிற்கு மேல் வரும். ஆயினும் அதை என்னுடைய சொந்த உபயோகத்திற்கு வைத்திருந்தேன். அவ்வளவு பெரிய வீட்டில் யான் ஒருவனாக வாஸம்செய்ய வேண்டும் படியாக இருக்கிறதே என்று மனம் நொந்தேன். மனையாட்டி இல்லாத கிரகத்திற்கு மனையென்ற பெயர் பொருத்தமற்றதென்றும், கானகத்தே விருக்ஷங்களின் அடியில் அவளுடன் இருப்பதே மாளிகையில் வசிப்பதை யொக்கும் என்று சொல்லப்பட்டிருக்கும் சம்ஸ்கிருத சுலோகம் ஞாபகத்திற்கு வந்து என்னை மிகவும் வருத்தியது. ஒரு கடிதம் எழுத நினைத்து மேஜையின் அண்டையில் போய் உட்கார்ந்த உடனே எனது வேலையாளன் உட்பிரவேசித்து "பூசாரி போன்ற ஒருவர் ஒரு மணி நேரத்திற்கு முன்பு வந்தனர். தாங்கள் வீட்டில் இருக்கின்றீர்களா வென்று வினவினர். தாங்கள் வெளியே சென்றிருப்பதாய் நான் மறுமொழி கூறியவுடன் தங்களுடைய விஷயங்களைப் பற்றி அனுவசியமான கேள்விகள் கேட்கத் தலைப்பட்டார். நான் அவ்விதம் பேசியது சரியன்றென்பதை இப்பொழுதே உணருகிறேன். அவருடைய பெயரைச்சொல்ல

சம்மதியாததால் அவர் கேட்டதற்கு நான் யாதொரு மறு மொழியும் சொல்லவில்லை. தாங்கள் யார் என்றும் கொஞ்ச நாட்களுக்கு முன்னர் எங்கு சென்றிருந்தீர்கள் என்றும் வினவினர்" என்றான்.

"நீ செய்தது ரொம்பவும் சரி; அம்மனிதன் எப் பேர்ப்பட்டவன்?" என்று உசாவினேன்.

"அவர் நடுத்தரமான உயரமாயும் நீண்டு வெளுத்த முகத்தையுடையவராயும் இருந்தார். பேசும் பேச்சுகளை இழுத்தாப்போல் பேசினர்" என்றான்.

இவைகளைச் சற்று சிந்தித்தேன். சற்றுமுன் வந்த வர் சதாசிவபண்டாரமே என்று ஊகித்துக்கொண்டேன். அவ்வளவு சீக்கிரம் அவர் அங்கு வரவேண்டிய காரணத் தையும், என்னைப்பற்றி இரகசியமாகச் செய்யும் விசாரணை யையும் பற்றி யோசிக்கையில் அவரும் என்னுடைய இரகசியமான விரோதிகளில் ஒருவர் என்றே நிச்சயம் செய்துகொண்டு,

"அவர் பின்னும் ஒருமுறை வருவாராயின், அவ ருடன் நான் பேசவேண்டுமென்று சொன்னதாகச்சொல். நான் வெளிநாடுகளுக்குச் சென்றிருந்தபொழுது அவ ரைச் சந்தித்திருக்கிறேன்" என்று கூறினேன்.

"தங்கள் இஷ்டம்போலவே செய்கிறேன்," என்று மறுமொழிசொல்லிய எனது வேலையாளன், "அவர் மறு முறை வருவாரென்று நான் எண்ணவில்லை. நான் அவ ரிடத்தில் முரட்டுத்தனமாக நடந்துகொண்டேன்" என்று முடித்தான்.

"நீ முரட்டுத்தனமாக நடந்தது சரிதான். என்னைப் பற் றிய எந்த விஷயத்தையும் அவருக்குச் சொல்லாதே" என் றேன். உடனே அவன் வெளியே சென்றான். நான் மேஜை யின்பேரில் சாய்ந்து யோசித்த வண்ணம் இருந்தேன்.

நான் நடந்துகொண்டது எவ்வளவு முட்டாள்தனம். அமிர்தா சொல்லிய ஒவ்வொரு வார்த்தையும் ஞாபகத்திற்கு வந்தது. என்னை இரகசியத்தில் இங்கு சந்திப்பதாகப் பாசாங்கு செய்து வெற்றி பெற்றனள். அவள் என்னைச் சந்திப்பதில் இரகசியமென்ன இருக்கிறது? அப்பெண்மணியின் அழகிய உருவம் சதா என்முன் தோன்றிக்கொண்டிருந்தது. முதல் இரண்டு மூன்றுநாட்கள் வரையில் அவளைப் பிரிந்ததைப் பற்றி மிகுதியும் வருந்தினேன்.

அவளுடைய நண்பரான பூசாரி என்னைப்பற்றி விசாரிக்கவேண்டிய அவசிய மென்ன? என்னையும் என்னுடைய பொருள் முதலியவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டி வந்தனரோ? அப்படியானால் அதன் காரணமென்ன? எனக்கும் அவருக்கும் சம்பந்தமென்ன? தான் அவருக்கு மிக்கக் கடமைப்பட்டவளென்று அமிர்தா சொன்னதின் பொருளென்ன? அவர் என்மீது அக்கறை பாராட்டுவானேன்? அவரிடமிருந்து இராங்கையா, அவருடைய குமாரி, முதலியவர்களின் இரகசியத்தை அறிய எண்ணங்கொண்டேன். சற்று நன்றே யோசித்ததின் மேல் அப்படிச் செய்வதால் அமிர்தா கோபங்கொள்ளுவளோ வென்று சந்தேகித்துக் கொஞ்சம் நிதானித்தேன். வந்த பூசாரியை எனது வேலையாள் முரட்டுத்தனமாகப் பேசியதற்கு மன்னிக்கும்படியாகக்கேட்கும் பாவனையாகப் போய்ப் பேசலாமென்று நினைத்தேன். எந்தவிதத்திலேனும் அமிர்தாவையும் அவளுடைய தந்தையையும் பற்றி உண்மையை அறிய நான் எவ்வளவு ஆவலுடன் இருந்தேன் என்பது எனக்கே சொல்ல முடியவில்லை.

சின்னாட்கள் யோசித்து சதாசிவ பண்டாரத்தைப்

போய்ப் பார்க்க எண்ணங்கொண்டு கல்கத்தாவிலிருந்து புறப்பட்டு சந்திரகாசி இரயில்வே ஸ்டேஷனில் இறங்கி அவருடைய வீடுபோய்ச் சேர்ந்தேன்.

அவருடைய வாசலையடைந்து உட்செல்ல அதற்குள் அழகிய உபவனமும் அவ்வுபவனமத்தியில் சிறிய வீடும் காணப்பட்டன. சதாசிவ பண்டாரம் வீட்டிலிருப்பதாய் அவருடைய வேலைக்காரியால் அறிந்துகொண்டு உள்ளே சென்றேன். நடுக்கூடத்தில் பண்டாரத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கையில் அநேகம் இராஜாரவிவர்மா படங்களும் பல புகைப்படங்களும் சுவரில் தொங்கவிடப்பட்டிருந்தன. அவைகளைப் பார்க்க எண்ணி சமீபத்தில் சென்றேன். காமதேனுவின் படமொன்று மிக்க விசித்திரமானதாகக் காணப்பட்டது. அதனுடைய அங்க முழுவதிலும் இந்திராதி தேவதைகளின் இருப்பிடங்களும் பிர்மா, விஷ்ணு, உருத்திரன் முதலிய திருமூர்த்திகளின் ஸ்தானங்களும் அவரவர்களுடைய உருவங்களுடன் குறிக்கப்பட்டிருந்தன. அந்தக் காமதேனுவின் கீழாக பார்சீகர், அரேபியர், ஐரோப்பியர், இந்தியர்களாகிய நால்வரும் "எனக்குப் பால்கொடு, எனக்குப் பால்கொடு" என்று கேட்கும் பாவனையாகக் கையில் பாத்திரங்களுடன் உட்கார்ந்திருக்குமாபோல் வரையப்பட்டிருந்தனர்.

அந்த விசித்திரமான படத்தைப்பார்த்துத் திரும்புகையில் அதன் பக்கத்திலொரு புகைப்படம் தொங்கவிடப்பட்டிருந்தது. அஃதோர் அழகிய பெண்மணியினுடையது என்றும் அவள் அப்பொழுதே யுவதித்தன்மை அடைந்திருக்கவேண்டுமென்றும் அவ்வுருவத்தினின்றும் தெரிந்துகொண்டேன். அதைப்பார்த்த மறுநிமிஷத்தில் திகைத்துப்போய் நின்றுவிட்டேன். அப்படம் அவ்விடத்

திற்கு வரவேண்டிய காரணம் யாதென்று யோசித்தேன். யோசனை பயனற்றதாகப்போயது. அப்படம் என் அன்பைக் கவர்ந்த அமிர்தாவினுடையதே! அதைக் கூர்ந்து கவனிக்க எண்ணி அதிக சமீபத்தில் சென்றதும் ஏதோ சப்தம்கேட்டது. உடனே திரும்பிப் பார்க்க கதவைத் திறந்துகொண்டு சதாசிவபண்டாரம் தோன்றினார்.

என்னைப்பார்த்த அவர் திடீரென்று நின்று மறுபடியும் இரண்டடி எடுத்துவைத்து "நான் பார்ப்பது சரியாயின் என் எதிரில் நிற்பது நாகநாதர் என்றெண்ணுகிறேன்" என்றார்.

"ஆமாம்," என்று புன்னகைபுரிந்து "தாங்களும் நானும் ஒரேமுறை இரம்பாவில் எதிர்ப்பட்டோமாயினும் என்னைத்தாங்கள் அடையாளம் கண்டுபிடித்தது மிகவும் வியப்பைக் கொடுக்கிறது. தங்களுக்கு அனுவசியமான தொந்தரவைக் கொடுத்தமைக்கு மன்னிப்புக்கேட்கிறேன். எனது வேலையாள் என்னைத்தேடிவந்த கனவானை முரட்டுத்தனமாகப்பேசி அனுப்பிவிட்டதாக, அவன் சொன்னான். அங்க அடையாளங்களால் தாங்கள்தானென்றும் தெரிந்துகொண்டு இன்றையத்தினம் இங்குவந்துளேன். ஆகையால்—" என்று முடிக்குமுன் "நாகநாதரே! ஒரு வேலைக்காரன் செய்யவேண்டிய கடமையை அவன் செய்தானே யொழிய வேறில்லை. என்னுடைய இழிவும் அகௌரதையுமான வேலைக்குத் தகுந்த வண்ணம் பதில் கூறாமல் இருந்தது குற்றமாகாது" என்று பேசி முடித்தார்.

"தாங்கள் என்னைப் பார்க்க வந்தது இழிவும் அகௌரதையுமாகுமா?" என்று வினவ,

"அகௌரதை என்பதும் இழிவு என்பதும் அவரவர்களுடைய மனோ தர்மத்திற்கும் புத்திக்கும் எட்டியவாறு

இருக்கும். ஒருவனுக்கு கௌரதையாக இருக்கும் விஷயம் மற்றவனுக்கு அகௌரதையாக இருப்பது சர்வசாதாரணம். தங்களைப்பற்றிய சில கேள்விகள் கேட்டேனே யன்றி வேறில்லை" என்று மறுமொழி தந்தார்.

"ஏன் ?" என்று நான்கேட்க,

அவர் தன்னுடைய நாற்காலியை என்னுடையதற்குச் சமீபமாக இழுத்துக்கொண்டு பக்கத்தே இருந்த ஒரு "சிகரட்" பெட்டியை எடுத்துக் கொடுத்து, "தாங்கள் புகைபிடிக்கும் வழக்கம் உண்டென நினைக்கிறேன்" என்றார்.

"இல்லை"

"வங்காளத்திலுள்ளவர்களில் அநேகர் உபயோகிக்கின்றார்களே ?"

"அவர்கள் ஒருக்கால் உபயோகிக்கலாம். எனக்கு வழக்கமில்லை ; தாங்கள் என்னைப் பார்க்க வந்தது எது பற்றி ?" என்று வினவினேன்.

"நாகநாதரே, தாங்கள் யார்என்பதை அறியவேண்டுமென்னும் ஓர் அவாவால் தூண்டப்பட்டு வந்தேன்" என்றார்.

"அப்படி இருக்கலாம் என்றே யானும் நினைத்தேன். ஆயினும் என்னுடைய விருத்தாந்தத்தை அறியும்படியான அவா தங்களுக்கு ஏற்பட யாது காரணம் ? என்னுடைய பெயரையாவது, எனது அந்தஸ்தையாவது எவருக்கும் மறைத்தவ னல்லேன்" என்றேன்.

"தாங்கள் மறைத்திருக்கலாம், நன்றாக யோசித்துப் பாருங்கள்" என்று சொல்லி என்னுடைய பதிலை எதிர்பார்த்த விதமாக நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டார்.

"ஐயா, தாங்கள் சொல்லுவதின் பொருள் யாதென

விளங்கவில்லை" என்று சந்தேகமாகக் கேட்டேன். "அநேகமாய்த் தெரியாமலுமிருக்கலாம். தங்களுடைய இரகசியத்தின் நடுவே வரவேண்டு மென்னும் அவா வுடையே னல்லேன். நான் சாதாரணமாக வந்து எதைத் தெரிந்துகொள்ள எண்ணினேனே அதை, தங்களுடைய வேலையாள் கோபமாகப் பேசியபோதிலும், அறிந்து கொண்டு வந்தேன்" என்று சொன்னார்.

"என்ன எண்ணத்துடன் தாங்கள் கேட்டீர்கள்?" என்றுகேட்டேன். "உண்மையைக் கூறுமிடத்து, எனது எண்ணம் தங்களுடைய நன்மையை நாடியே. இஃது தங்களுக்கு விநோதமாகத் தோன்றலாம். நான் உண்மை யைச் சொல்லுவேனேயாயின் வேறு விதமாகக் காணப் படுவீர்கள்" என்று நிதானித்துப் பதிலளித்தார்.

"எதைப்பற்றிய உண்மை?" என்று வினவினேன்.

"ஒரு நங்கையைப்பற்றிய உண்மை—எந்தநங்கை யிடத்தில் தாங்கள் அதிகமான பிரேமை செலுத்துகிறீர் களோ அந்த நாரீமணியைப் பற்றிய உண்மை" என்று விடைபகர்ந்தார்.

அவ்விதம் பேசியவுடன் சின்னாட்களுக்கு முன்னர் நானும் அமிர்தாவும் பேசிக்கொண்டிருந்ததை அவர் கேட் டுக்கொண்டு திரும்பியது என்னுடைய ஞாபகத்திற்கு வந்தது.

"ஆமாம், தாங்கள் சொல்லுவது முற்றும் உண்மை. அமிர்தாவைப் பற்றிய சகல விருத்தாந்தங்களும் அறிய ஆவலுடையவனாகவே இவண் வந்துளேன். தாங்கள் அவ ளுடைய நண்பர் என்று அவள் சொன்னதற்குச் சரியாக அதோ அப் பெண்மணியின் புகைப்படம் தொங்குகின் றது" என்று அந்தப் படத்தைச் சுட்டிக் காண்பித்தேன்.

"அவள் புகன்றது உண்மையே. கல்ப—அமிர்தா என்னுடைய நேயரின் குமாரி. என்னுடன் நேசமிக்குடையவள். அவளை என்னுடைய குழந்தையாகப் பாவிக்கிறேன்" என்று கூறினார்.

"அப்படியாயின் அவளையும் அவளுடைய தந்தையையும் பற்றி தங்களுக்குத் தெரிந்ததைத் தயவுசெய்து சொல்லும்படி வேண்டுகிறேன். அவள் யார்? அவள் கேட்டுக் கொண்டதின் பேரில் நான் இரம்பாவை விட்டு கல்கத்தா சென்றேன்" என்று மொழிந்தேன்.

"அவள் கேட்டுக்கொண்டதின்பேரிலா!" என்று ஆச்சரியத்தோடு கேட்டு, "தன்னிடத்திலிருந்து உங்களை ஏன் பிரித்துக்கொண்டாள்?" என்று உசாவினார்.

"பிரிந்திருப்பது இருவருக்கும் நலமென்று உரைத்தாள்."

"சரி, அவள் உண்மையைப் பேசியுள்ளாள். அதுவே முற்றும் உண்மை. அவ்வுண்மையை மறவாதீர்கள்" என்று யான் சொல்லியதைத் தாங்கிப் பேசினார்.

"தாங்கள் தயவு செய்து அவள் தந்தையாகிய இரங்கையாவைப் பற்றிய சகல விஷயத்தையும் சொல்ல வேண்டும்" என்று வற்புறுத்தினேன்.

"அதை நான் சொல்லக்கூடாதென்ற உத்திரவைப் பெற்றிருக்கின்றமையால் மிகுதியும் வருந்துகின்றேன்." என்று பேசியபொழுது அவருடைய முகம் இருந்த நிலைமையைக் கவனித்திடில் அவர் உண்மையைப் பேசினார் என்பது எவருக்கும் நன்கு விளங்கும்.

"ஏன்?" என்று மீண்டும் வினவினேன்.

"என்னைப்போன்றவர்களிடத்தில் ஒரு குடும்பத்

தின் இரகசியம் காப்பாற்றி வைக்கப்படுமாயின் எம் முடைய உயிரையும்விட அவ்விரகசியத்தையே மேலாகக் கருதுவோம். ஆகையால் தயவுசெய்து அதைப்பற்றி அதிகம் கேளாதீர்கள்" என்று கூறினர்.

அவர் சொல்லிய விதத்திலிருந்து நான் அதைப்பற்றி வற்புறுத்தியது தகாதெனக் கண்டு மன்னிக்கும்படி வேண்டினேன்.

"இஃது மன்னிப்புக் கேட்கும்படியான விஷயமன்று; தங்களுடைய நன்மைக்காக நான் ஒரு விஷயத்தைத் தெரியப்படுத்தப் போவதற்குத் தாங்கள் க்ஷமிப்பீர்கள் என்றெண்ணுகிறேன்" என்று சொல்லி என் பதிலுரையை எதிர் பார்த்தார்.

" அஃது யாது ?"

"இரங்கையாவிடத்திலிருந்தும் அவருடைய குமாரி யாகிய அமிர்தாவிடத்திலிருந்தும் எவ்வளவு தூரம் விலகி இருக்க முடியுமோ அவ்வளவு விலகி இருத்தலே தங்களு டைய நன்மைக்குக் காரணமாகும்" என்னும் விநோத மான புத்திமதியைச் சொன்னர்.

"ஏன் இதைச் சொல்லுகின்றீர்கள் ?" என்று கூவி "தாங்கள் அமிர்தாவின் நேயர் என்பதாகச் சொல்ல வில்லையா?" என்று பின்னும் இரகசியத்தில் தள்ளுண்டவ னுகக் கேட்டேன்.

"எவருடைய வழியில் படுகுழி தோண்டப்பட்டிருக் கிறதோ அப்பேர்ப்பட்டவர்களை எச்சரிப்பது என்னும் நோக்கம் கொண்டே தங்களுக்கு இவ் வுண்மையைச் சொல்லியது" என்றார்.

"ஆயின் எனக்குப் படுகுழியா, தோண்டப்பட்டிருக்கி றது ?" என்று சந்தேகமும் பயமுங் கலந்து வினவினேன்.

"ஆமாம். தங்களுடைய முன்னிலையில் இருப்ப தோர் படுகுழி அதற்கடுத்து அமிர்தா நிற்கிருள்" என்று பக்கத்தே சுவரில் தொங்கவிடப்பட்டிருந்த புகைப்படத்தைக் காண்பித்து, "அவளை நீங்கள் அடைய விரும்புவீர்களே யானுல் அக்குழியில்—மாணமே சமீபித்திருக்கும் அக்குழியில்—விழாமல் போகமுடியாது. நான் தங்களைக் கேட்டுக் கொள்வதாவது,—தயவு செய்து அடையமுடியாத அவள் பேரிலுள்ள ஆசையை முற்றிலும் நீக்குங்கள் என்பதே—" என்று சொன்னவரைக் கவனிக்கையில் அவர் உண்மையே கூறுகிருர் என்று கண்டேன்.

"ஆனுல், ஏன்?" மணியாக ஆக இரகசியம் விருத்தியாவதைக்கண்டு நான், "தாங்கள் ஏன் என்னிடத்தில் உண்மையை ஒளிக்கிறீர்கள்? நான்—நான் ஒப்புக்கொள்ளுகிறேன்—நான் அவளை—" என்று முடிக்குமுன்

"தாங்கள் அவளைக் காதலிக்கிறீர்கள். ஆமாம்; தங்களுடைய பார்வையிலிருந்தே தெரிந்து கொள்ளுகிறேன்" என்று சொல்லி "தங்களுடைய காதல் மாண சமானமானதென்பதை நான் நன்கு உணர்வேன். தாங்கள் வாலிபராயும் விடாமுயற்சி உடையவராயும் இருக்கிறீர். மதியையும் விட மிக்க அழகிய வதனமும், குயிலினும் இனிய குரலும், நீலோற்பல மலரினும் கரிய விழிகளும் தங்களை அடிமை கொண்டுவிட்டன. நாகநாதரே, நான்மட்டும் இந்த நிலைமையில் இல்லாமலிருந்தேனுனல்—அதாவது உண்மையான ஓர் பண்டாரமாக இல்லாமலிருந்தேனுயின்—தங்களுடைய நேயனுகிய யான், உண்மையைச் சோல்லிவிடுவேன். அப்பேர்ப்பட்ட பாக்கியத்தைப்பெருமலிருப்பதற்கே மனமிகவாடுகிறேன்" என்று கூறிமுடித்தார்.

## ஐந்தாவது அத்தியாயம்

### உயிர்போய்விடும் என்று

சதாசிவ பண்டாரம் உண்மையே கூறினர். அவருடையபேச்சும் முகக்குறியும் நல்ல யோக்கியருடையவைபோலிருந்தன. நான் அவர் சொல்லியதை நம்பாமலிருக்க முடியவில்லை. அப்படி இருந்தும் அமிர்தாவை நான் காதலித்தேன். ஏன்? என்ருல் சொல்லமுடியவில்லை. ஒரு மனிதன் ஒரு பெண்ணை ஏன் காதலிக்கிருன் என்ருல் அதன் காரணம் அவனே அறியான். காதலென்பது மானிடரை ஒரு பிரிவிலிருந்து மற்ருேர் பிரிவுக்கு மாற்றக் கூடிய ஒரு சக்தியாகும். ஒரு மானிடனிடத்தில் காதல் ஜனிக்குமேல் அவன் புதிய மனிதனுகிருன். நடை முதல் செய்கை இறுதியாக மாறுகின்றன. காதலின்பாற்பட்ட மனிதன் யோக்கியனுகவும் இடமுண்டு, அயோக்கியனுக மாறவும் கூடும்.

வசந்தகாலம் சென்றது. நான் சந்தேகமென்னும் சாகரத்தில் தவிப்போனுனேன். ஒவ்வொரு நாள் காலையிலும் என் காதலியிடத்திலிருந்து கடிதத்தை எதிர்பார்த்தேன். கடிதம் வாராமையால் ஏங்கினேன். சதாசிவ பண்டாரம் சொல்லியதுபோல் எனக்கும் அவளுக்கும் நடுவே ஒரு பெரிய படுகுழி இருப்பதென்பது உண்மை என்றே தோன்றிற்று.

அவள் எங்கிருந்தாளென்பதை அறியாதவனுயினேன். நான் இரம்பாவுக்கு எழுதலாமென்று எண்ணினேன்; ஆனுல் அவள் தேசசஞ்சாரியாதலாலும், தனக்குக் கடிதம் எழுதக் கூடாதென்று கேட்டுக்கொண்டாளாத

லாலும் அதற்குத் துணிந்திலேன். கொழுத்த தொந்தியை யுடைய அவள் தந்தை பிரயாணப் பிரியரல்லவா? இவைகளால் நான் அவளுக்கு லிகித மெழுதவில்லை. வைகாசி, ஆனி மாதமாக நீண்டது—அதாவது ஆனி மாதம் பிறந்தது. கல்கத்தாவில் நாடகங்களும் தோட்டக் கச்சேரிகளும் நடந்தன. அனேக ரிடமிருந்து பல அழைப்புக் கடிதங்கள் என்னை அவர்களுடன் வந்து சேர்ந்து சந்தோஷத்தில் பங்கு பெறுமாறு வேண்டின. இவைகளையே கொழுத்த நாகரீகம் என்று எண்ணி இருந்த நான் அப்பேர்ப்பட்ட விஷயங்களை அலக்ஷியம் செய்தேன். நானுகிய நாகநாதன் மாற்றப்பட்ட மனிதனுயினேன். நல்ல நித்திரையில் பல அசம்பாவிதமான கனவுகளால் விழிப்பு மூட்டப்படுவேன். மனேதைரியத்தால் எல்லா விதமான பயத்தையும் மனத்தினின்று அகற்றுவேன். எனக்குத் தெரிந்தவரையில் யான் எவனுக்கும் விரோதியல்லன். அப்படி யிருக்க, நான் ஒருவனுக்குப் பயங் கொள்ளுவானேன். ஆகையால் நான் எச்சரிக்கப் பட்டது வீணுன சங்கதியே என்று எண்ணினேன்.

எனது அந்தரங்க நண்பனும் என்னுடைய கூட்டாளியுமான கோவிந்தராம் கல்கத்தா வந்துசேர்ந்தான். அமிர்தாவையும் அவளைப்பற்றிய சகல சங்கதிகளையும், நான் அவளைக் காதலிப்பதையும் அவனிடத்தில் சொல்ல நினைத்தேன். ஆனுல் அவன் என்னைக் காதல் பித்தேறிய கடையோன் எனக் கருதுவனென நினைத்து அவ்வெண்ணத்தை யொழித்தேன்.

சதாசிவபண்டாரம் தந்தையையும் மகளையும் பற்றி என்ன இரகசியத்தை அறிவார்? எதுவாக இருந்தபோதிலும் அந்த இரகசியம் சாமானியமானதல்ல. பிறருடைய

இரகசியங்களை வெளியிடுவதைப்பற்றி பண்டாரம் பேசினரே! அப்படி அமிர்தா எந்தஇரகசியத்தை இவரிடத்தில் சொல்லி வைத்திருக்கிருள்?

அவளுடைய இரகசியத்தைப்பற்றி யான் தனிமையில் பன்முறையும் யோசித்தேனெனினும் ஒரு சித்தாந்தத்திற்கு வந்தேனிலன். என்னுடைய முழு எண்ணமும் அவளைப் பற்றியதாக இருந்தது. அவளைப் பார்ப்பதே என்னுடைய முக்கியமான நினைவும் சிந்தனையுமாக இருந்தது. இவ்விதம் சின்னாட்கள் கழிந்தன.

ஆனிமாதம் ஐந்தாம் தேதி இரவு—மாதம் தேதிமுதல் ஞாபகத்திலிருக்கின்றன—ஏனெனில் என்னுடைய தினசரியில் முக்கியமான நாள் அதுவேயாகும். அன்றிரவு போஜனம் செய்து ஓர் ஆங்கில நவீனகத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். சுவரில் சப்தித்துக்கொண்டிருந்த கடியாரம் ஒரு மணியடித்தது. வெகுநேரம் விழித்துக் கொண்டிருந்ததை அறிந்து, உடனே படுக்கைக்குப் போயினேன்.

படுத்துக் கால்மணிநேரம் ஆயதும் கடிகையாரம் கால் மணியடித்தது. அந்த மணியின் சப்தம் நின்றதும் எனது சையாகிரகத்தில் இருந்த "டெலிபூனின்" (Telephone) மணியடித்தது. உடனேபோய் பதிலளித்தேன்.

"யார் அது?" நாகனு? என்று ஒரு சப்தம் கேட்டது.

"ஆமாம்" என்று மறுமொழி தந்தேன்.

"நான்தான் கோவிந்தன்—கோவிந்தராம்" என்று கூறி "பேசுவது யார்? நாகநாதனு? உன்னுடைய குரல் மாறிக் கேட்கின்றது" என்றது.

"உன்னுடையதும் அவ்வாறே இருக்கின்றது. சில

சமயங்களில் டெலிபூனில் சப்தம் சரியானபடி கேட்ப தில்லே," என்றுசொல்லி "நீ எங்கிருக்கிருய்?" என்று விஞவினேன்.

"காளிகட்டம், 175-ம் நெ. வீடு ஹனுமான் மந்திரத்தி லிருக்கிறேன்" என்று நண்பன் மறுமொழி கொடுத்து, "நான் இருப்பது ஒரு மூலே. நீ இங்கே வரமுடியுமா? உனக்குத் தொந்தரவு கொடுப்பதைப் பற்றி மிகுதியும் வருந்துகின்றேன். முக்கியமான விஷயமில்லேயாயின் இந் நேரத்தில் உன்னே வெளியேவரும்படி சொல்லேன்" என்று கூறிஞன்.

"அவசியம் வருகிறேன்" என்றுசொல்லி, "அப்படி என்னவிசேஷம்?" என்று ஆச்சரியத்துடன் உசாவினேன்.

"அப்படி பயங்கொள்ளும்படியான விஷயமொன்றும் இல்லே," என்று கூறிப் புன்னகைபுரிந்து, "விசாரப்பட வேண்டாம்; இங்கு சீட்டாடியதில் கொஞ்சம் தோல்வி. உன்னுடைய பாங்கி ரசீது புஸ்தகத்துடன் வா. நான் வெளியே போகுமுன் இவர்களுடைய பாக்கியைக் கொடுத்து விடவேண்டும். தெரிந்து கொண்டாயல்லவா? நீ எனக்கு இந்த சமயம் உதவி செய்வாய் என்றே நினேக் கிறேன்" என்றுன்.

"உனக்கு உதவிசெய்யத் தடை என்ன? அவசியம் உதவி புரிகிறேன்" என்று நிச்சயமாகக் கூறினேன்.

"இவ்வாரம் முழுவதிலும் வந்த கடன் ஆயிரம் ரூபா வாகும். ரொம்பவும் துர் அதிர்ஷ்டம் இவ்விதம் ஒரிடத்தி லும் தோற்றதில்லே. இந்தத்தொகை உன்னுடைய கணக் கில் இருக்கிறதல்லவா? அடுத்தவாரக் கடைசியில் திருப் பிக் கொடுத்து விடுகின்றேன்" என்றுன்.

"சரி கொடுக்கின்றேன்" என்று ஒப்புக்கொண்டேன்.

"இங்கிருப்பவர்கள் உன்னை யறிவார்களென்றும், உன்னுடையபாங்கி இரசிதைவாங்கிக் கொள்ளத்தயாராக இருப்பதாகவும் சொல்லுகிறார்கள்."

"ரொம்ப சரி; இன்னும் அரைமணிநேரத்தில் உன்னிடத்திற்கு வந்து சேருகிறேன்."

"நீ யல்லவா என்னுடைய உண்மையான தோழன். விலாசத்தை மறந்துவிடாதே. காளிகட்டம் 175 நெ.வீடு. நான் இவர்களுக்குக்கொடுத்து சீக்கிரம்வீடுபோகவேண்டுமாதலால் எவ்வளவு துரிதமாக வரமுடியுமோ அவ்வளவு சீக்கிரம் வா" என்று எனது தோழன் சந்தோஷமாகப் பேசினான்.

நான் விரைவில் வருவதாய் என்னுடைய நண்பனிடம் சொல்லி டெலிபூனை விட்டு வந்தேன்.

கோவிந்தராம் பெரிய வியாபாரியாயினும் சீட்டுப்பித்துக் கொண்டவன். பல தடவைகளில் ஆயிரக்கணக்காக ஜெயம்பெற்று மிருக்கிறான். அவ்வளவு அவசரமாகச் சங்கதியைத் தெரியப் படுத்தியதிலிருந்து அவன் படுமோசக் காரர்களாகிய சூதாடிகளின், வித்தையும் நாகரீகமும் நிறைந்த பட்டணங்களில் பிரபுக்கள் போல வேடம் போட்டுத் திரியும் சூதாடிகளின், மத்தியில் அகப்பட்டுக் கொண்டான் என்று நிச்சயம் செய்தேன். அந்த மஹா பாபிகள், பணம் கொடுத்தாலொழிய தோற்றவர்களை வெளியில் விடார்கள் என்பதை யான் நன்குணர்வேன்.

சமயம்நேர்ந்தால் உபயோகிக்கவேண்டுமென்றெண்ணி என்னுடைய கைத்துப்பாக்கியை எடுத்து சட்டைப்பையில் பத்திரப் படுத்திக்கொண்டு கொல்லதுலா வீதியில் வந்து

பார்க்க ஒரு வண்டி நின்றுகொண்டிருந்தது. அதில் ஏறி அரைமணிநேரத்தில் காளி கட்டத்தை யடைந்தேன்.

"எந்த வீட்டில் நிறுத்துவது?" என்று வண்டிக்காரன் வினவினன்.

"175 நெ. வீட்டில்" என்று கூறியவுடன்

"இதோ தெரிகின்ற இந்தத் தோட்டமும் இதனுள் ஒற்றைவிளக்குடன் விளங்கும் வீடுமே நெ. 175" என்றான்.

உடனே அவனை அவ்விடத்திலேயே இருக்கும்படி உத்திரவு செய்து அந்தகாரமே குடிகொண்டிருந்த அந்த வீட்டின் முன்கதவண்டை சென்றதும் கதவு திறக்கப்பட்டது. என் எதிரே நடுத்தரமான வயதுள்ள ஒரு வேலையாளன் நின்றான்.

"கோவிந்தராம் பண்டிதரைப் பார்க்க வேண்டும்" என்று அம்மனிதனிடம் சொன்னேன்.

"தாங்கள் தான் நாகநாத பண்டிதரோ?" என்று அவன் வினவினன்.

"ஆமாம்" என்று நான் விடை கொடுத்தவுடன் கதம்பை நார்ப்பாய்கள் விரிக்கப்பட்டிருந்த மெத்தைப்படியின் வழியே என்னை அழைத்துக்கொண்டுபோய் வீட்டின் பின்னண்டையிலிருந்த ஓர் அறையில் சேர்த்தான்.

"கோவிந்தராம் பண்டிதர் அவர்கள் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவதாயும் தாங்கள் வந்தால் சற்று தாமதிக்கும்படியும் சொல்லினர். தயவுசெய்து இவ்விருக்கையில் அமர்வீர்களேயாயின், நான் கீழேசென்று பார்த்து வருகிறேன்" என்று தாழ்மையாகச் சொன்னான்.

அவ்வறை பழையமாதிரியாக இருந்த போதிலும் நூதன வஸ்துக்கள் பலவற்றால் நிறைக்கப்பட்டு மனோரம்

மியமாக இருந்தது. அங்கு மேல் விரிப்புடன் போடப் பட்டிருந்த மேஜையின்மீது தேங்காயெண்ணெய் விளக் கொன்று எரிந்து கொண்டிருந்தது. மற்றோர் மூலையில் ஒரு சக்கரமேஜையும் அதைச்சுற்றிலும் நான்கு நாற்காலி களும் கிடந்தன. அந்த மேஜையின்மீது ஒரு சீட்டுக் கட்டுகிடந்தது. சிறிது நேரத்திற்கு முன்னர் அவ்விருக்கை களில் நால்வர் இருந்து சீட்டாடியதற்கு சாக்ஷியாக புகை பிடிப்பதின் நிமித்தம் கிழிக்கப்பட்டு பாதி எரிந்து பூமியில் கிடந்த பல தீக்குச்சிகளும், சுருட்டின் சாம்பலும் இருந் தன. பலவர்ணங்களாலும் பூவேலைப் பாடுகளாலும் சோபித்த துணிகள் பலகணிகளில் தொங்கிக்கொண்டிருந் தன.

அவ்வறையின் ஒரு புறத்தில் ஒரு பெண்ணின் உரு வம் சலவைக்கல்லில் சித்தரிக்கப்பட்டிருந்தது. அதை நன்றே பரீக்ஷிக்கையில் அதன்கீழ் ஒரு ஜப்பான் தேசத்து சிற்பியின் கையெழுத்து இடப்பட்டிருந்தது. பூமியின்மீது விரிக்கப்பட்டிருந்த ஒருவித சிவப்பான கம்பளம் வழுவழுப் பான தரையுடன் பொருந்தி இருந்தமையால் நான் நடந்த காலடியின் சப்தம் எனக்கே கேட்கவில்லை.

வேறோர்புறத்தில் போடப்பட்டிருந்த கித்தான் நாற் காலியில் உட்கார்ந்து கோவிந்தராமுடைய நேயர்கள் யாராக இருக்கக்கூடும் என்று என்னுள் யோசித்த வண் ணம் அவனை ஒவ்வோர் நிமிஷமும் எதிர்பார்த்திருந்தேன். அந்த அறை ஒரு கல்லறையைப்போல் அவ்வளவு நிச் சப்தமாக இருந்தது. கோவிந்தராமுடைய காலடிச் சப் தம் கேட்குமென்று வெகுநேரம் காத்திருந்தும் ஒன்றை யும் கேட்டிலேன்.

ஆயிரம் ரூபா நஷ்டத்திலிருந்து என்னுடைய நண்ப

ளுகிய கோவிந்தராமுக்குப் புத்தி வரும் என்றும், பிறகு ஒருபொழுதும் அவ்விதமான சூதாட்டத்திற்குப்போகான் என்றும் ஒருவித சந்தோஷத்தி லாழ்ந்திருந்தேன். சீட்டின் பெயர்களைக்கூட நான் அறியேன். இருவர் சேர்ந்து சீட்டாடத் தலைப்படுவார்களேயானல் அவ்விடத்தினின்றும் அக்ஷணமே எழுந்து போய்விடுவேன்.

ஆங்கு கிடந்த மேஜையும், அதின்மேலிருந்த சீட்டுக் கட்டும், திறந்து வைக்கப்பட்டிருந்த 'அலமாரியில்' காலியாகக் கிடந்த சாராயப்புட்டிகளும், இரண்டு மூன்று கண்ணுடிப் பாத்திரங்களும் அவர்களுடைய சரிதத்தை நன்கு உரைப்பனவாக இருந்தன. அந்தச் சூதாடிகளுடன் கோவிந்தராம் சேர்ந்ததை நினைத்து நினைத்து மனவருத்தம் அடைந்தேன்.

நாகரீகமான பட்டணங்களின் உண்மையை அறிந்த ஒவ்வொருவரும் அந்த விதமான சீட்டாட்டக்காரர்களைத் தெரியாமல் இரார்.

தனவந்தரான வாலிபர்களாகிய இரையை விழுங்க கழுகுகளாகிய எவ்வளவு சூதாடிகள் அதே தொழிலாகத் திரிகின்றனர்! எவ்வளவு சாப்பாட்டுக் கடைகளில் 'இரங்' ஆட்டத்திற்கு என்று பிரத்தியேகமான இடங்கள் தயார் செய்யப்பட்டிருக்கின்றன! அப்பேர்ப்பட்ட வாலிபர்களைக் கெடுக்க சூதாடிகள் மாத்திரமோ? இல்லை, இன்னும் அநேகர்! அந்த வாலிபர்களுக்குக் கடன் கொடுக்கத் தயாராக இருக்கும் லேவாதேவிக் கடைக்காரர்கள் பலர்! கண் என்னும் வலையை வீசித்திரியும் காந்தாமணிகள் எண்ணற்றவர்! குடி முதலியவைகளைக் கற்றுக்கொடுக்கும் குருக்கள் சிலர்! மற்றவர்களிடம் என் நேயன் அகப்படாவிடினும்

சீட்டுக்காரர்களைச் சேர்ந்ததின் காரணம் மட்டும் விளங்க வில்லை.

அவ்விதம் யோசித்துக் கொண்டு கால்மணிநேரம் இருந்தேன். உடனே சப்தமின்றி கதவு திறக்கப்பட கருத்த கேசத்தையும், சாயங்கால உடையையு முடைய வன் ஒருவனும், அவனைப் பின்தொடர்ந்து முன்னவனை விடச் சிறிது உயர்ந்தவனும் மெலிந்தவனுமான ஒரு மனி தனும் உள்ளே வந்தனர். பின்வந்தவன் முன்னவனைவிடச் சில வருஷங்கள் மூத்தவனாக இருந்தான். இருவரும் புகை பிடித்துக் கொண்டு வந்தனர்.

"தாங்கள் தான் நாகநாத பண்டிதர் போலும்?" என்று கேட்ட இளையவன் "தங்களைக் கோவிந்தராம் எதிர் பார்த்த வண்ணம் இருக்கிறார். அந்தப் பெண்ணு டன் பேசிக்கொண்டு அதோ தோன்றும் இராஸ்தாவில் இருக்கிறார்" என்று தன்னுடைய வலக்கையால் இராஸ்தா வைக் குறிப்பிட்டான்.

"எந்தப் பெண்;" என்று நான் வினவினேன். "பக் கத்தே வசிக்கும் ஒரு சிறுமி" என்று பொருள் விளங்காத புன்னகையுடன், "தாங்கள் இரசீது புஸ்தகம் கொண்டு வந்திருக்கிறீர்களோ ? தாங்கள் வந்து எம்முடைய பாக்கி யைக் கொடுப்பீர்களென, அவர்சொல்லியுள்ளார்" என்று கூறினான்.

"எனது இரசீது புஸ்தகம் இதோ இந்தப்பையில் வைத்திருக்கிறேன்" என்று எனது சட்டைப்பையைத் தட்டிக் காண்பித்தேன்.

"ஆயின் நீங்கள் எழுதலாம்," என்று சொல்லிய இளையவன் மைக்கூடு, இறகு முதலியவைகளை எடுத்து வைத்து, "மொத்தம் தொகை, ஆயிரத்து நூற்றுப்பத்து

ரூபாய்;" என்று தன் சட்டைப்பையிலிருந்ததோர் கடிதத்தின் உதவியால் கணக்குப் பார்த்துச் சொல்லினன்.

"தாங்கள் சொல்லிய தொகைக்கு, எனது நேயன் வந்ததும், பாங்கி இரசீது கொடுக்கிறேன்" என்றேன்.

"தாங்கள் சொல்வது சரியே; நாங்கள இவ்விராமுழுமையும் இங்கிருக்க முடியுமா? அந்தத்தொகையைக்கண்டு எழுதி விடுங்கள் ; தங்கள் நேயர் வந்தவுடன் அதை எம்மிடத்தில் கொடுக்கலாம்" என்று இதுவரையில் பேசாமலிருந்த மற்றவன், சொன்னான்.

"கோவிந்தராம் இங்குவர இன்னும் எவ்வளவு நாழிகை செல்லும்?" என்று கேட்டேன்.

"நாங்கள் எவ்விதம் சொல்லமுடியும்? அவளுடன் பேசிக்கொண்டே சென்றான்."

"அவள் யார் ?" என்று உசாவினேன்.

"ஓ! எனது நேயனாகிய நந்தனன் அறிவான். பெண்பிள்ளைகளைப்பற்றி விசாரிப்பதில் நிரம்ப சாதுரியவான்! புகை பிடிக்கிறீர்களா ?" என்று இளையவன் ஒரு சுருட்டைத் தன்னுடைய பொன்டப்பியிலிருந்து எடுத்து எனக்குக் கொடுத்தான்.

நான் அதை மறுப்பது சரியாகாதென நினைத்து வாங்கி சட்டைப் பையில் போட்டுக் கொண்டேன்.

"ஏன் பிடிக்கிறதுதானே," என்று இளையவன் தீப்பெட்டியை எடுத்துக் கொடுத்தான்.

"நான் சதா புகைபிடிப்பதில்லை. போஜனம் செய்தவுடன் ஒருமுறைமட்டும் பிடிப்பேன்" என்றேன்.

நான் என்னுடைய இருக்கையில் உட்கார்ந்தவுடன்

ஒரு மோட்டார்வண்டி சற்று தூரத்தில் வந்து நின்ற சப்தம் கேட்டது.

"நீங்கள் இரசீது எழுதப் போவதில்லையா என்ன? தாங்கள் வந்தவுடன் எம்முடைய கணக்குத் தீர்ப்பீர்கள் என்று கோவிந்தராம் சொல்லி இருக்கிருர். என் பெயர் நந்தனன். என்னுடைய பெயருக்கு அதை எழுதுங்கள்" என்று அவன் அவசரப்படுத்தினுன்.

"அவன் வந்த உடன் அப்படியே செய்கிறேன்" என்று மறுமொழி புகன்றேன்.

"ஏன் இப்பொழுதே எழுதக்கூடாது? வேண்டுமானுல் தங்களுக்கு நாம் எங்களுடைய கைச்சாத்து கொடுக்கிருேம்" என்று இருவரும் கூறினர்.

"எவ்வளவு கொடுக்க வேண்டுமென்று அவன் ஒப்புக்கொள்ளுகிருனே?" என்று யான் குறித்தேன்.

"யாம் ஏற்கனவே சொல்லி இருக்கிருேமே; சொல்லவில்லையா? ஆயிரத்து நூற்றுப்பத்து ரூபா வென்று :—"

"அஃது தங்களுடைய கணக்கு. அவன் வேறு சொல்லக்கூடும்;" என்று சந்தேகமான பார்வையோடு புன்னகை செய்தேன்.

"ஆயின் தாங்கள் எம்மைச் சந்தேகிக்கிறீர்களோ?" என்று சற்று கோபத்துடன் நந்தனன் வினுவினுன்.

"அவ்விதம் சிறிதும் நான் நினைக்கவில்லை என்னுடைய நண்பன் கொடுக்க வேண்டியவற்றை இல்லை என்று மறுக்கக்கூடியவன் அல்ல. பந்தயம் சரியான பந்தயமாயின் தோல்வியும் சரியே" என்று உறுதி கூறி நகைத்தேன்.

"ஆனுல் அவருக்காகத்தாங்கள் பணம் கொடுக்க சம்மதமில்லாதவர் போலிருக்கிறது?" என்று கூவிக் கேட்டான்.

"அப்படியல்ல; தாங்கள் சொல்லும் தொகைக்கு இரட்டிப்பாக இருந்தபோதிலும் நான் கொடுக்கத் தயார். அவன் எவ்வளவு கடன் கொடுக்கவேண்டும் என்பதை மட்டும் யான் அறிய விரும்புகிறேன்" என்று அவன் சொல்லியதை மறுத்துக் கூறிச் சமாதானம் செய்தேன்.

"அதை அவர் வந்தவுடன் சொல்லுவார். தாங்கள் அதை எழுதி எம்மிடமேன் கொடுக்க யோசிக்கிறீர்கள் என்பது தான் மிகவும் விசித்திரமாக இருக்கிறது. தாங்கள் எழுதும் முன்னரே கைசீது எழுதிவிடுகிறேன். நான் படுக்கைக்குப் போகவேண்டும்" என்று பேசியவன் மேஜையண்டையிலுள்ள நாற்காலியில் உட்கார்ந்து மேலே சொல்லப்பட்ட தொகையைப் பெற்றுக்கொண்டதாக இரசீது ஒன்று எழுதி முத்திரைத் தலையை ஒட்டி நந்தனன் என்று கையெழுத்தும் போட்டான்.

திடீரென்று எழுந்த நந்தனன் அவ்வறையை இருமுறை சுற்றி "இவ்விதமாக நாம் எவ்வளவு நேரம் ஏமாற்றப்படுவது நான் சந்திரகாசிக்குப் போகவேண்டும்; ஏற்கனவே அதிக நாழிகையாயிற்று. ஐயா புறப்படு; நாம் போய் கோவிந்தாமைக் குழியிலிருந்து எழுப்பி வருவோம்" என்று மொழிந்தான்.

அவ்விதமே அவர்கள் இருவரும் கோவிந்தாமுடன் வருவதாகக் கூறி வெளியே சென்றனர். அவர்கள் இருவரும் சென்ற உடன் சிறிதுநேரம் யோசித்துக்கொண்டிருந்தேன். அவர்களின் பார்வையை நான் வெறுத்தேன். அந்த நிச்சப்தமான வீட்டைவிட்டு எப்பொழுதுவெளியே போகலாம் என்று ஆவலோடு இருந்தேன்.

ஆகையால் மேஜைக்கு எழுந்துபோய் நந்தனனிடம் ஆயிரத்து நூற்றுப் பத்து ரூபா கொடுக்கும்படி பாங்கி

ரசீது எழுதிக் கையெழுத்துப் போட்டு வைத்தேன். கோவிந்தராம் வந்தவுடன் அந்த நிமிஷமே அதை அவர்களிடம் கொடுத்துவிட்டு அவனுடன் வெளியே போக வேண்டுமென்னும் எண்ணத்தினாலேயே அவ்விதம் தயாராக இருந்தேன். எனது நண்பன் அவ்வித மனிதர்களுடன் சேர்ந்திருக்கும்படி செய்தது எதுவோவென்னும் சந்தேகம் என்னை விட்டு அகன்றிலது. எழுதிய இரசீதைப் புஸ்தகத்துள்வைத்து புஸ்தகத்தைச் சட்டையின் மேற்பையில் பத்திரப்படுத்திக் கொண்டு மறுபடியும் அந்த கித்தான் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டேன். நான் உட்கார்ந்தவுடன் நாற்காலியில் ஒரு விதமான சப்தம் உண்டாயது. அஃது யாதெனத் திரும்புமுன் நாற்காலி கீழேவிழுந்துவிட்டது. அதனுடைய இரண்டு கைகளும், என்னுடைய முழங்காலைப் பலமாகப் பற்றிக்கொண்டன. எனது தலை கீழே தொங்கியது. அப்படி இப்படி அசையமுடியவில்லை. அச்சமயம் உயிர்போய்விடும் என்று நினைத்தேன்.

நான் அவ்விதம் கஷ்டப்படுகிற நிலைமையி லிருக்கையில் சற்றுமுன்னர் சாத்தப்பட்ட கபாடங்கள் படீரென்று திறக்கப்பட ஜயனும் நந்தனனும் உள்ளே பிரவேசித்தனர்.

## ஆருவது அத்தியாயம்

### பயத்தால் மறுபடியும் கூச்சலிட்டாள்

நான் இருந்தநிலையை அறிந்துகொண்டு ஒரு வார்த்தை சொல்லுவதற்குள், அவர்கள் இருவரும் என்மீது பாய்ந்து எனது இருகரங்களையும் பின்னிருந்த தூணில்கட்டிவிட்டனர்.

"அடே, திருட்டு நாய்களே! என்னை என்ன செய்ய உத்தேசித்திருக்கிறீர்கள்? என்னை உடனே விடுவியுங்கள்!" என்று கோபத்தோடு கூவினேன். தாங்கள் ஜயமடைந்ததை நினைத்துப் பல்லைக்காட்டிஞர்களே யொழிய என் சமீபத்தில் வந்தார்களிலர். என்னுடைய கைத்துப்பாக்கியை எடுக்கவேண்டி எனது வலக்கையை விடுவிக்க எவ்வளவோ முயன்றும் பயன்படவில்லை. அதிசாதுரியமாக என்னைப் பொறியில் அடைத்து விட்டார்கள் என்பதைக் கண்டு கொண்டேன்!

விகாரமான முகத்தையுடைய நந்தனன் என்னிடத்திற்கு வந்து எனது மார்பின் பக்கத்திலுள்ள பாங்கி புஸ்தகத்தை வெளியில் எடுத்ததை யோசிக்குங்கால் நான் எழுதியதையும் என்னிடத்தில் பத்திரமாகவைத்துக்கொண்டதையும் அவர்கள் எங்கிருந்தோ கவனித்திருக்கவேண்டும் என்று நினைத்தேன். நந்தனன் அந்தப் புஸ்தகத்திலிருந்த பல கடிதங்களையும் பார்த்துக்கொண்டு வருகையில் தன் பெயருக்கு எழுதப்பட்டிருந்த பாங்கி ரசீதை எடுத்துக்கொண்டு திருப்தியடைந்தவனுக, "சரி; இதைப்பற்றிய மட்டில் ரொம்பவும் திருப்தியே; எமக்கு இன்னும் ஓர் ஆயிரம் வேண்டும்" என்று புன்னகையுடன் கூறினன்.

"என்னிடத்திலிருந்து ஒரு பைசாவையும் நீங்கள்

அடையமாட்டீர்கள்! இங்கு கோவிந்தராம் வரவில்லை என்றே நிச்சயம் செய்கிறேன். நான் அகப்பட்டுக்கொண்டிருக்கிறது ஒருபொறி" என்று தைரியமாகப் பேசினேன் எனினும் இருந்த இடத்தைவிட்டு நகரச் சக்தியற்றவனாக இருந்தேன்.

"உனது தோழனின் கடனைக் கொடுத்து விட்டாய். உன்னுடையதைக் கொடு" என்று நந்தனன் கேட்டான்.

"அடே படுமோசக்காரா! நான் உனக்குக்கொடுக்க வேண்டியது ஒன்றுமில்லையே; இவ்விதமான கொள்ளையில் நீ மஹா வீரன்போலத் தோன்றுகின்றது. உன்னுடையவலையில் அகப்பட்டுக் கொண்டவர்களில் நான் முதல்வன் அல்லன். இவைகளை வெகு சீக்கிரம் போலீஸார் அறிவார்கள்" என்று கூறி முடித்தேன்.

"அவர்கள் உன்னிடமிருந்து அறிய முடியாது" என்று சிரித்து, "அந்த விஷயத்தைப் பிரஸ்தாபிக்க எமக்கு இஷ்டமில்லை. நான் இப்பொழுது மற்றோர் ஆயிரத்திற்கு பாங்கி இரசீது எழுதுவேன். அதில் நீ கையெழுத்துப் போடவேண்டும்" என்று உத்தரவளிக்கும் பாவனையாகப் பேசினான்.

"நான் ஒன்றும் செய்யத் தயாராக இல்லை" என்று உறுதியாகக் கூறினேன்.

"நன்றாகக் கொடுக்கலாமே. உனக்கோ ஏராளமாகப் பணம் இருக்கிறது. உனக்கு மற்றோர் ஆயிரம் ஒரு இலக்ஷியமல்லவே" என்று குறித்தான் ஜயன்.

"ஒரு பைசாவும் கொடேன். அதுமாத்திரமல்ல, இப்பொழுது என்னிடத்திலிருந்து திருடிக்கொண்டிருக்கிற இரசீதிற்கும் பணம்கொடுக்காமல் இருக்கும்படி செய்து விடுவேன்" என்று பயமுறுத்தினேன்.

என்னுடைய பாங்கிப் புஸ்தகத்தை எடுத்துப் போன நந்தனன் மேஜையின் சமீபத்தில் போய் உட்கார்ந்து எழுதி முடித்துக்கொண்டு என்னிடம் திரும்பிவந்து, இதில் முதலாவதாகவும் கடைசியாகவும் கையெழுத்துச்செய்" என்றான்.

"நான் அவ்விதமொன்றும் செய்யேன். எனனை இங்கே இன்னிலைமையில் வைத்திருப்பதானது உங்கள் இருவருக்கும் கேட்டையே உண்டுபண்ணும். மற்றோர் ஆயிரம் கொடுக்கும்படி என்னை பயமுறுத்துதல் பயன் படாது. என்னுடைய கணக்கில் இனி பணம் கிடையாது" என்று மறுமொழி தந்தேன்.

"ஓ, உன்னுடைய கணக்கில் பணம் இன்னும் ஏராளமாக இருக்கிறது. நாங்கள் அப்படி பாதியில் ஏமாற்றப் படுபவர்களல்ல. உடனே கையெழுத்தைப் போடு—நாளையதினம் பகல் பன்னிரண்டு மணிக்கு நீ விடுதலையடைவாய்—அதற்குள் நாமும் இந்த காகிதங்களைப் பணமாக மாற்றிக்கொண்டு விடுவோம்" என்று சொன்னான் நந்தனன்.

"கோவிந்தராம் எங்கே?" என்று யான் வினவினேன்.

"அந்தப் பெண்ணுடன் இருக்கிறான் என்று நினைக்கிறேன்"

"எந்தப்பெண்?"

"சரி அவளுடைய புகைப்படம் பக்கத்து அறையில் இருக்கிறது. நீ அதைப்பார்க்கவும் ஆசைகொள்ளுவாய்" என்றான் மற்றவன்.

"அது எனக்கு நிஷ்பிரயோசனம்" என்றேன்.

உடனே ஜெயன் பக்கத்து அறைக்குச் சென்று ஒரு

படத்துடன் மறுபடியும் தோன்றி அப்படத்தை என்னிடம் காட்டினுன். நான் திகைத்துப் போயினேன்.

அஃது என்னருங் காதலியாகிய அமிர்தாவின் படம். சதாசிவ பண்டாரத்தின் வீட்டில் பார்த்த படமே அது.

" ஓ, நீ இவளை அறிவாயா ?" என்ருன் நந்தனன்.

"ஆமாம்; இவள் எங்கே?" என்று பேய் பிடித்தவன் போல வினவினேன்.

" அந்தப் பாதையின் பக்கத்தில்—உனது தோழன் கோவிந்தராமுடன் " என்று ஏதோ சொல்வதற்குள்

" அல்ல ; நீ சொல்வது சுத்தப்பொய். நான் ஒரு பொழுதும் நம்பேன் " என்று சொன்னேன்.

அமிர்தாவும் சதாசிவபண்டாரமும் பல நாட்களுக்கு முன்னரே என்னை எச்சரித்திருந்தும் நான் படுகுழியில் விழுந்தேன் என்பதை அப்பொழுதே உணர்ந்தேன். எனது காதலி, அமிர்தா இந்தப் பாதகர்களுடன் சேர்ந்திருப்பாளா ? இவர்களுடைய கெட்ட எண்ணங்களை எல்லாம் தெரிந்துகொண்டிருப்பாளா? என்று என்னுள் கேட்டுக்கொண்டேன்.

" இதில் கையெழுத்துப்போடு. மறுநிமிஷம் அவள் உன்னுடன் இருப்பாள். நாளை நடுப்பகல் வரையில் இருப்பாள் " என்று ஆசை வார்த்தை கூறினுன் நந்தனன்.

" உனக்கேன் யான் ஆயிரம் ரூபா கொடுக்கவேண்டும் ?" என்று வினவினேன்.

" நீ இழந்ததாக நினைத்திருக்கும் உன் காதலியை உன்னுடன் சேர்ப்பதற்கு இந்த ஆயிரமாவது வெகுமதி வேண்டாமா ?" என்று மீண்டும் வினவினுன் நந்தனன்.

அவளைப் பார்க்கவேண்டும் என்றும், அவளுடைய

அழகிய கரங்களுக்கு முத்தியளிக்க வேண்டுமென்றும் அவளுடைய அமிழ்தினும் இனிய மொழியைக் கேட்கவேண்டுமென்றும் அவாமிகக் கொண்டேன். இவ்விதமான சதியாலோசனையைப்பற்றி என் காதலி பன்முறையும் எச்சரித்தாளல்லவா? அவைகளைக் கொஞ்சமேனும் இலக்ஷியம் செய்தேனு? அந்தப்பாவிகள் என்னைக் கல்கத்தாவுக்குப் பின்தொடர்ந்து வந்திருக்கிறுர்கள் என்பதையுணர்ந்தேன்.

"நான் உங்களுக்குப் பணம் கொடுப்பதாக வைத்துக் கொள்ளுவோம். சொற்படி நடப்பீர்கள் என்பது என்ன நிச்சயம்?" என்று கடாவினேன்.

"நாங்கள் சொல்லியபடி செய்வோம். அதில் சந்தேகப்படவேண்டியதில்லை. நீ இதில் கையொப்பமிடுவது தான் தாமதம். நாளை பகல் பன்னிரண்டு மணிக்கு விடுதலையடைவாய்;" என்று விடைபகர்ந்தான். "கொடுக்க மறுத்தேனுயின் பிறகென்ன?" என்று யான் உசாவினேன்.

"நீ மறுப்பாயே யானல்—அப்படிச் செய்ததை நினைத்து நீயே வருந்துவாய். நீ மறுப்பது புத்திசாலித்தனம் அல்லவென்றுமட்டும் உறுதியாகச் சொல்லுகிறேன். மறுத்தல் என்பதை இதுவரையில் யாம் கேட்டதே கிடையாது. மறுத்தால் தண்டனை அதிகமாகும்" என்று சொல்லும்போது கையில் இறகுடனும் இரசீதுடனும் இருந்தான்.

"நான் கையொப்பம் இடுவேனுயின் அமிர்தாவை இப்பொழுது கொண்டுவருவீர்களா? அப்படிக் கொண்டு வருவதாகப் பிரமாணம் செய்வீர்களா?"

"அப்படியே பிரமாணம் செய்கிறேன்" என்றுன் அம்மனிதர்களில் மூத்தவன்.

"கோவிந்தராம் இங்கு இருப்பானாயின் அவனைப் பார்க்க வேண்டும்" என்றேன்.

"அவன் இங்கு இல்லை என்றும், அவனுடன் அவ் வழியே சென்றுளான் என்றும் அப்பொழுதே நான் சொல்லவில்லையா" என்றான்.

அந்த சமயத்தில் எனது கைத் துப்பாக்கியை என் சட்டையினின்று எடுக்கச் சக்தி இருக்குமாயின் இருவரை யும் அரைநொடியில் நமனுலகனுப்புவேன் என்று நினைத் தேன்.

அவள் என்னை எச்சரித்தது இதினின்றும் தப்புவ தற்கே. எவ்விதத்திலோ அவள் இவர்களுடைய இரகசி யத்தை அறிந்து கொண்டிருக்கிறாள். இவ்விதம் மனிதர் களைப் பொறியில் பிடிப்பதுதான் இவர்கள் போன்ற சண் டாளர்களின் செய்கைகள் ஆகுமென்று உன்னினேன். என்னைப்போன்ற எவ்வளவு பெயர் அந்தப் பொறியில் அகப்பட்டு உயிர் துறந்தனரோ?

"எங்களுக்கு நேரமாகின்றது. இதில் கையெழுத் துப் போடப் போகிறாயா அல்லது—?" என்று அவசர மாகக் கேட்டான் நந்தனன்.

"நான் கையொப்பம் செய்யேன்" என்று கூவி "நீ ஏற்கெனவே என்னுடையதில் ஆயிரரூபாவைத் திருடிக் கொண்டாய்" என்று கூறி முடித்தேன்.

"ஐயா, தங்களுடைய பாங்கி திறக்கப்பட்டவுடன் யாம் இக்காகிதத்தைப் பணமாக்கிக் கொள்வோம்" என் றான் ஜயன்.

"பணமாக மாற்றிக்கொண்டு ஓடிப்போய் விடலாம் என்று எண்ணுகிறீர்களோ? நான் உங்கள் இருவரையும்

நன்றே பார்த்துக்கொண்டேன். எங்கு சென்றபோதி லும் உங்களை அடையாளம் பிடித்துக் கொள்ளுவேன்" என்றேன்.

"அப்பேர்ப்பட்ட சமயம் உனக்கு வாய்க்காமற்போகு மென்றுதான் யோசிக்கிறேன்" என்று பேசிய நந்தனன் என்னை ஒருமாதிரியாகப் பார்த்து, "அப்பேர்ப்பட்ட சமயத்தை உனக்குக் கொடுத்தோமானால் எம்மைவிட மதி கேடர் யாருமே இரார்" என்று பின்னுங்கூறி அவ னுடைய தோழனைப் பார்த்துப் புன்னகை புரிந்தான். சின்னேரங் கழித்த பின்னர் என்னைப் பார்த்து நந்தனன், "கடைசியாக உன்னைக் கேட்டு விடுகிறேன் :—நீ இந்த பாங்கி இரசீதில் கையொப்பமிடுவாயா என்கிறேன்." என்று கேட்டான்.

"கடைசியாக நான் சொல்வது யாதெனில், நீங்கள் இருவரும் படுபாவிகளாகிய சூதாட்ட மோசக்காரர்கள். நீங்கள் சொல்லுகிறபடி நான் செய்யேன்" என்று என்னு டைய உறுதியான மறுமொழி புகன்றேன்.

"அந்தப் பெண்ணை உன்னிடத்திற்குக் கொண்டுவந் தாலுமா?" என்று உசாவினன்.

அவ்விருவருடைய விபரீதச்செயல்களால் மனத் தடு மாற்றம் அடைந்து, சற்று யோசித்தேன். அவர்களின் இரகசியம் ஆச்சரியமாக இருந்தமையால் சற்று தயங்கி னேன்.

"கையொப்பமிடு உன்னுடைய நன்மையை முன் னிட்டு கையொப்பமிடு—அவளுடையதையும் கூட முன் னிட்டு—" என்று அவசரமாகக் கூறினன்.

"அவளுடையதை முன்னிட்டு என்ன?"

"இதில் எழுதியபிறகு காரணம் தெரிந்து கொள்ளு வாய்."

"அவளைப்பார்த்த உடனே கையெழுத்துப் போடு கிறேன். அதற்குமுன் என்னை இம்சிப்பதில் பயனில்லை. என்னை மாடப்புறுவாக நினைத்து எனது இறகை முழுவ தும் பிடுங்க உத்தேசித்திருக்கிறீர்கள் போலிருக்கிறது. நான் கருடன் என்பதைப் பிறகு நீங்களே அறிந்து கொள்ளுவீர்கள்" என்று கடைசியாக மறுமொழி தந் தேன்.

"நான் அப்படி நினைக்கவில்லை" என்ற நந்தனன் "நீ கருடனாக இருந்தபோதிலும் கூட்டில் அடைக்கப்பட் டிருக்கிறாய். இதை மறுக்க முடியாதே?" என்று மீண்டும் கூறி என்னைப் பரிகாசம் செய்தான்.

"என்னைக் கொலைசெய்யப் போகிறீர்கள் என்று கூக் குரலிட்டு டாணாக்காரர்களை வரவழைக்கிறேன்" என்று பயமுறுத்தினேன்.

"கூவு பார்ப்போம்! எவ்வளவு பலமாகக் கத்திய போதிலும் சப்தம் வெளியே கேட்காது. உனக்கு இது வரையில் இப்பேர்ப்பட்ட சமயம் கிடைததிராது. நீ கூவு வதைக் கேட்க நாங்களும் ஆவலுடனிருக்கிறோம்" என்று சிரித்துக்கொண்டே பேசினான்.

ஏன் எனக் கடவினேன்.

"நாம் சொல்லுவதுபோல் நடக்க மறுப்பதால், இது வரை நீ நினைத்திராத தீங்கு உன்னைச் சமீபிக்கும். நாங் கள் வார்த்தை பிறழாதவர்கள் என்பதை ஞாபகத்தில் வை. சர்வ சாதாரண மனிதர்களைப்போல் எம்மையும் பாவிப்பையாயின் அஃது உன்னுடைய மதியீனத்தைக் குறிக்கும்" என்று உறுதியாகக் கூறினான்.

"நானும் வார்த்தையின்படி நடக்கும் மனிதனே, என்னைப் பயமுறுத்தி பணத்தை யபகரிக்க முடியாது" என்று உத்தரம் கொடுத்தேன்.

"உனக்கு ஒரு கைம்மாறு—அமிர்தாவை, உன்னுடன் சேர்ப்பதாகிய கைம்மாறு—செய்கிறோமே!"

"அவளுடைய தந்தை யாங்குளார்?" என்று நான் வினவினேன்.

"நீயே அவளைக் கேட்பாயாயின் உண்மை விளங்கும்" என்று மொழிந்த நந்தனன், "இதில் கையெழுத்துச்செய். அவளைப் பார். பிறகு அவளைக்கேள். அவளோ உன்னைப் பார்க்க ஆவலுள்ளவளாக இருக்கிறாள்" என்று கூறினான்.

"அதை நீ யாங்ஙனம் அறிவாய்?"

"நாகநாதா, எமக்கு எவ்வளவு தெரியுமென்று நீ கருதுகின்றாயோ அதைவிட அதிகம் யாம் அறிவோம்" என்று விடை பகர்ந்தான் இளையவன்.

அவன் மேலுக்கு ஒருகனவான்போலத் தோன்றினான். அழகிய அங்கியை அணிந்திருந்ததானது சாதாரண மனிதர்களை ஏமாற்ற உபகரணமாக இருந்தது. நான் உட்கார்ந்து தவித்துக்கொண்டிருந்த நாற்காலி வெளியிலிருக்குமோர் சூத்திரத்தின் உதவியால் வேலை செய்யப்பட்டதென்றும், அந்தப் பாவிகள் நான் செய்த ஒவ்வொரு செய்கையையும் ஓர் இரகசிய துவாரத்தின் வழியே கவனித்திருந்து அவர்களுடைய வேலை என்னால் முடிக்கப் பெற்றவுடன் சூத்திரத்தின் உதவியால் என்னைக் கைதியாக்கினர் என்றும் தெரிந்துகொண்டேன்.

"இதில் கையொப்பம் செய்ய மறுப்பதால் விளையும் தீங்கைப்பற்றி நீ சற்றேனும் யோசித்தையா?" என்று வினவினான் நந்தனன்.

"ஆமாம் யோசித்தேன். இவ்விதம் என்னை ஏமாற்ற முடியாது" என்று தளராமல் பதில் பகர்ந்தேன்.

"உன்னுடைய மறுத்தல் உனக்குக் கெடுதியைச் செய்வதோடு அவளுக்கும் தீங்கிழைப்பதாகும். உன்னுடைய விதியும் அவ்விதமே பயங்கரமாக முடியும். அவள் உன்னை எச்சரித்தும் நீ பொருட்படுத்தாமை பற்றி நீங்கள் இருவரும் ஒரே விதமாக அனுபவிக்கவேண்டும்" என்றான் ஜயன்.

"என்ன அனுபவம்? நான் உங்களுக்குப் பயப்பட வேண்டிய அவசியமில்லை" என்றேன்.

"அவனே மறுக்கிறான்" அவனுக்காக எதைக் காப் பாற்றி வைத்திருக்கிறோமென்றும், முரட்டுத்தனமாக இருக்கிறவர்களை நாம் எவ்விதம் சிக்ஷிப்பதென்றும் அவன் தெரிந்துகொள்ளட்டும். கொண்டுவா அந்த மேஜையை" என்று தன் தோழனுக்கு உத்திரவு செய்தான் நந்தனன்.

உடனே வெளியேசென்ற ஜயன் இரண்டு நிமிஷமானதும் ஒரு சிறிய சக்கரமேஜையையும் ஒரு சுருட்டுப்பெட்டியையும் எரிந்துகொண்டிருந்த மெழுகு திரியையும் கொணர்ந்தான். கொண்டுவந்த மேஜையை எனது முக வாய்க்கு நேராகப் போட்டான். அதன் காரணம் யாதென்று யோசிப்பதற்குள் அந்த மேஜையின் ஓர் அறையினின்றும் தோல் தொப்பி யொன்றை எடுத்து எனது தலை யசையா வண்ணம் அந்த நாற்காலியுடன் கட்டினான் ஜயன்.

"அடே கொலையாளர்களே, என்னை இவ்விதம் செய் வதின்பலனை அடையாமற்போகீர் என்பதை மனத்தில் பதியவையுங்களடா" என்று கோபத்துடன் கூவினேன்.

நான் அவ்விதம் பேசியதற்குப் பதிலாக அவர்கள் வெற்றியை நினைத்து என்னைப் பரிகாசமாகப் பார்த்து நகைத்தார்களே யன்றி பதிலளித்திலர். நான் அப்பொழுது இருந்த நிலைமையில் அவர்களை எதிர்ப்பதென்பது என்னுடைய மதீயினத்தைக் காட்டும் என்பதை நன்குணர்ந்து வாளா விருந்தேன். "இப்பொழுது இதைப் பார்த்தனையா?" என்று நந்தனன் அம்மேஜையின்மீது இருந்த சுருட்டுப் பெட்டியின் மேல் புறத்தைத் தொட்டவுடன் படீரென்று அதன் மேல்மூடி திறந்து கொண்டது.

மறுநிமிஷத்தில் அப்பெட்டியினுள்ளிருந்து ஏதோவொன்று என் முகத்திற்கு நேராகச் சீறி விழுந்தது. அதை இப்பொழுது நினைத்தபோதிலும், மெய் நடுங்குகின்றது. ஏனெனில் அம்மேஜையின்மீது ஒரு நாகப் பாம்பு படமெடுத்தாடிக்கொண்டிருந்தது. அதன் வாலில் ஒரு பச்சைக் கயிறு மேஜையின்மீது கெட்டியாகப் பதிய வைக்கப்பட்டு எரிந்துகொண்டிருந்த மெழுகு வர்த்தியில் கட்டப்பட்டிருந்தது.

நான் ஒரு பெருங் கூக்குரல் போட்டேன்; அதைப் பார்த்த அவ்விருவரும் மனதார நகைத்தனர்.

"உனக்கு ஓர் அதிசயத்தைக் காண்பிப்பதாகச் சொன்னேன் அல்லவா? இதோ தெரிகின்றதா" என்று மேஜையைச் சுட்டிக் காண்பித்த நந்தன், "இன்னும் அரை மணிநேரத்தில் மெழுகுத் திரி எரிந்து அந்தக் கயிற்றையும் தகித்து விடும். பிறகு நடக்கப்போவதை நான் சொல்லுவானேன்.— சர்ப்பம் உனக்கோர் முத்தியளிக்கும்; இப்பொழுதும் நேரமாகி விடவில்லை. இந்த அரைமணிநேரத்திற்குள் நீ யோசித்துச் சொல்லலாம்" என்று கூறி முடித்தான்.

"ஏ, பைசாசங்களே!" என்று நான் கூவியவுடன் ஆடிக்கொண்டிருந்த நாகம் மற்றொரு முறை என் முகத் தண்டையில் சீறி விழுந்தது. அதன் வாலில் கட்டப்பட்டிருந்தகயிறு இல்லாவிடில் என்னைக் கடித்தே இருக்கும்.

எனது மூளை கலங்கியது. எனக்கும் மரணத்திற்கும் ஓர் அங்குலமே இருந்ததை யறிந்து மனத்தடுமாற்றம் அடைந்தேன். பூலோகத்தில் யாரே மரணத்திற்குப்பயங் கொள்ளாதவர்கள். தொண்ணூறு வயதாகிய விருத்தர்களும் கூட இறப்பதற்கு அஞ்சுகின்றார்கள் என்றால் இளைஞர் சிறுமியர் பயங்கொள்ளக் கேட்பானேன்.

"இவ்விரவு உனக்கு நல்லிரவாக இருப்பதாக! நாளைக் காலையில் நாங்கள் இந்தக் காகிதத்தைப் பணமாக மாற்றிக் கொள்வதற்குள் இப்பாம்புடன் நீ நன்றே பழகு" என்று கூறி வெளியே போகும் கதவண்டைசென்றான் தனது நண்பனுடன். "ஆமாம், அமிர்தாவும் இதேவிதமாக அநுபவிப்பாள். எங்களுக்கு விரோதமாக அவள் உன்னை எச்சரித்தாள் அல்லவா, அதன் பலனை அனுபவிப்பாள்" என்று என்பக்கமாகத்திரும்பிப் பேசினான் நந்தனன்.

"வேண்டாம்! வேண்டாம்!! என்றுகூவி "தயவுசெய்து அவளை மன்னியுங்கள்" என்று கெஞ்சினேன்.

நான் சொன்னதைக் காதில் வாங்காமல் அவர்கள் இருவரும் வெளியேபோய்க்கதவைப் பூட்டிக்கொண்டு சென்றனர். என்னை அந்த சர்ப்பம் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தமையால் நான் அப்படி இப்படி அசையவும் சக்தியற்றவளாக இருந்தேன்.

பத்துநிமிஷங்கள், ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாகத்தோன்றிய பத்துநிமிஷங்கள்—கழிந்தவுடன் நச்

சப்தமாக இருந்த இரவு ஒரு பலத்த கூச்சலால் நிறைந்தது. ஒரு பெண் பிள்ளை பயத்தால் கத்துவதாகத் தோன்றியது.

நான் சற்று கவனித்துக் கேட்டதில் அந்த சப்தம் என் காதலி அமிர்தாவினுடையதாக இருந்தது.

அவளுடைய சப்தம் பக்கத்து அறையினின்றும்வந்தது. அவள் மறுமுறையும் பயத்தால் நடுங்கிக் கொண்டு, "ஆ! வேண்டாம்! ! என்னை மன்னியுங்கள்! ஐயோ, அது மட்டும்—வேண்டாம்; வேண்டாம்!" என்று கெஞ்சின சப்தம் என் காதில் விழுந்தது.

ஒரு சுவரே என்னையும் அவளையும்—என் அன்பினளாகிய அமிர்தாவையும்—பிரித்திருந்த போதிலும், நான் அவள்படும் அவஸ்தையினின்றும் அவளைக் காப்பாற்றச் சக்தியற்றவனாக இருந்ததால் மனமிக நொந்தேன்.

பயத்தால் மறுபடியும் கூச்சலிட்டாள். நானோ பீதியடைந்து இருந்த இடத்தைவிட்டு நகர்ந்தேன் அல்லேன்.

## ஏழாவது அத்தியாயம்

### பூலோகத்தை மறந்தேன்

என்னை அவ்விதம் விட்டுப்போன சண்டாளர் எதற்கும் அஞ்சாரகளென்று நிச்சயம் செய்துகொண்ட தோடு என்னுடைய கஷ்டகாலத்தை நினைத்துத் தன்னில் தானே நொந்துகொண்டேன். உடனே பாம்பு மற்றோர் முறை சீறி விழுந்தது. மூன்று அங்குல வித்தியாஸமே எனக்கும் அதற்கும் இருந்தது. தலையைத்திருப்பவோ முடியவில்லை. கைகளையும் கட்டிவிட்டிருக் கின்றனர். எனது உயிர் எரிந்துக்கொண்டிருக்கும் மெழுகுதிரியில் இருந்ததாகப்பாவித்து அதைக் கண்கொட்டாமல் பார்த் துக்கொண்டிருந்தேன். அது எரிந்து வரவரக்குறைந்துக் கொண்டு கயிற்றைச் சமீபித்ததானது ஒவ்வோர்நிமிஷமும் மரணத்தைச்சமீபித்தேன் என்பதை உணர்த்திற்று.

அமிர்தா யாதாயினளோ ? இன்னுமேதேனும் சப்தம் கேட்கின்றதா என்று கவனித்தேன். ஒன்றும் என் செவி யினுக்கு எட்டவில்லை. பின்னும் ஒரு முறை அவ்வீட்டில் நிச்சப்தம் குடிகொண்டது. என்னிடத்திருந்த இரசீதைத் திருடிச் சென்ற கள்வர்கள் நான் இறந்த உடன் மறுநாட் காலையில் பாங்கிக்குப்போய் காகிதத்தைப் பணமாக மாற் றிக்கொள்வார்கள் என்னும் எண்ணமும் அதின் மத்தியில் தோன்றிற்று. அவ்வறையைச் சுற்றிப்பார்த்து, என் போல் எவ்வளவுபெயர்கள் அந்த அறையில் உயிர் துறந்த னரோ வென்று யோசித்து அவர்களின் நிமித்தம் பரிதா பப்பட்டேன். அந்த ஏற்பாடுகள் யாவும் கொடுமையான செயல்களைத் தெற்றென விளக்கின. அதிலிருந்து அவர்

கள் சாதாரணமனிதர்கள் அல்ல வென்றும் கைதேர்ந்த கொலைபாதகர்களென்றும், பலஅடாத செயல்களைச்சர்வ சாதாரணமாக நினைக்கக்கூடியவர்க ளென்றும் நினைத்தேன்.

கல்கத்தா போன்ற நாகரீகமான பட்டணங்களில் இரவு மிகவும் பயங்கரமாகவே தோன்றும். ஏனெனில் வெளியே சென்றவர்களில் திரும்பிவராதவர் எண்ணற்றவர்! பிணமாகக்காணப் படுவோர்பலர்! தலையற்ற முண்டங்கள் எவ்வளவோ! ஆனல் இவைகளைச்செய்யும் துராத்மாக்களை யாராலும் இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆகையால் நான் அகப்பட்டுக்கொண்டது வியப்பிற்கு இடமின்றியே இருந்தது.

வெகு நேரமாகத் தலைகீழாய்த் தொங்கிக்கொண்டிருந்தேனுதலால் வயிற்றில் ஏதோ சங்கடம் செய்தது. நினைவு தடுமாறிற்று. அவர்கள் சொன்னது போல் பின்னும் ஓர் ஆயிர ரூபாவுக்கு இரசீது கொடுத்து அமிர்தாவைக் காப்பாற்றுததற்கு மிகுதியும் வருந்தினேன். நான் அப்படியே செய்திருந்தபோதிலும் அவர்கள் அயோக்கியர்கள் தானே. சொன்னபடி—அமிர்தாவை என்னிடம் சேர்ப்பிப்பார்களா? என்று பலப்பல எண்ணங்களால் என் புத்தி கலங்கியது. அமிர்தாவுக்கு யாது நேர்ந்ததோ அறிகிலேன்.

கொஞ்சங் கொஞ்சமாய் மெழுகுவர்த்தி எரிந்துகொண்டு எனக்கும் மரணத்திற்கும் மத்தியில் இருந்த பச்சைக்கயிறைச் சமீபித்தது. பின்னு மொருதரம் பாம்பு கோபங்கொண்டு—சமீபத்தில் இருக்கும் அதின் இரையாகிய என்னைக்கடிக்கமுடியவில்லையே என்றும், தன்னுடைய வால் கயிற்றில் கட்டப்பட்டிருக்கிறதே என்றும் கோபங்

கொண்டு என்மீது சீறிவிழுந்தது. என்னை அடையமுடிய வில்லை யென்று மேஜையின் மீது சுற்றியும், எழுந்தும், ஆடியும், சீறியும் அட்டகாசம் செய்துகொண்டு விஷத்தை யும் கக்கிற்று. பாம்புகள் தன்னுடைய இரையை எப் படிக்கொல்லும் என்பதைக் கண்கூடாக அப்பொழுதே கண்டேன். நான் அதைப்பார்க்காமல் இருக்க முடியவில்லை. மற்றைப்பக்கம் திரும்பவோ முடியவில்லை. கண்ணைமூடிக் கொள்ளலாமென்றாலோ பயம் பின்பற்றி இழுக்கிறது. அந்தப்பாம்பு நின்ற நிலைமையிலிருந்தும் வெகுசீக்கிரமாக வெற்றி பெறப்போகிற தென்பது விளங்கிற்று.

வெற்றியா? அதன் பொருள் என்ன? ஒரு பலமான கடிமரணவேதனை, மரணக்கூச்சல், எனது தலைவீங்கல் நான் என்று சொல்லக்கூடிய நாகநாதன்—அமிர்தாவின் காதல னாகிய நாகநாதன்—இலக்ஷாதிபதியாகிய—நாகநாதன்— போனவிடமே தெரியாமற் போய்விடும். என்று அவை களை நினைத்தபொழுதே பயத்தால்உயிர் நீங்கியவனாயி னேன்.

திடீரென்று அமிர்தா மறுமுறையும் கூச்சலிட்டாள்; நான் அவள் பெயரைச்சொல்லிக் கூவினேன். ஆனால் பதில் மட்டும்ஒன்றுமில்லை. அவளும் என்னைப்போலவே அனுப விக்கின்றாளா? அந்தப் பாபிகள் சொல்லியபடி செய்து விட்டார்களா? அவள் அவர்களுடைய இரகசியத்தை வெளியிட்டு விட்டாளாதலால் பழிக்குப் பழிவாங்க அவர் கள் பின்வாங்கமாட்டார்கள் என்று நினைத்துக்கொண் டேன்; அவளைக் காப்பாற்றுவதற்கு இல்லாத இரங்கையா எங்குபோயினரோ என்று நினைத்து நினைத்து மனமிக நொந்தேன். ஆயினும் இப்பேர்ப்பட்ட மோசக்காரர் களுடைய சூழ்ச்சியில் விழுவேன் என்று நினைக்கவில்லை.

எனது நேயனை விடுவிக்கச் சென்றவிடத்தில் அவ்விதமான ஆபத்து விளையுமென்று எண்ணிலேன்.

இவைகளின் பொருளென்ன? எனக்கு விரோதமாக இவ்வடாத சூழ்ச்சிசெய்யக் காரணம்யாது? பழிக்குப்பழி வாங்குவதுபோலன்றோ இருக்கிறது. அப்படி எவருக்குமே நான் இச்சென்மத்தில் தீங்கிழைத்திலேனே! ஒருகால் இதுதான் நவீன நாகரீகமோ? என்று வீணே யோசித்தேன். பன்முறை ஞாபகப்படுத்திப்பார்த்தும் நான் ஜெயனையாவது நந்தனையாவது அதுவரையில் கண்டதாகத் தோன்றவில்லை. ஆனால் எனக்குக் கதவுதிறந்த வேலையாளை மட்டும் நான் தேசாடனத்தில் சந்தித்து இருப்பதாக ஞாபகம் வந்ததே யொழிய இன்ன இடத்தில் சந்தித்தேன் என்று தெரியவில்லை.

நான் அங்கு சென்றவுடன் ஒரு மோட்டார்வண்டி வந்து நின்றதையும், நான் ஏறிவந்த வண்டிக்குப் பணம் கொடுத்தனுப்பப்பட்டதையும் நான் கேட்டது ஞாபகத்திற்கு வந்தது.

நான் இறந்தபிறகு என்னுடைய மிருததேகத்தை என்ன செய்வார்களோ? அதற்குப் பலவழிகள் உண்டு என்று எனக்குத்தோன்றிற்று. அவர்கள் அதைப் பூமியில் புதைக்கலாம் அல்லது நெருப்பால் எரிக்கலாம் இவை இரண்டும் இன்றி அதை யொருபேழையில் அடக்கஞ்செய்து யாரும் அறியாத அயல்நாட்டுக்கு அனுப்பியும் விடலாம். போலீஸ் ஸ்டேஷனில் விசாரித்தால் வருஷமொன்றுக்கு அநேகர் காணமற் போயிருக்கிறார்கள் என்றும், அவர்களுடைய சவத்தையும் காணும்படியான பாக்கியத்தை அவர்களின் உற்றார் செய்யவில்லை என்றும் தெரிய வருகின்றதற்குக் காரணம் இதுவே.

என்னால் கூடியவரையில் அவள் நாமதேயத்தைச் சொல்லிக்கூவியும் பதில்வந்திலது; எனது சப்தம் அவ் வறையை விட்டு வெளியே கேட்கவில்லை என்று நிச்சயம் செய்தேன்.

"அமிர்தா, நான் இங்கிருக்கிறேன். நாகநாதனாகிய நான் இங்கிருக்கிறேன். நீ எங்கே இருக்கிறாய்?" என்று பின்னும் கூவினேன்.

ஆனால் யாதொரு பதிலும் கேட்கவில்லை. அந்த பயங் கரமான பாம்பு எழுந்து என்னையே நோக்கியவண்ணம் இருந்தது. அஃது தன்னுடையநாக்கை நீட்டுகையில் என்னுடைய பயம் முன்னையினும் விடப்பன்மடங்கு அதி கரித்தது. எனக்கு முன்னிலையில் மரணம் சர்ப்பரூபமாக நின்றது.

சப்தமில்லாமல் இருந்தமையால் பயம் ஒவ்வோர் நிமிஷமும் அதிகமாயது. அமிர்தா சர்ப்பம் தீண்டப்பட்டு இறந்து விட்டனள் என்றே நினைத்தேன்.

"அமிர்தா! அமிர்தா!!" என்று என் பலங்கொண்டு கூவினேன்.

எவ்வளவு கூவியும், மறுமொழிவந்தபாடில்லை. நான் பல்லைக்கடித்துக்கொண்டு என்னுடைய முழு பலத்தினாலும் எனது பிணிப்பினின்று வெளிவரமுயன்றேன். நான் எண்ணிய எண்ணம் கைகூடுவதற்குப் பதிலாக, நான் கட் டப் பட்டிருந்த கயிறு என் சரீரத்தில் இன்னும்பலமாக அழுந்தலாயது. ஒவ்வோர் அவயவமும் பலமின்றிப் போயது. உடனே எனது மதியை இழந்தேன்.

திடீரென்று மெழுகுதிரி எரிந்து அவிந்தது! அந்த காரம் அவ்வறையைச் சூழ்ந்தது! மேஜையின் மீது பாம்பு சுருண்டு கிடந்தது!

வர்த்தி எரிந்துங்கூட பாம்பு என்மீது விழாததுதான் வியப்பைத்தந்தது அதனால் பலத்த யோசனையில் ஆழ்ந்தேன். கொஞ்சநேரத்திற்குள் வெளிக்கதவு சாத்தப்பட்ட சப்தம் கேட்டமையால் அவர்கள் வெளியே சென்று விட்டார்கள் என்று நான் நினைத்தேன். பக்கத்து மேஜையின் மீது இருந்த கடிகையாரம் மூன்றடித்தது. அவ்வறையில் ஒன்றரைமணிநேரம் இருந்தேன் என்பதை யுணர்ந்தேன். எனது தோழனாகிய கோவிந்தராமனுடைய பெயரையும் அவன் சீட்டாட்டத்தில் அதிக விருப்பமுடையவ னென்பதையும் அவர்கள் எவ்விதம் அறிந்து இருந்தார்கள் என்பது, அதிக ஆச்சரியமாக இருந்தது. அந்த ஏற்பாடுகள் யாவும் மிக்க யோசனையுடன் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்றும் காலையில் எனது இரசீது பணமாக்கப்படுமென்றும் யோசித்துக்கொண்டேன். நான் மரணத்தையடைய வேண்டுமென்பதும் அவர்கள் சுயேச்சையாகத் திரியட்டும் என்பதும் கடவுளின் கட்டளைகளேபோலும் என்று நினைத்தேன்.

என்னைப்பற்றிய கவலை எனக்குச் சிறிதும் கிடையாது. எனது முழுஎண்ணமும் அமிர்தத்தைப்பற்றியதாக இருந்தது; அவள் என்னை அன்றிரவு இரம்பாவில் எச்சரித்ததின் நிமித்தம் அடைந்த மரணத்தைப்பற்றியே அதிகக் கவலைகொண்டவனாக இருந்தேன்.

இரம்பாவில் அன்று நடந்தவைகள் என் ஞாபகத்திற்கு வந்தன. சந்திரனொளியால் பிரகாசித்த இரவும், அம்மாதினுடைய மிருதுவான கரங்களின் ஸ்பரிசமும், ஆழங்கண்டு பிடிக்கமுடியாத கண்களும், கொஞ்சும் மொழிகளும், உண்மையன்புடன் என்னை எச்சரித்த வார்த்தைகளும், என் முன்தோன்றுபவை போன்றிருந்

தன. அவளுடைய எதிரில் நான் நிற்பதாக மனோபாவனை செய்துகொண்டேன்.

அமிர்தாவினுடைய இடையில் பிரகாசித்திருந்த பாம்புத் தலைமுகப்புடன் கூடிய ஒட்டியாணம் ஞாபகத்திற்கு வந்தது. அமிர்தாவினுடைய எண்ணமே என்னை மூழ்கச் செய்தது. அதாவது அவளைப்பற்றிய எண்ணமாகிய வாரிதியில் மூழ்கி இருந்தேன். நான் ரொம்ப கஷ்டப்பட்டதில் கொஞ்சம் அசையச் சக்திபெற்றேன். ஆனால் பாம்போ சீறிவிழுந்தது; அதன் நுனிநாக்கு என் கன்னத்தில் பட்டது. கண்ணுக்கு எதிரில் ஒரு பெரிய சிவப்பு வர்ணம்தோன்ற என்னுடைய அறிவு கெட்டது. மற்றொருமுறை பாம்பு சீறியதைக் காதால் கேட்டேனேயன்றி பார்க்கவில்லை. பூலோகத்தை மறந்தேன். என்னால் கூடியவளவு கூச்சலிட்டேன். பிறகு நான் கூவச் சக்தியற்றவனாகிப் பிரக்ஞை தவறியவனாயினேன்.

# எட்டாவது அத்தியாயம்

## இரகசியம் நூறுமடங்கு அதிகரித்தது

சிறிது சிறிதாக என்னுடைய ஞாபகம் எனக்கு வரவே என்னைச் சூழ்ந்திருந்தவைகள் புலப்பட்டன. நான் இருந்த இடம் இருள்மூடி இருந்ததாயினும் ஒரு துவாரத்தின் வழியாகக் கொஞ்சம் வெளிச்சம் உட்பிரவேசித்தது.

மறுநிமிஷத்தில் பயங்கரமான எண்ணங்கள் மனத்தே உதித்தன. பாம்புக்குப் பயந்து இருந்த இடத்தைவிட்டு எழுந்திருக்கவில்லை. புத்தி கலங்கியதாகத் தோன்றிய போதிலும் நூதன பலத்துடன் கூடியவனுயினேன். என்னபலம் உண்டானபோதிலும் நான் பாம்பினிடத்தில் பட்ட கஷ்டத்தை மறந்தேனிலன்.

மெதுவாக என்னுடைய தலையைத் திருப்பி மேஜையைப் பார்த்தேன். மேஜை இருளில் கிடந்தது. ஆதலால் எதையும் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனுல் நான் ஆச்சரியம் அடையும்படி, என் கைவிடுவிக்கப்பட்டிருந்ததோடு நாற்காலியும் பழையபடி இருந்தது. என்ன நேர்ந்ததென்று எனக்கே தெரியவில்லை. பாம்பு கடிக்குமோவென்று நாற்காலியில் உட்கார்ந்தவண்ணமே நகர்ந்தேன். ஆனுல் மேஜையின்மீது யாதும் காணப்படவில்லை. என்னை மறுமுறையும் திடீரென்று யாராவது வந்து எதிர்ப்பார்களோ என்று அஞ்சிக் கொஞ்சம்நேரம் அவ்விடத்திலேயே இருந்தேன். பிறகு சட்டென எழுந்து சிறிது வெளிச்சம்வரும் இடத்திற்கு ஓடினேன். அஃது ஒரு பலகணியாக இருந்தது. அதைத் திறந்த உடன் சூரிய வெளிச்சம் அடிக்க திடீரென்று வந்த சூரிய வெளிச்சத்

தால் கண்ணொளிமங்க அசையாமல் அவ்விடமே நின்றேன். பிறகு நான் பின்புறம் திரும்பிப்பார்க்கையில் காலியான மேஜையையும் என்னை நமனுலகனுப்பவந்த பாம்பு உயிர் நீங்கிக் கிடப்பதையும் கண்ணுற்றேன். அதை அணுகுவதற்குக்கூட முதலில் பயந்தேன், அதனுடைய வாலின் கயிறு கொஞ்சம் எரிந்ததுபோக பாக்கி அப்படியே இருந்தது. கூர்ந்து நோக்கியபிறகு அஃது உயிர் இன்றிக் கிடப்பதையுணர்ந்து மனோசமாதானம் அடைந்தேன்.

சீட்டுக்கட்டு கிடந்த மேசையின்மீது மைக்கூடும் இறகும் இருந்தன. பக்கத்தே எனது பாங்கி இரசீதுப் புஸ்தகம் கிடந்தது. அதை நன்றே திறந்துபார்த்ததில் நான் கையெழுத்துப் போட்டுக்கொடுத்த இரசீது ஒன்றுமட்டும் காணப்படவில்லை. அப்புஸ்தகத்தை என்னுடைய சட்டைப்பைக்குள் பத்திரம் செய்துவிட்டு என்னுடைய கைக்கடியாரத்தை எடுத்துப் பார்க்க பத்தடித்துப் பதினைந்துநிமிஷமாக இருந்தது. அந்தப் பாவிகள் அதற்குள் இரசீதைப் பணமாக்கிச் சென்றிருப்பார்கள் என்று கலக்கங்கொண்டேன்.

மறுநிமிஷம் அமிர்தாவின் ஞாபகம் வர, என் சட்டைப் பையில் கிடந்த கைத் துப்பாக்கியை எடுத்துக் கொண்டு அவ்வறையினின்றும் வெளியே சென்றேன். வீடுமுழுவதும் அமிர்தாவைத்தேடியும் பயன் அடைந்தேனில்லை. எந்த அறையினின்றும் இரவு ஒரு பெண்பிள்ளையின் சப்தம் வந்ததோ அவ்வறையினுள் நுழைந்துப்பார்த்தேன். அவ்வறை முழுமையும் ஒட்டடையும் புழுதியுமாக இருந்ததால் வெகு நாட்களாகயாரும் அவ்விடத்தில் வாசம் செய்யவில்லை என்பது வியக்தமாயது. நான் முந்திய இரவு வந்த அவசரத்தில் அவைகளொன்றையும் கவ

ணித்திலேன். பின்னும் மீதி இருந்த எல்லா அறைகளை யும்—சமயலறை முதல் நடுக்கூடம் வரையில் அனைத்தை யும்—போய்ப்பார்த்தேன். சிற்சில அறைகள் வருஷக் கணக்காகத் திறக்கப்படாமலும் இருந்திருக்கின்றன. நான் அவ்வீட்டில் சுற்றிக்கொண்டிருக்கும்போதே ஒருவிதமான எண்ணம் உதித்தது.

அதாவது நான் இறந்திருப்பேன் என்று நினைத்த அப்பாவிகள் எனது சரீரத்தை அப்புறப்படுதத வெண்ணி வருவார்கள் என்ற எண்ணம் சட்டென உதித்தது. உடனே டெலிபூன் இருக்குமிடத்தைத் தேடினேன். ஆனால் அந்த வீட்டில் டெலிபூன் இல்லை. வேறெந்த வீட்டிலிருந்தோ என்னை அழைத்திருக்கவேண்டும் என்று எண்ணினேன். பிறகு இரவு கேட்டது அவளுடைய சப்தமென்பதில் சிறி தும் ஐயமில்லை என்றும் ஆயிரம் பெண்பிள்ளைகள் பேசுகை யிலும் அமிர்தாவினுடைய குரலை நான் கண்டுகொள்ளு வேன் என்றும் நினைத்தேன்.

அவள் அங்கு வரவேண்டிய காரணம் என்ன? கூச்ச லிட்டது எதுபற்றி?

நடுக்கூடத்துவழியே செல்லும்பொழுது பூமியின்மீது பளபளப்பாக ஏதோ ஒன்று கிடந்தது. அதை எடுத் துப் பார்த்து ஆச்சரியம் அடைந்தேன். அஃது அமிர் தாவினுடைய கையில் விளங்கிய தோடா. இரம்பாவில் அதை அவள் அணிந்திருந்தது இன்னும் என் ஞாபகத்தி னின்றும் அகலவில்லை.

அதைக் கையில் எடுத்துச்செல்லலாமென்று யோசித் தேன்; பிறகு ஏதோ ஒருமாதிரியான எண்ணம் உதிக்க எடுத்த இடத்தில் வைத்துவிட்டு வெளியேசென்று அரை மைல் நடந்தேன். எதிரில் வந்தவண்டியில் ஏறி ஹேஸ்

டிங் தெருவிலுள்ள எனது பாங்கிக்கு அதிவிரைவில் செலுத்தும்படி சொன்னேன்.

நான் பாங்கியில் நுழையும்பொழுது மணி பதினொன்று அடித்தது. எனக்குத் தெரிந்த கஜாநிதி யொருவனை யடைந்து என்னுடைய இரசீதொன்றுக்குப் பணம் கொடுக்கப்பட்டதாவென்று அவனுடன் வினவினேன்.

"நாகநாதரே, இப்பொழுதே பணம் கொடுத்தேன். தாங்கள் அந்த மனிதனை வாசலில் சந்தித்திருக்கலாமே. அவன் இவ்விடமிருந்து வெளியேசென்று இன்னும் ஒரு நிமிஷங்கூட ஆகவில்லை" என்று அவசரமாகப் பதிலளித்தான்.

அவன் சொல்லி முடிக்குமுன் நான் அவனுக்கு வந்தனமளிக்காமல் வெளியே ஓடினேன். வெளியே வந்து இரண்டடி எடுத்து வைக்குமுன் கூப்பிடு தூரத்தில் ஜயனைக்கண்டேன். நான் பலமாகக் கூவியும் என்னுடைய வண்டிக்காரன் வேறுபக்கம் திரும்பி நின்றனுகையால் உடனே வண்டி கொண்டுவரப்படவில்லை. அதற்குள் என்னை அறிந்துகொண்ட ஜயன் தனது வண்டியிலேறி வேகமாக விடும்படி வண்டிக்காரனைத் தூண்டினான்.

உடனே நானும் எனது வண்டியில் ஏறிக்கொண்டு ஜயன் ஏறிச் சென்ற வண்டியைத் தொடரும்படி என்வண்டிக்காரனை ஏவினேன். நான் ஏறி இருந்தது திறந்த வண்டி. ஆனால் ஜயன் சென்றதோ மூடப்பட்டிருந்தது. அக்கொலைபாதகன் எனக்குச் சொந்தமான ஆயிரம் ரூபாவுடன் ஓடியபடியால் அவனை விடமனமில்லாதவனாயினேன்.

எனது வண்டியை நிறுத்தி போலீஸ்காரனிடம் தெரியப்படுத்தலாமென்று நினைத்தேன். அவ்விதம் செய்தால்

அவன் தப்பித்துக்கொள்வான் என்று நிச்சயம்செய்து பின் தொடர்ந்தேன். அந்த வண்டியின் நம்பரையாவது பார்க்கும்படி எனது வண்டிக்காரனுக்குச் சொன்னேன். அநேக வண்டிகள் போய் வந்து கொண்டிருந்தமையால் அஃது முடியாமற் போயிற்று. நான் இரவு முழுமையும் தூங்காமல் இருந்தமையாலும், புழுதியில் படுத்திருந்தமையாலும் என்னுடைய வேஷத்தைக்கண்ட பாங் கஜாநிதி யாது எண்ணிக்கொண்டனனோ தெரியவில்லை.

எங்களுடைய இரண்டு வண்டிகளும் சென்றவேகத்தால் தெருவே நடந்த ஜனங்களெல்லாம், பயத்தால் மூலை முடுக்குகளில் நுழைந்து கொண்டனர். எனது வண்டிக்காரனுக்கு வண்டியை வேகமாக ஓட்டுவதில் பிரியம் அதிகரித்தது என்னுடைய நற்காலமே என்று சந்தோஷம் அடைந்தேன்.

"அதோ அந்த வண்டியில் போகின்றவன் ஆயிரம் ரூபாவைக் களவாடிக்கொண்டு போகிறான்" என்று என் வண்டிக்காரனிடம் சொன்னேன் "எஜமானே, நான் அந்த வண்டியின் மீதே கண்ணாக யிருக்கிறேன். தாங்கள் யோசிக்க வேண்டாம்" என்று மறுமொழி பகர்ந்தான் என் வண்டிக்காரன்.

அனேக வண்டிகள், ஐயன் ஏறிப்போவதையொத்த பல வண்டிகள், எமக்கு எதிரே அங்கும் இங்கும் போய்க் கொண்டிருந்தன. அப்படி இருந்தும் அந்த வண்டியை கண்ணோக்கிய வண்ணமாகவே நாங்களிருவரும் சென்றோம். அந்த வண்டிக்காரன் எங்களுடைய வண்டியைத் திரும்பிப்பார்த்து பின்னும் வேகமாக விடலாயினான். அவனுடைய சாதுரியமான சாரத்தியத்தை நான் மிகவும் கொண்டாடினேன். தான் தப்பித்துக்கொண்டால் ஐயன்

அந்த வண்டிக்காரனுக்கு நல்ல வெகுமானம் செய்வதாகக் கூறி இருப்பான் என்றே நினைத்தேன்.

அவனுடைய வண்டி கீழசிட்டபுரம் இரஸ்தாவைத் தாண்டிப்போய் அனேக பல சிறு தெருக்களின் வழியாகப்போக அதை என்னுடைய வண்டி தொடர்ந்தது; கடைசியாக டெல்ஹௌஸியை அடைந்து ஒரு கடையின் முன்னே வண்டியை நிறுத்தினன் ஜயனது வண்டிக்காரன்.

வண்டியினின்றும் திருடன் வெளியே இறங்குமுன் நான் வண்டியிலிருந்து குதித்து கைத்துப்பாக்கியை எந்தி வண்டிக் கதவண்டையில் நின்றுக்கொண்டேன். நான் ஒரு புறம் சென்ற உடன் எனது வண்டிக்காரன் மற்ற பக்கம் கதவண்டையில் நின்றுக்கொண்டான்.

நானே மறுநிமிஷம் கதவைத்திறந்தேன்; உடனே திருடனைக்கண்ணுற்றேன்.

இரண்டு பலமான அடிவாங்கப்பட்டவன் போலப் பின் வாங்கினேன். ஒரு வார்த்தையும் பேசச் சக்தி யற்றவனாயினேன். அந்த இரகசியம் நூறுமடங்கு அதிகரித்தது.

## ஒன்பதாவது அத்தியாயம்

### இரகசியத்தைத் தெரிந்துகொள்ள

வண்டியின் கதவைத் திறந்துபார்க்கையில் அதனுள் இருந்தது ஒரு மனிதன் அல்லன். ஒரு ஸ்திரீயாவள். அவள் அமிர்தா!

என்னைப் பார்த்தவுடன் அவளுடைய முகம் மாறுபாடடைந்தது.

"நீயா;" என்று கூவி, மேலேபேசச் சக்தியற்றவனாக ஊமையைப்போல் நின்றேன்.

"ஏன் நாகநாதரே! இது ஆச்சரியமான சந்திப்பே!" என்றாள் அமிர்தா.

நான் யாது புகன்றேன் என்பது எனக்கே தெரியவராது. ஜயனாகியதிருடன், இராங்கையாவின் குமாரி அமிர்தாவாக மாறியதால் நான் பிரமித்துப்போனேன். அமிர்தா ஒரு வண்டியில் ஜயனுக்காகப் பாங்கிக்கு வெளியில் காத்துக்கொண்டிருக்க வேண்டுமென்றும், ஜயன் பணத்துடன் அதேமாதிரியான வேறொரு வண்டியில் புறப்பட்டிருக்க வேண்டுமென்றும், நாங்கள் கவனித்துக்கொண்டு வருகையில் தவறி அவன் வண்டியைவிட்டு இவளைப் பின்பற்றி இருக்கவேண்டுமென்றும் சித்தாந்தம் செய்துகொண்டேன்.

வண்டியில் இருந்தது ஒரு மனிதனுக்குப் பதிலாகப் பெண்பிள்ளையாக இருந்தமையால் நான் ஏறிவந்த வண்டிக்காரன் தான்நின்ற ஸ்தானத்தைவிட்டுத்தன் வண்டியண்டை சென்றான்.

"நாகநாதரே, தாங்கள் கல்கத்தாவில் இருப்பீர்க

ளோவென்று நேற்றே யோசித்தேன்" என்று சாவதான மாகக் கூறினாள்.

"நேற்றே, அமிர்தா உன்னைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்தேன்" என்று நான் பதில் பேசினேன்.

அவள் ரோஜாவர்ணமான மெல்லிய பட்டாடை அணிந்து, தலையைச்சீவிமுடித்து, அவளுக்குச் சொந்த மான கல்லிழைத்த ஒட்டியாணத்தைத் தரித்து வங்க தேசத்து மாதையொத்திருந்தனள். அவள் அந்த ஆடை உடுத்தி இருந்தமையால் இரம்பாவில் இருந்ததைவிட அதிக அழகாகக்காணப்பட்டாள். "உன்னுடைய தந்தை யார் எங்கே" என்று கேட்ட நான் "ஏகவசனமாக," நீ, உன்னுடைய, என்று அழைத்ததைப்பற்றி மன்னிக்க வேண்டும் என்றேன்.

"அதொன்றும் குற்றமில்லை. தாங்கள் அவ்விதம் அழைப்பதே எனக்குச் சந்தோஷத்தைக்கொடுக்கின்றது. எனது தந்தை நேற்றுவரையில் இங்குதான் இருந்தார். அவர் சதாபிரயாணத்திலே இருப்பாராகையால் வெளியே போயிருக்கிறார். இந்தக் கடைக்குள் போய்வருகிறேன். தயவுசெய்து எனக்காகக் காத்துக்கொண்டிருங்கள். நாம் இரம்பாவில் இருந்து பல வருஷங்களாயதுபோலில்லையா? தாங்கள் இப்பொழுது முன்னையினும்விட அழகாக இருக் கிறீர்கள். இவண் சந்திக்குமாறு நேர்ந்தமைக்குச் சந்தோ ஷிக்கிறேன் என்று விடை பகர்ந்து புன்னகை பூத்த வத னத்துடன் என்னை கண்ணோக்கினாள். "நான் காத்திருக் கிருக்கிறேன்—சீக்கிரம் போய் வா" என்று சொன்ன வுடன் வண்டியை விட்டிறங்கி எதிரே இருந்த கடைக்குச் சென்றனள்.

என்னை மரணத்தினின்றும் காப்பாற்றியது அவளாக இருப்பளேல் அவளுடைய சாதுரியத்தை யாங்ஙனம் புகழுவேன். என்னைக் கண்ணேக்கிய முதல் நிமிஷம் மாறு பட்டுத் தோன்றினளேயொழிய மறு கணத்தில் மலர்ந்த முகத்துடன் என்னை மயக்க வாரம்பித்தனள். அவள் வெளி வந்தவுடன் அன்று இரவு நடந்த விஷயத்தைப் பற்றி சவிஸ்தாரமாகக் கேட்டு எனது சந்தேகத்தையும் ஆச்சரியத்தையும் நிவர்த்தித்துக் கொள்ளலாமென்று நினைத்திருந்தேன்.

அவள் என்னை எச்சரித்தது நான் பட்ட கஷ்டங் களில் அகப்படாமல் இருக்கவோ? என்னை எச்சரித்த தற்கு அபராதமாகத் தன் உயிர் விடவும் சம்மதித்தா இருந்தாள்? இக்கேள்விகளுக்குப்பதில் எனக்குத் தோன் றிலது.

பணம் கொள்ளை கொள்ளுவதின் நிமித்தம் இரங்கை யாவே அந்த ஏற்பாட்டைச் செய்திருப்பாரோவென்றுஞ் சந்தேகித்தேன். அநேகர் போவோரும் வருவோருமாக இருந்தும், நான் அங்கு யோசித்துக்கொண்டு நின்றதை எவரும் கவனிக்கவில்லை—அதாவது அவர்களுடைய வேலை யில் கண்ணுக இருந்தனர். "அஃதொன்று மட்டும் வேண் டாம் வேண்டாம்" என்று அவள் அன்றிரவு கூவக் கார ணம் யாதென்பதை அறியவேண்டுமென்னும் அவாமிகக் கொண்டேன். அவள் அந்த காளிகட்ட வீட்டில் கைதி யாகக் கொண்டுவரப்பட்டபொழுது, என்னுடைய நிலை மையைப்பற்றி அவர்கள் சொல்லி இருப்பார்கள் என்றும் அதற்கு அவள், "வேண்டாம்" என்று கெஞ்சிக் கேட் டிருப்பாள் என்றும் நினைத்தேன்.

பன்னிரண்டு மணியானதை என்னுடைய கைக்கடி

யாரத்தால் அறிந்தேன். கடைவீதி வியாபாரிகளாலும், பற்பலவிதமான வண்டிகளாலும் நிறையப்பெற்றது; மாதர்களில் அநேகர் தம்முடைய கணவர்களுடன் கடைகளுள் சென்று தமக்கு இஷ்டமான சாமான்களை வாங்கி, கணவர்களுக்குச் சுமையை அதிகரித்தனர். அவர்களும் தங்களுடைய மனைவியர் மனங் கோணுதிருக்கும்படி பணத்தைச் செலவு செய்ததோடு நில்லாமல் கூலியாட்களைப்போல், வாங்கிய சாமான்களை வண்டிவரையில் தூக்கிக்கொண்டு போவதைப் பார்த்த எவரும் மனமிரங்காமல் இரார்.

என்னுடைய முழு எண்ணமும், என்னுடைய பணத்தைக் கொள்ளை கொண்டு என்னையும் கொலைசெய்யத் துணிந்த பாபிகளுடன் அமிர்தா சேர்ந்திருந்தபோதிலும்—அவளையே நாடி நின்றது.

உடனே டெலிபூனில்போய் எனது நண்பன் கோவிந்தராமை அழைக்கலாமென்று நினைத்தேனுயினும், அங்கு நிற்பதாக அமிர்தாவிடம் வாக்களித்ததை முன்னிட்டு இடம் விட்டு அசையாமல் நின்றேன். வெகுநேரம் நின்றிருந்தும் அவள் வெளியே வந்திலள்.

பிறகு அந்தக் கடைக்குள் சென்று பார்க்கக் காணுமையால் மனவருத்த மடைந்தேன். வெளியேபோய் அமிர்தா ஏறிவந்த வண்டிக்காரனைக் கண்டு "நீ அந்த அம்மாளிடத்தில் பணம் பெற்றுக்கொண்டாயா"? என்று வினவினேன். "இன்னும் இல்லை. நான் இன்று அதிகாலைமுதல் இந்த அம்மணிக்கே சேவகம் செய்கிறேன். ஆனால் ஒரு பைசாவும் வாங்கவில்லை" என்று பதிலளித்தான் வண்டிக்காரன்.

"அவள் ஏதாவதொரு மனிதனுடன் பேசினளா?"

" ஆம், ஒரு கறுப்புச் சட்டை யணிந்திருந்த ஒரு கனவானுடன் பேசி இருந்தாள். அவர் இந்த அம்மணியை வெகு சீக்கிரத்தில் சந்திப்பதாகச் சொன்னது என்காதில் கேட்டது " என்றான்.

"அவனைப்பற்றி உனக்கு அவ்வளவுதான் தெரியுமோ?"

"அவ்வளவே நான் அறிவேன். என்னுடைய வண்டியில் இருந்தது ஒரு பாங்கித் திருடன் என்று தங்கள் வண்டிக்காரன் கூறினான்." " நான் அப்படி நினைத்தது தப்பிதம். வண்டியைத் தவறவிட்டேன் " என்றேன்.

" அஃது சர்வ சாதாரணம். என்னுடைய வண்டியைப்போன்று இவ்வூரில் எவ்வளவோ சிவப்பு வண்டிகள் இருக்கின்றன " என்று சேர்ந்து கூறினான் வண்டிக்காரன்.

அமிர்தா மறைந்தது பின்னும் என்னை அந்தகாரத்தில் ஆழ்த்திற்று. பின்னும் அரைமணிநேரம்—ஒவ்வோர் விநாடியும் ஒரு வருஷத்தைப்போல் நீளும் அரைமணி நேரம்—காத்திருந்தும் அமிர்தா வந்திலள். சாதுரியமாக அந்தக் கடையினின்றும் வெளியே சென்றுவிட்டிருக்க வேண்டும் என்றுன்னிக் கொண்டேன். அவள் என் விரோதிகளைச் சேர்ந்தவளென்பதும், என்னிடமிருந்து தப்பித்துக்கொள்ளவேண்டுமென்னும் எண்ணத்தினாலேயே அந்தக் கடைக்குள் சென்றனள் என்பதும் நிச்சயம். நான் பலவிதத்திலும் ஏமாற்றப்பட்டதை நினைத்து நினைத்து மனம் வருந்தி ஒருவண்டியில் ஏறி வீடு போய்ச் சேர்ந்தேன்.

போஜனம் செய்து என்னுடைய வேலையாளனை அழைத்து " என்னை டெலிபூனில் யாராவது கூப்பிட்டார்களா ?" என்று கேட்டு " கோவிந்தராம் வந்தாரா ?" என்று கடாவி முடித்தேன்.

“ அவரை நான் பார்க்கவில்லை. ஒருமணிநேரத்திற்கு முன்பு, நீங்கள் வீட்டிலிருக்கிறீர்களாவென்று யாரோ டெலிபூனில் கேட்டார் ” என்று மறுமொழி தந்தான்.

“ அது யார் ?”

“ பெயர் நன்ருகத் தெரியவில்லை. சதா—என்று தான்கேட்டது ”

“ சதாசிவபண்டாரம் தான். அவர் ஏதாவது சங்கதி சொல்லினரோ !” என்று வினவினேன்.

“ தாங்கள் ஊரில் இருக்கின்றீர்களா என்று மட்டும் வினவினர் ” என்று விடை கூறினன். உடனே நான் கோவிந்தராமுடைய நம்பரைச்சொல்லி டெலிபூனில் அழைத்தேன். அவன் எப்பொழுதும்போல சந்தோஷ மாகப் பதிலளித்தான்.

“ இன்று அதிகாலை ஒருமணிக்கு நீ என்னை அழைக்க வில்லையா ?” என்று வினவினேன்.

“ இல்லை ” என்று மறுமொழி புகன்று “ ஏன் ” என்று உசாவினன்.

“ விசேஷமாக ஒன்றும் இல்லை. நீ அழைத்தாயோ வென்று கேட்டேன். நீ பார்க் தோட்டத்திற்கு எப் பொழுது வருவாய் ?”

“ மாலை நான்கு மணிக்கு. நீயும் வருகின்றனையா ?”

“ ஆம். வருகிறேன் ”

“ ரொம்ப சந்தோஷம் ” என்று சொல்லிப் போயி னன்.

என்னுடைய அறைக்குட்சென்று வேறு உடை உடுத் திக்கொண்டேன். போலீஸ்டேஷனுக்குச் சென்று நடந்த சங்கதிகளைத் தெரியப்படுத்தலாமென்று நினைத்தேன்.

ஆனால் அமிர்தாவையும் காட்டிக்கொடுக்க வேண்டிவருமே என்று சங்கித்து அவ்வெண்ணத்தைத் தவிர்த்தேனெனினும் நானாகவே பாடுபட்டு இரகசியத்தைத் தெரிந்துகொள்ள உத்தேசித்தேன்.

சாதாரணமாக என்னை அறிந்துகொள்ளாமல் இருக்கும்படியாக உடைதரித்துக்கொண்டு பாங்கிக்குச் சென்று என்னுடைய ஆயிர ரூபா இரசீது திருடப்பட்டதென்று மானேஜரிடம் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்து வெளியேபோய் ஒரு வண்டியிலேறி காளிகட்டத்தையடைந்து வண்டிக்காரனுக்குப் பணம் கொடுத்தனுப்பிவிட்டு கீழ்ப்புறமே மெதுவாக நடந்து சென்றேன்.

## பத்தாவது அத்தியாயம்.

---

### ஒரு கறுத்த உருவம் வேகமாக நடந்தது.

முதல் நாளிரவு அகப்பட்டு உயிரை இழக்கும்படி நேர்ந்தவீட்டின் தெருவழியே சென்றுகொண்டிருந்தேன். அப்பொழுது மத்தியானம் சுமார் இரண்டு மணி இருக்கும். அவ்வீட்டின் எதிரில் போன உடன் சற்று நின்று நிதானித்துப்பார்த்தேன். வீட்டின் முன்புறம் இருந்த சிறு தோட்டத்தில் புல் அடர்ந்திருந்ததையும் இலைச்சாகால் தோட்டம் நிறைந்திருந்ததையும் கண்ணுற்று அங்கே வெகுகாலமாக எவரும் வாசம் செய்யவில்லை என நிச்சயித்துக்கொண்டேன்.

அந்தப் பழைய வீட்டை இரவு நன்முகக் கவனிக்காதவனுகையால் நன்றே கூர்ந்து பார்த்து பல வருஷங்களாக அதில் யாரும் வசிக்கவில்லை என்னும் தீர்மானத்திற்கு வந்தேன். அவ்விதம் நோக்குகையில் புழுதியடிபட்டு அவ்வீட்டுக் கதவில் தொங்கவிடப்பட்டிருந்த ஒரு விளம்பரத்தைப் பார்த்தேன்.

"சகல சாமான்களுடனும் வாடகைக்கு விடப்படும்" என்று எழுதப்பட்டு கொல்லதூலாவிலோர் குஜிராதி வர்த்தகரின் விலாசத்துடன் விளங்கிற்று. அதை யடுத்துள்ள வீட்டில் குடி இருக்கும் அடையாளங்கள் விளங்கினமையால் அங்குபோய் விசாரித்தேன்.

அவ்வீட்டு வேலையாளன், "தாங்கள் கேட்பது ஹநுமான் மந்திரத்தைப்பற்றித் தானே?" என்று வினவ, "ஆமாம்" என்று பதிலளித்தேன்.

"நான் இந்த வீட்டிற்கு வேலைக்கு வந்தது முதல் அங்கே யாரும் வசிக்கக்காணோம். நான் இங்கு வந்து பத்துவருஷங்களாகின்றன. அந்த வீட்டுள் ஒரு கிழவி வசித்து வந்ததாகவும் அவள் குணம் மிகவும் விசித்திர மானதென்றும் பலர் சொல்லக்கேள்விப்பட்டிருக்கிறேன். அந்தவீடு அழகாயும் குப்பையால் மூடப்பட்டதாயும் இருக்குமென்று நினைக்கிறேன். இரண்டுமாசத்திற் கொரு முறை ஒரு கிழவி அவ்வீட்டுள் நுழைந்து புதியகாற்று உட்செல்லும்படி கதவைத்திறந்து வைக்கிறாளே யொழிய சுத்தம் செய்யும் வழக்கமில்லை" என்றான்.

"அதில் குடியிருக்க எண்ணங்கொண்டேனும் யாராவது வந்து அவ்வீட்டை கண்ணோக்கும் வழக்கம் இல்லையோ ?" என்று உசாவினேன்.

"எனக்குத் தெரிந்த மட்டில் இல்லை" என்று உத்தரம் சொன்னான்.

"யாரும் உட் செல்லுவதாவது வெளியில் வருவதாவது கிடையாதென்கின்றாயோ ?"

"நான் பார்த்ததில்லை."

"ஆனால் மனிதர்கள் வந்து போய்க்கொண்டிருக்கின்றார்களா ! இல்லையா ?" என்று கேட்டேன்.

நான் கேட்ட கேள்வியால் மயங்கினவனைச் சிறிது நேரம் மௌனமாக இருந்து, பிறகு "ஐயா, உண்மையைக் கூறுமிடத்து அஃது ஓர் வேடிக்கையான கதையாக இருக்கின்றது. அந்தக் கிழவியின் சொந்தக்காரர்கள் வந்திருப்பதாகவும் நள்ளிரவில் வந்து போவதாகவும் கேள்விப்படுகிறேன்" என்றான்.

“ அவர்கள் எத்தன்மைத்தானவர்கள் ?” என்று கடாவினேன்.

“ இரண்டு மனிதர்களும் ஒரு பெண்ணும் என்கிறார்கள்.—நான் எவரையும் கண்டதில்லை; இரவில் இருக்கும் போலீஸ்காரரைக் கேட்டேன். அவர்கள் எவரையும் காணவில்லை என்றும் மேல் அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்தி இருக்கின்றார்கள் என்று சொன்னார்கள்” என்று கூறினான்.

“ பின் எவர்தான் பார்த்தது?” என்று கேட்டேன்.

“ அந்த சங்கதி எனக்குத் தெரியவாராது. கடைவீதியில் பேசிக்கொண்டிருந்தனர். அஃது எம்மட்டில் உண்மையோ ?” என்றான்.

“ இராக்காலங்களில் வண்டிகள் வந்து நிற்கும் சப்தம் கேட்டதில்லையா ?”

“ நான் எங்கள் வீட்டின் பின்புறத்தில் நித்திரைசெய்வதால் அப்பேர்ப்பட்ட சப்தம் கேட்கப் பிரமேயமில்லை” என்று பதில் பகர்ந்தான்.

நான் கேட்டகேள்விகளினால் என்னை அவன் சந்தேகித்தான் என்று கண்டு அந்த வீடு இருந்த ஸ்திதியைக் கவனித்து ஆச்சரியத்தால் கேட்டேன் என்றும் அதுவரையில் அவனை நிறுத்திவைத்ததற்கு மன்னிக்கவேண்டுமென்றும்கேட்டுக் கொண்டேன்.

“ ஒரு தடவையாவது வண்டி வந்துநின்ற சப்தத்தை நீ கேட்டதில்லையா ?” என்று சிறிது தாமதித்துக்கேட்டேன்.

“ மேல் மெத்தையில் நித்திரை செய்யும் எங்கள் வேலையாளன், நேற்றிரவு ஒரு வண்டி அவ்வீட்டுவாயிலில் நின்றதாகவும், அதனின்றும் ஒரு கனவான்இறங்கி உள்ளே

சென்றதாகவும் கொஞ்சநேரத்தில் உள்ளிருந்து வெளியே மற்றொருவன் வந்து வண்டிக்காரனுக்குப் பணம் கொடுத்து அனுப்பியதாகவும், ஒரு விசித்திரமான கதை சொல்லு கிறான். ஆனால் அவன் கனவுகண்டிருக்கவேண்டுமென நினைக்கிறேன். ஆதலால் இன்றிரவு வரும் போலீஸ் காரனை, நேற்றுயாரையாவது கண்டாயாவென்று கேட்க எண்ணங் கொண்டிருக்கிறேன்" என்றான்.

அந்தவேலையாளன் பார்த்தமனிதன் நானே யாகை யால் என்னுள் புன்னகை புரிந்தேன்.

பின்னும் சிறிதுநேரம் அவனுடன் பேசியிருந்து ஒரு ரூபாவை அவனுக்குக் கொடுத்துச் சென்றேன்.

அவ்விடமிருந்து புறப்பட்டு ஹனுமான் மந்திரத்தின் சொந்தக்காரருடைய குமாஸ்தாவைக்கண்டு எனது எண் ணத்தைச் சொல்லவே,—

"எங்களுடைய ஹனுமான் மந்திரம் பழையதாகப் போய்விட்டதோடு, பட்டணத்திற்கு வெகுதூரத்திற்கு அப்பால் இருக்கின்றமையாலும், அதற்கு உரியவர்களாக இருந்த எங்கள் எஜமானனின் அத்தையார் இறக்கும் தரு ணத்தில் செய்திருக்கிற 'பிரியச் சீட்டில்' "இந்த வீட்டில் நான் இறந்து இருபது வருஷங்கள் வரையில் வேறொருவர் குடி இருக்கவாவது, இந்தச்சாமான்களை மாற்றவாவது கூடாது" என்று கண்டிருக்கிறமையாலும் தங்களுக்கு அந்த வீட்டைக் கொடுக்கமுடியாதவர்களாக இருக்கி றோம். அதைவிட உயர்ந்ததும், நாகரீகமானதுமான வீடு கள் பல எங்களுக்கு [எஜமானனுடையது வேலைக்காரனுக் குச் சொந்தமாகப்பாவனை] உண்டு. அவைகளில் ஒன்றை தங்களுக்கு வேண்டுமானால் காண்பிக்கச் சொல்லுகிறேன்" என்றான்.

மூன்று நல்ல வீடுகள் எனக்கு வேண்டுமென்று அவனிடத்தில் நடித்து வெகுநேரம் ஹனுமான்மந்திரத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். அவனிடத்தில் பேசிக் கொண்டிருந்ததினின்றும், இரவில் ஹனுமான் மந்திரத் திற்குவந்து போவோர் இறந்த கிழவியின் சொந்தக்காரர் என்பதுவீண் கதை என்று உணர்ந்தேன்.

அதற்கென்று நியமிக்கப்பட்டிருந்த வேலைக்காரியை நீக்கிவிட்டதாகவும், அந்த வீடு பூட்டப்பட்டிருப்பதாக வும், திருடர் உள் நுழைந்தபோதிலும் அவர்களுக்குப்பயன் படும் படியான சாமான்கள் அங்கு இல்லையென்றும் சொன்னன்.

அப்பேர்ப்பட்ட விசாரணைகளின் பலனாக, அந்தப் பாதகர்கள் அவ்வீட்டை அகிருத்தியம் செய்ய உபயோ கிக்கிறார்கள் என்று சந்தேகித்த எண்ணத்தை நிச்சயம் செய்தேன்.

சாயங்காலம் நான்கு மணிக்கு கோவிந்தராமை தோட்டத்தில் சந்தித்துப் பேசிக்கொண்டிருக்கையில், காளிகட்டத்திலுள்ள ஒரு வீட்டைப்போய்ப் பார்த்துவர மனமிசைவானு வென்றும், போனல் அபாயம் எதிர் பார்க் கப்படுவதே என்றும் சொன்னேன்.

என்ன சங்கதி? விசேஷமென்ன?" என்று ஆச்சரி யத்தோடு வினவினன்.

"உண்மையைச் சொல்லவேண்டுமானல், காளிகட்டத் திலுள்ள ஹனுமான் மந்திரத்தின் பின்புறமிருக்கும் தோட் டத்தைச் சுற்றிப் பார்க்கவேண்டும். என்று கூறினேன்.

"ஏன்?"

"ஒரு சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ள வேண் டும்."

"நாகநாதா, ஏன் நீ பெரியதுப்பறிவோனாய்விட்டாப் போலிருக்கிறதே!" என்று கூறிப் புன்னகை பூத்தான்.

"அங்கேபோய்ப் பார்க்கவேண்டுமென்னும் அவா உண்டாயிருக்கின்றமையால் நான் நல்ல நிசியில் போவதாக உத்தேசிக்கின்றேன். நீ வருகின்றாயா?" என்று, அவன் சொல்லியதைக் கவனிக்காமல் வினவினேன்.

அவன் என்னுடைய ஆப்த நண்பனும் தைரியசாலியுமாகையால் நான்சொல்லியதை ஆநந்தத்துடன் கேட்டுக் கொண்டிருந்து "அதைப்பற்றி அதிகம் கேட்க அவா மிகுதியும் உடையவனாக இருக்கிறேன்" என்றான்.

"எல்லாம் பிறகு சவிஸ்தாரமாகச் சொல்லுகிறேன். நாம் இருவரும் ஒரேஇடத்தில் போஜனம் செய்வோம். நம்மை எவரும் கவனியாமல் இருக்கும்படிக்கு இரவு வெகுநேரம் கழித்துச் செல்லுவோம். நான் காந்தக் கைவிளக்கு கொண்டு வருகின்றேன்" என்று எனது நேயனுக்குச் சொன்னேன்.

"நான் என்னுடையதையும் கொண்டுவருகின்றேன். சங்கதியைமட்டும்சொல்லு?" என்று ஆவலுடன் கேட்டான் என் ஆப்த நண்பன்.

"நான் அவசியம் பிறகு சொல்லுகிறேன்" என்று வாக்களித்தேன்.

இரவு எட்டுமணிக்கு வைத்தியக் கலாசாலைவீதியிலுள்ள காப்பிக்கடையில் சந்திப்பதாக முடிவுசெய்து கொண்டு இருவரும் பிரிந்தோம்.

ஒருமணிக்கு இருவரும் வண்டியில் புறப்பட்டு காளிகட்டத்தையடைந்து அந்த வீட்டிற்குச் சிறிது தூரத்திலேயே இறங்கி விட்டோம். அங்கிருந்து கால்நடையாகச்

சென்று ஹனுமான்மந்திரத்தை யடைந்தோம். தெருவில் எரிந்து கொண்டிருந்த விளக்கின் பிரகாசம் குறையத் தலைப்பட்டது. நாங்கள் இருவரும் அந்தவீட்டின் வாசல் வழியாய்ப் பிரவேசித்துக் கொல்லைப்புறத்திலுள்ள தோட்டத்திற்குச் சென்றோம். அந்த நடுஇரவில் கல்கத்தா பட்டணத்தே இரவு வேலைசெய்யும் இயந்திரங்களின் சப்தம் காளிகட்டத்தில் கேட்கும்படி அவ்வளவு நிச்சப்தமாக இருந்தது.

"இந்தத் தோட்டத்தைச் சுற்றிப்பார்க்கவேண்டும்" என்று எனது நண்பன் கோவிந்தராமுக்குச் சொல்லி என் கையிலிருந்த காந்தவிளக்கின் சூத்திரத்தைத் திறந்தேன். பளிச்சென்று வெளிச்சம் பிரகாசித்தது. புற்கள் அடர்ந்த தோட்டத்துள் நடப்பது எங்களுக்கு கஷ்டமாக இருந்தது. ஆயினும் எங்களுடைய காந்தவிளக்கின் உதவியால் ஒவ்வோர் இடத்தையும் பரீக்ஷித்தோம்.

"யாராவது நம்மைக் கண்டால் என்ன சொல்லுவார்கள்? கொள்ளைக்காரர்கள் என்று கூச்சலிடுவார்களே" என்று கேட்டான் என்னுடைய தோழன்.

"இந்த இடம் காலியாக இருக்கிறது. நாம் பயப்பட வேண்டியதெல்லாம் போலீசார்களுக்குத்தான். அவர்கள் கண்டுகொண்டால் சில உண்மைகளை—எந்த உண்மைகளைத் தற்போது அவர்களிடம் சொல்ல மனமில்லாமல் இருக்கின்றேனோ அந்த உண்மைகளை—வெளியிடவேண்டி வரும்" என்று சமாதானங் கூறினேன்.

கொஞ்சநேரம் காதோடு காதுவைத்துப் பேசிக்கொண்டு தேடினோம். எங்கள் இருவருடைய ஆடைகளும் முற்களால் கிழிக்கப்பட்டுப்போயின. ஓர் இடத்தில் இரண்டு மரங்கள் பூமியின்மீது படர்ந்திருந்தன.

ஒரு மரத்தின் கீழ் உற்று நோக்குகையில் என்னை யறியாமலே ஒரு சப்தம் என் வாயினின்று உண்டாயிற்று. அந்த வீட்டின் மேல்மாடியினின்று பார்த்தபொழுதும் கட்புலனுக்கு மறைந்திருக்கும்படியாக ஒரு நீண்டகுழி புதிதாக வெட்டப்பட்டிருந்தது.

"ஆ, இதையே நான் இதுவரையில் தேடியது!" என்று ஆச்சரியத்தாலும், பயத்தாலும் புத்தி தடுமாறிக் கூவினேன்.

"இது என்ன குழி?" என்று உசாவி, "இதைத்தேடு வார்களா!" என்று என்னைப் பரிகாசம் செய்தான் கோவிந்தராம்.

"கோவிந்தா, அந்தக் குழி ஒரு மனிதன் அடக்கம் செய்வதற்காகத் தோண்டப்பட்டது!" என்று இரகஸிய மாகச் சொல்லி, "அந்த மனிதன் நானே!" என்று முடித்தேன்.

"நீயா!" என்று பயத்தால் கூவிய கோவிந்தராம், "நீ சொல்வதின் பொருள் ஒன்றும் எனக்கு விளங்க வில்லையே" என்று வினவினான்.

"நான் சொல்வதாவது, இந்தக்குழி யென்னுடைய பிரேதத்தைப் புதைத்து வைக்கத் தோண்டப்பட்டது என் பதுதான்; பாதகச் செயல்களில் சிக்குண்ட பலருடைய கதி இவ்விதமே யாகுமோ என்று நான் மிகவும் பயப்படு கிறேன்." என்று அவனுடைய காதோடு பேசினேன்.

"உன்னைக் கொலைசெய்யவா ஏற்பாடாயிருந்தது?" என்று கூவி, "எப்பொழுது?" என்று கடாவினான்.

"நேற்றிரவு, இங்கு சாதுரியமாகப் பிடிக்கப்பட்டும் தெய்வசகாயத்தால் தப்பித்தேன்."

"எப்படி? எல்லாம் எனக்கு விஸ்தாரமாகச் சொல்" என்று கேட்டுக்கொண்டான்.

"எல்லாம் பிறகு" என்று கூறி "இன்னும் எங்காவது குழிதோண்டப்பட் டிருக்கிறதாவென்று பார்த்துவரு வோம்" என்று சொல்லி மற்றொரு மிந்திரி மரத்தின் கீழ் சென்று பார்த்தேன். அங்கும் நான்கு சதுர அடியுள்ள ஒரு குழி தோண்டப்பட்டு மண்ணால் மறுபடியும் மூடப் பட்டிருந்தது. மேலே போடப்பட்டிருந்த மண்ணின்மீது கீரைவிதை தெளிக்கப்பட்டிருந்தமையால் ஒவ்வோர் செடி முளைத்திருந்தது.

"இதை என்னென்றெண்ணுகிறாய்?" என்று என்னு டைய தோழனை வினவினேன்.

"ஒருகால் யாராவது இவ்விடத்தில் புதைக்கப்பட்டி ருக்கவேண்டும்—இந்த விஷயத்தை உடனே நீ போலீ ஸார்களுக்குத் தெரியப்படுத்தவேண்டாமா?" என்று கேட் டான்.

நான் பதிலளிக்கமுடியாமல் மௌனம் சாதித்தேன்.

"நாகநாதா, என்னுடைய அபிப்பிராயம் யாதெனில் உனக்காகத் தயார் செய்யப்பட்ட படுகுழியில் மற்றவர் விழுமுன்னம் போலீஸாரிடம் சொல்லவேண்டுவது உன் கடமையல்லவா?" என்று மீண்டும் வினவினான்.

"இந்த இடத்தில் அல்ல, அக்கொலைபாதகர்கள் இனி இங்கு திரும்புவார்கள் என்றபயத்தை நீக்கிக்கொள். என் னுடைய விஷயத்தில் அவர்கள் தவறியதை அறிந்துகொண் டார்களாகையால், அநேகமாக இந்நேரத்திற்குள் அவர் கள் நம் நாட்டையே விட்டுவெளியே போயிருப்பார்கள் என்றெண்ணுகிறேன்" என்றேன்.

"அப்படியானல் இந்த இடத்தை நாம் தேடிப் பார்க்கவேண்டியது அவசியத்திலும் அவசியம். அப்பேர்ப் பட்ட பிரேதம் ஏதேனும் இங்குகிடக்கின்றதா என்று பார்க்க வேண்டும்" என்று வற்புறுத்தினன்.

அவன் எவ்வளவு தூரம் சொல்லியும், அவ்விதம் செய் வதால் என் காதலியும் மஹோபகாரியுமாகிய அமிர்தா வுக்கு கெடுதல் விளையுமோ வென்று சந்தேகித்துச் சற் றுத் தயங்கினேன்.

அதேசமயத்தில் சாகுகள் அசையும் சப்தம் கேட்டது. சட்டென்று எம்முடைய இருவிளக்குகளையும் நிறுத்தி விட்டு கவனித்தோம். ஏதாவது பூனைநடமாடும் சப்தமாக இருக்கலாமென்று நான் நினைத்திருந்தேன்; ஆனல் கோவிந்தராம் என்னைத்தொட்டு "அதோ பார்" என்று காதோடு சொன்னன்.

அவ்விடத்தை உற்றுநோக்குகையில் ஒருகருத்த உரு வம் வேகமாக நடந்தது.

நாங்கள் ஓரிடமும் விடாமல் பரீக்ஷிப்பதால் அவன் ஒளிந்திருந்ததையும் கண்டு பிடிப்போம் என்று பயந்து வெளியே ஓடத்தலைப்பட்டான் அதுவரையில் அங்கிருந்த வன். ஒரு நிமிஷம் வரையில் அதையே கவனித்திருந்து என்சட்டைப் பையிலிருந்த கைத்துப்பாக்கியை எடுத்து அவ்வுருவம் சென்றதிசையில் தாவினேன்.

## பதினோராவது அத்தியாயம்

---

### மரணசமானமான ஒரு படுகுழி

கீழே படர்ந்திருந்த செடி கொடிகள் என்னை ஓடமுடியாதபடி தடுத்தும் என்னாலானவரையில் ஓட கோவிந்தராம் என்னைப் பின் தொடர்ந்தான்.

அரை நொடியில், அவ்வுருவம் ஓடியபோதிலும் அவ் வீட்டு வாசலண்டையில் அதைப் பிடித்தேன். அவன் ஒரு கூனன். நான் அவனைப் பிடித்த உடன் பயத்தால் நடுங்கலானான். அரையில் கிழிந்த ஒரு கந்தையைக் கட்டிக் கொண்டிருந்தான். அவனுக்குச் சுமார் பதினெட்டு அல்லது பத்தொன்பது வயது இருக்கும் என்று கண்டேன். காலும் கையும் சாதாரண நீளத்தைவிடக் குறைந்திருந்ததோடு தலை பெரியதாக விளங்கினமையால் அவன் உருவம் பார்க்க விசித்திரமாக இருந்தது.

“இப்பொழுது என்ன செய்துகொண்டிருந்தாய்?” என்று நான் அவனைக் கேட்டேன்.

அதற்கவன் அடிபட்ட நாய்போல் நடுங்கி சுவரோடு சுவராய் ஒட்டிக்கொண்டான்.

“நீ யார் சொல்லு” என்று அதட்டினேன்.

அவன் ஒரு மாதிரியாகக் கத்தி என்னைப் பார்த்துப் பல்லைக் காட்டினான்.

“நீ யார்? நீ எங்கு வசிக்கின்றாய்?” என்று மீண்டும் வினவினேன்.

ஏதோ மறுமொழி தந்ததாக அவனுடைய உதடுகள் அசைந்தனவே யொழிய ஒரு வார்த்தையாவது அவன்

வாயை விட்டு வந்த பாடில்லை. மறுபடியும் நான்கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக "ஹோ ஹோ, ஹோ, ஹோ," என்று கூவிப் பின்புறத்துத் தோட்டத்தைக் கையால் சுட்டிக் காட்டினன்.

"அவன் என்ன சொல்லுகின்றான்?" என்று எனது நண்பன் உசாவினன்.

"அவன் சர்வமுட்டாள் என்று நினைக்கிறேன்."

"மூடனுக்குள்ள சகல குணங்களும் வாய்க்கப்பெற்றிருக்கிறான்" என்று சொல்லிய எனது நண்பன் நான் கூறியதை உறுதிப்படுத்தினன்.

அந்த விசித்திரமான ரூபத்தையுடைய வாலிபன் நாங்கள் அறிந்துகொள்ளமுடியாமல் ஏதேதோ உளறியதோடு பின்புறத்துத் தோட்டத்தையும் காட்டினன்.

"இவ்விதம் இவனுடன் வெகுநேரம் உரையாடிக் கொண்டிருப்போமேயானால் நம்மை டாணுக்காரர் கண்டு கொள்ளுவார்" என்று என் நண்பன் குறித்தான். உடனே மூவரும் அவ்வீட்டின் வெளியே சென்றோம். அவன் பேசியதிலிருந்து எதுவும் அறிய முடியாமற் போகவே நானும் கோவிந்தராமும் அவனை முன்னே போகவிட்டு அவன் வசிக்கும் இடம் தெரிந்துகொள்ளலாம் என்று எண்ணினோம்.

அவன் தோட்டத்தைக்காட்டி நகைக்கவேண்டிய காரணம் யாதென்றும் அவ்வீட்டின் இரகசியம் ஏதேனும் அவனுக்குத் தெரியவருமாவென்றும் நாங்கள் வெகுநேரம் யோசித்தும் பயன்படவில்லை.

கடைசியாக அவனைப்போகும்படிசொல்லி ஒருமறைவில் நின்று அவனைக் கவனித்துக்கொண்டிருந்தோம்.

நாங்கள் விட்ட இடத்திலேயே நின்றுகொண்டிருக்கையில் ஒரு போலீஸ் சேவகன் வந்துசேர்ந்து அவனைக் கூர்ந்து கவனித்து இன்னானென்று அறிந்துகொண்டவனாக அவனுடன் கைஜாடையோடு பேசினான். அவன் எங்களிடத்தில் உளறியதுபோலவே சேவகனிடத்தும் பேசினானெனினும் அவன் சொன்னதைச் சேவகன் எளிதில் அறிந்து கொண்டதாகத் தெரியவந்தது.

உடனே போலீஸ் சேவகன் நாங்கள் இருக்கும் பக்கமாக வந்தான்.

" கோவிந்தா, நான் அந்தப் போலீஸ் சேவகனுடன் பேசி வருகிறேன். நீ அந்தப் பைத்தியத்தைப் பின் தொடர்ந்துபோ " என்று எனது நண்பனை யனுப்பிவிட்டு நான் போலீஸ்காரனுடன் பேசப்போயினேன். நான் போலீஸ்காரனுக்கு வந்தனம் செய்து அந்தப் பையனைப் பற்றி விசாரித்தேன்.

" ஐயா அவன் பைத்தியம்; இராக்காலங்களில் தான் வெளியே வருவான் ; பகல் வேளைகளில் நாங்கள் அவனைக் காணமுடியாது. அவனால் எவருக்கும் தொந்திரவு கிடையாது. அவனுடைய ஒன்பதாவது வயதுமுதல் நான் அவனை யறிவேன் " என்று மொழிந்தான்.

" அவன் வேலை யொன்றும் செய்கிறதில்லையோ ?" என்று வினவினேன்.

" இல்லை, அவன் எவ்விதம் வேலை செய்யமுடியும் ? அவனே பெரும் பைத்தியம் " என்று மறுமொழி புகன்றான்.

" இராப்பிச்சைக்காரன்போல இவனொருவனோ ?" என்று கேட்டேன்.

"ஆமாம். அவன் இராக்காலங்களில் சுற்றி வருகையில் சில கொள்ளைக்காரர்களைக் காட்டிக் கொடுத்ததற்காக அவனை மஹா நல்லவனென்று மாஜிஸ்திரேட் புகழ்ந்து கொண்டார்" என்றான்.

"ஆ! ஆயின் அவன் உங்களுக்குப் பிரயோஜனமாக இருக்கிறான்."

"ரொம்பவும் பிரயோசனமுள்ளவன். சந்தேகமான இடங்களுக்கு இவனையே நான் அனுப்புவது."

"ஆனால் அவன் முற்றும் பைத்தியமல்லவே?"

"அந்தச்சந்தேகமே வேண்டாம்" என்று புன்னகை பூத்தான்.

"அவன் எங்கே வசிக்கிறான்?" என்று நான் வினவினேன்.

"அவன் தந்தை ஒரு ஜட்கா வண்டிக்காரன். காளி கட்டத்தின் மேலண்டைத் தெருவில் இருக்கிறான்" என்று விடையளித்தான்.

அந்த இடத்தைப்பற்றி அவன் சொல்லியதற்கு மேல் எனக்கொன்றும் தெரியாதவன் போல் பாசாங்கு செய்து "கீழத்தெருவு இராக்காப்பு தங்களுடையது தானோ?" என்று சிறிதுநேரம் கழித்துக் கேட்டேன்.

"சில சமயங்களில் நான் இருப்பேன். ஏன்?"

"ஆனால் அனுமான் மந்திரம் தங்களுக்குத் தெரிய வருமே?"

"அந்தப் பேயடைந்தவீடா?" என்றுகேட்டு, "ஆனால் நான் பைசாசங்கள் உண்டென்று நம்புவதில்லை" என்று தைரியமாகப் பேசினான்.

'நானும் நம்புவதில்லை; ஆனால் அந்த வீட்டைப்

பற்றி அநேகம் வேடிக்கைக் கதைகள் கேள்விப்பட்டிருக்கிறேன். நீங்கள் ஏதாவது கேட்டிருக்கிறீர்களா?" என்று கடாவினேன்.

"அநேகம் கேள்விப்படுவோம். அதன் உண்மையை அறியவேண்டுமென்று அந்த வீட்டைத் தேடிப் பார்ப்போமேயானால் ஒன்று மிராது. இவ்விதம் பல தடவைகளில் எங்களுடைய சிரமம் வீணுகப் போனமையால் அந்த வீட்டைப்பற்றி நாங்கள் இப்பொழுது கவனிக்கும் வழக்கமே கிடையாது" என்று விடைதந்தான்.

"இதுபோன்ற விஷயங்களில் எனக்கு விருப்பம் அதிகம்" என்று சொல்லி, "சமீபத்தில் அந்த வீட்டைப் பற்றி கேட்ட விஷயம் யாது" என்று வினயமாக வினவினேன்.

"நேற்று யாரோ ஒருவர் வண்டியைவிட்டு இறங்கினதாகவும் பிறகு திரும்பி வரவில்லை என்றும் கேள்விப்பட்டேன்" என்று பதில் அளித்தான்.

"இது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறதே! தாங்கள் அந்த இடத்தைப் போய்ப் பார்க்கவில்லையோ?" என்று கேட்க,

"எனக்கு அங்கே வேலை இல்லை. எனது நண்பன் அங்கு இருக்கிறுன்" என்று பதில் பகர்ந்து "அப்பைத்தியக்காரன் அந்த வீட்டின் பின்புறத்துத் தோட்டத்தைப் பற்றி என்னென்னவோ புகன்றுன்; ஆனுல் அதன் பொருள் ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. ஏதாவது கனவு கண்டிருப்பான். அந்தத் தோட்டத்தில் ஒவ்வொருவர் ஒவ்வொன்றைக் கண்டதாகக் கூறுகின்றனர்" என்றுகூறி, "என் ஒருவாரத்திற்கு முன்பு, பக்கத்துவீட்டு வேலைக்

காரி, அந்த வீட்டின் மேல்மாடியில் அழகிற் சிறந்த ஒரு பெண்ணைக் கண்டதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள்" என்று முடித்தான்.

"ஒரு அழகிற் சிறந்த பெண்!" என்று பல தாத்பரியங்களுடன் கூவினேன்.

"ஆமாம், அவள் அப்படியே சொல்லினளாம்" என்றான்.

"நீங்கள் என்ன செய்தீர்கள்?" என்று நான் கேட்டேன்.

"நான் இவைபோன்ற எவ்வளவோ கதைகள் கேட்டிருக்கிறேன். எங்களுடைய இன்ஸ்பெக்டர், அந்த வீட்டைப் பற்றியும் அதில் நடப்பதாகக் கூறப்படும் உபயோகமற்ற விஷயங்களைப் பற்றியும் கவலை எடுத்துத் தன்னை தொந்தரவு செய்யவேண்டாமென்று உத்தரவு செய்திருக்கிறார்" என்றான்.

"சின்னாட்களாகக் குடி இல்லாமல் இருக்கும் வீட்டைப் பற்றி பல விதமான கதைகள் உண்டாவது சகஜமாகவே இருக்கின்றது" என்று நான் பேசினேன்.

"ஆமாம், அவை யாவும் மனிதர்களுடைய மனோபாவனைகளே யொழிய வேறில்லை. அந்த வீட்டில் கொலை நடந்தது என்றுகூட ஓர் வதந்தியை உண்டுபண்ணுவார்கள்" என்றான்.

"ஆமாம்; உண்மை அதுவே" என்று சொல்லி ஐந்து ரூபா நோட்டு ஒன்றை அவனிடம் கொடுத்துச் சென்றேன்.

உடனே திரும்பி என்னுடைய நண்பனும் பைத்தியக்காரனும் சென்ற வழியைப் பின்பற்றிச் சென்றேன்.

வழியில் கோவிந்தராமைக் கண்டு அவனை யழைத்துக் கொண்டு இரஸ்தாவுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

அதன் மத்தியில், அந்த வீட்டின் மெத்தைமீது அழகிற் சிறந்த பெண்ணைக் கண்டதாகச் சொல்லப்பட்டதிலிருந்து அஃது அமிர்தா தான் என்று நிச்சயம் செய்து கொண்டேன்.

வண்டி அகப்படாமையால் இருவரும் நடந்து என்னுடைய வீட்டை யடைய சுமார் காலை மூன்றுமணி யாயிற்று. நாங்கள் செல்லுகையில், அந்த வீட்டைத்தேட வேண்டிய காரணத்தையும், நான் பிடிக்கப்பட்ட விஷயத்தையும் பற்றி கோவிந்தராம் பல தடவைகளில் கேட்டானெனினும் அப்பொழுது சொல்லமுடியாதென்றும் சீக்கிரம் ஒரு நாள் உண்மையைச் சொல்லிவிடுவேன் என்றும் வாக்களித்தேன்.

"ஏது இப்போது இங்கு வந்துவிட்டாய்? உனக்குக் கல்கத்தா மனதுக்குப் பிடித்தமில்லையென்றும், வெளி தேசங்களே சௌகரியம் என்றும் சொன்னையே?" என்று பரிகாசமாகக் கேட்டான்.

"எங்கு சுற்றியபோதிலும் இங்கு வாாமற்போக முடியுமா? நான் வெகு நாட்களாக வெளியே இருந்துவிட்டேனாதலால் வரவேண்டியது முக்கியமன்றோ? நிற்க, நம்முடைய வியாபாரம் சரிவர நடந்து வருகின்றதா?" என்று வினவினேன்.

"வியாபாரத்திற்குக் குறைவில்லை. நீ இங்கு வந்திருப்பதற்கு முக்கியமான காரணம் இல்லாமல் போகாது" என்று சொல்லி என்னைப் பார்த்துப் புன்னகை செய்தான்.

அவனுடைய பெயரைச் சொல்லி அந்த இரண்டு

பாதகர்களும் என்னை எவ்விதம் சிறைப்படுத்தினர் என்பதைச் சொல்ல நினைத்தேன்; ஆயினும் அந்த விஷயத்தை அடக்கிக்கொண்டு "நீ ஜயன் என்றும், நந்தனன் என்றும் பெயருடையவர்களைச் சந்தித்திருக்கின்றாயா?' என்று கடாவினேன்.

"நான் அறியேன். அவர்கள் யாவர்? எவ்விதம் இருப்பார்கள்?" என்று உடனே கேட்டான்.

அவ்விருவர்களையும் பற்றி வியக்தமான அங்க அடையாளங்கள் சொன்னேன். ஆயினும் அவன் தெரிந்து கொண்டானில்லை. இரங்கையா என்பவரையாவது கண்டதுண்டா? சற்றுப் பருமனாகவும், கறுத்த மீசை மயிரையும் சிவந்த வதனத்தையு முடையவராயும் இருப்பார்" என்றேன்.

"இந்த அடையாளங்கள் உள்ளவர்கள் ஆயிரக்கணக்காக இருக்கின்றனர். அவர் யார்?" என்று யோசித்துக் கேட்டான்.

"நான் தேச சஞ்சாரத்தில் அவரைச் சந்தித்தேன். அவருக்கு என்ன உத்தியோகம் என்பதுகூட எனக்குத் தெரியவராது" என்றேன்.

சிறிது நேரங் கழித்து, "சதாசிவபண்டாரத்தை நீ அறிவாயல்லவா?" என்றேன்.

"சதாசிவ பண்டாரமா? அவரைப்பற்றி உனக்கென்ன தெரியும்?" என்று வினவினான்.

"எனக்கொன்றும் தெரியவராது. அவரை உனக்குத் தெரியுமா?"

"ஆகா—இல்லை—தெரியும். அவ்வளவு நன்றாகத் தெரியாது. கொஞ்சம் தெரிந்ததும், ஒரு ஸ்திரீயின் மூல

மாகத் தெரிந்துகொண்டது" என்று மறுமொழி யளித்தான்.

"ஒரு ஸ்திரீயா அஃது யார்?" என்று உசாவினேன்.

"அதைச் சொல்லுவது உசிதமாக இராது!" என்று பதிலளித்தான்.

நான் மௌனம் சாதித்தேன். அவன் யாது எண்ணினனோ தெரியவில்லை. கொலைபாதகர்களாகிய அவர்கள் இருவரும் கோவிந்தராமையும் அமிர்தாவையும் பற்றிப் பேசியது ஞாபகத்திற்கு வந்தது. ஆனால் தனக்கு இரங்கையாவைத் தெரியாதென்று கோவிந்தராம் சொல்லி விட்டதானது என்னைப் பின்னும் இரகசியத்தில் ஆழ்த்தியது.

அக்கொலைபாதகர்கள் பொய் பேசினார்களேயாயினும், எனக்குச் சந்தேகம் குறைந்தபாடில்லை. சதாசிவபண்டாரத்தை ஒரு பெண் மூலியமாகத் தெரிந்திருப்பதாகக் கோவிந்தராம் சொல்லியபடியால் அந்தப்பெண் அமிர்தாவோ? ஹனுமான் மந்திரத்தின் இரகசியத்தை அறிய வேண்டுமென்று கோவிந்தராம் கொண்ட ஆசையிலிருந்தே அவனுக்கு யாதும் தெரியாதென்றும் ஜயனும் நந்தனனும் அமிர்தாவின் படத்தைக் காட்டி என் உயிர்த்தோழனால் காதலிக்கப்படுகிற பெண் இவளே என்று சொல்லியது முற்றும் பொய் என்றும் என்னுடைய கோபம் அதிகரிக்க வேண்டுமென்றே அவ்விதம் பேசினார்கள் என்றும் நான் சித்தாந்தப்படுத்தினேன். ஆயினும் அவர்கள் சொல்லியதில் ஏதேனும் ஒரு பகுதி உண்மையா யிருக்குமாயின் என் கதி யாதாகும்? அவைகளை நினைத்த மாத்திரத்தில் என் அறிவு தடுமாறியது.

அப் பெண்பிள்ளையின் பெயரைச் சொல்லும்படி கோவிந்தராமை மறுமுறையும் வற்புறுத்தினேன். எந்த இரகசியத்தையும் என்னிடம் சாதாரணமாகச் சொல்லி விடும் எனது ஆப்தநண்பனாகிய கோவிந்தராம் அவ்வோர் விஷயத்தில் ஒரே பிடிவாதமாக, "அதை என்னால் சொல்ல முடியாது. அவ்விஷயத்தைப்பற்றி சம்பாஷிக்க இஷ்ட மில்லாதவனாக இருக்கிறேன். தயவுசெய்து மன்னிக்க வேண்டும், நாகநாதா" என்று விடையளித்தான். கீழ சிட்டாப்பூர் தெருவில் இருவரும் பிரிந்து அவரவர்க ளுடைய வீட்டை நோக்கிச் சென்றோம். நான் அமிர்தா வைக் காதலித்தமையால் என்னைப்போல் முட்டாள் இல்லை என்று நினைத்தேன்.

எனக்கும் அவளுக்கும் நடுவே ஒரு படுகுழி—மரண சமானமான ஒரு படுகுழி—இருப்பதாகச் சதாசிவபண்டா ரம் கூறியது உண்மை என்ற முடிவிற்கு வந்தேன்.

# பன்னிரண்டாவது அத்தியாயம்

## தாங்கள் இறக்கவேண்டுமென்று

ஒரு வாரம் கடந்தது. ஒவ்வொரு வாரத்தின் ஒவ்வோர் நாளும் என்னுடைய கவலையை அதிகரிக்கச் செய்வதாக இருந்தது. ஹனுமான் மந்திரத்தில் கண்டவைகளைப்பற்றி நான் உடனே போலீஸாரிடம் தெரியப் படுத்தவேண்டுமென்று கோவிந்தராம் அன்று சொல்லியது நல்ல யோசனையேயாயினும் என் காதலியின் நிமித்தம் அவ்விதம் செய்யத்துணியவில்லை. அவளைச் சுற்றி எவ்வளவோ இரகசியங்கள் சூழ்ந்திருந்தபோதிலும் நான் அவளை உண்மையாகக் காதலித்தமையால்—அவளுடைய குற்றங்கள் ஆயிரமாக இருந்தபோதிலும்—நான் மறக்கவே செய்வேன். வரப்போகும் தீங்கைப்பற்றி அவள் எவ்வளவோ எச்சரித்தும் என்னுடைய கஷ்டகாலத்தின் பலனாக நான் அவைகளை இலக்ஷியம் செய்தேனில்லை. நான் இப்பொழுது நினைப்பினும் பயத்தையே கொடுக்கும் அந்தப் பொறியில் அகப்பட்டுக் கொண்டபொழுது தப்புவித்தவள் அவளே யல்லவோ? எனது கனவிலும் கூட அவளைக் காணுவதென்றால் சந்தோஷமாகவே இருந்தது. சதாசிவபண்டாரம் உண்மையைக் கூறி, எனக்கும் அவளுக்கும் நடுவே இருப்பது ஓர் அபாயமான குழி என்று சொல்லியிராமலிருந்தால், ஹா, நானே பூலோகத்து மாந்தர்களில் முதல்வனாக எண்ணியிருப்பேன்.

ஒவ்வொரு சாயங்காலமும் கோவிந்தராமைச் சந்தித்தேன்; ஆனால் ஹனுமான் மந்திரத்தே அன்றிரவு நடந்த சங்கதிகளைப்பற்றி ஒரேமுறை பேசினான். அந்த இடத்தை

நினைக்க இன்னும் பயங்கரமாக இருக்கிறது. காணமல் போனதாக டாணுவில் தாக்கல் செய்யப்பட்ட எவ்வளவு மனிதர்களின் பிரேதங்கள் அத்தோட்டத்துள் கிடக்கின்றனவோ என்று எண்ணி நடுங்கினேன்.

அன்றையத்தினம் என்னைப்பற்றி விசாரித்த சதாசிவ பண்டாரம் ஒரு வாரமாகியும் வராமையால் அவருடைய இருப்பிடத்திற்கு நான்போய்ச் சேர்ந்தேன்.

அவருடைய தோட்டத்தை யடைந்ததும், அவர் வீட்டு வேலைக்காரி எதிர் வந்து சதாசிவ பண்டாரம் அப்பொழுதே வெளியில் சென்றிருக்கிறு ரென்றும், கொஞ்ச நேரத்தில் வந்து சேருவாரென்றும், அதுவரையில் காத்திருக்க இஷ்டமானல் உள்ளே வந்திருக்கலாமென்றும் சொல்ல, நான் அதற்குச் சம்மதித்து நடுக்கூடத்திற்குச் சென்று உட்கார்ந்தேன். முதலில் என்னுடைய கண்ணுக்கு எதிர்ப்பட்டது, புன்சிரிப்புடன் கூடிய எனது காதலியாகிய அமிர்தாவினுடைய புகைப்படம்.

சிறிது நேரம் உட்கார்ந்திருக்கையில் கதவு திறக்கப்பட்டு யாரோ உள்ளே வந்த சப்தம் கேட்டமையால் திரும்பிப் பார்க்க அமிர்தா தோன்றினள்.

“ தாங்களா ! ” என்று ஆச்சரியமாக என்னைப் பார்த்து, “நான்—நான் நினைக்கவில்லை நீங்கள் இங்கு வருவீர்களென்று!” என்று வார்த்தை தடுமாறிப் பேசினள்.

அவள் அவ்வீட்டிற்கு விருந்தினளாக வந்திருந்தவள் அக்கூடத்தின் மீதே உள்ளே போகையில் என்னைச் சந்தித்தனள். அவள் அச்சமயம் முன்னையினும் விடப் பன்மடங்கு அதிக சௌந்தரியத்துடன் விளங்கி என் மனதைப் பின்னும் கொள்ளைகொண்டனள்.

"அமிர்தா!" என்று கூவி, அவளுடைய கரகமலங்களைப்பற்றி, "நான் இங்கு வந்தமைக்கு ஆச்சரிப்படுகின்றனையோ?" என்று வினவினேன்.

அவள் கதவைத் தாளிடும்படியாகக் கூறினாள்.

"நீ இங்கிருப்பாய் என்று நான் நினைக்கவில்லை. நான்—அன்று உன்னைக் கல்கத்தாக் கடைவீதியில் தவறவிட்டேன். நான்—" என்று முடிப்பதற்குள், அந்த விஷயத்தைப்பற்றி பேசாதிருக்க வேண்டுமென்று பொருள்படும் விதமாகக் கையை அசைத்தாள்.

பிறகு "இந்தச் சந்திப்பு நம்மிருவரில் எவரும் எதிர்பாராதது. பண்டாரத்தையா, தாங்கள் இங்கிருப்பதை அறிவாரோ?" என்று மெதுவாக வினவினாள்.

"அவர் அறியார். வெளியே போயிருக்கிறார் என்று எண்ணுகிறேன்" என்று மறுமொழி பகர்ந்தேன்.

"அவர் சம்சார சஹிதம் பக்கத்துக் கிராமத்திற்குப் போயிருக்கிறார்" என்றாள் அமிர்தா.

"ஆனால் நீ தனிமையாகவா இருக்கின்றாய்?" என்று சந்தோஷ சித்தனாகக் கடவினேன்.

"இல்லை; என்னுடன் வேறொரு விருந்தாளியாகிய சாரதாளும் இருக்கிறாள்" என்று விடை கொடுத்த அமிர்தா, "நாகநாதரே, தாங்கள் இங்கு வந்த காரணம் என்ன?" என்று உசாவினாள்.

"நான் சதாசிவ பண்டாரத்தைப் பார்க்க வந்தேன். அவர் உன்னுடைய நண்பராகையால் நீ எங்கிருக்கிறாய் என்னும் விஷயத்தை அறியவேண்டும் என்னும் எண்ணத்துடன் வர நேர்ந்தது. ஆனால் தேடப்போன மருந்து காலில் அகப்பட்டதுபோல் உன்னையே கண்டேன்.

அன்று காலையில் நான் உனக்காகக் காத்திருந்தும் நீ—" என்று சொல்லுகையில், அவள் முகம் மாறிற்று; உடனே ஒரு மாதிரியாகப் புன்னகை செய்தாள்.

"ஆமாம். நானுகவே போய்விட்டேன். அதற்கு முக்கியமான காரணங்கள் உண்டு" என்று சற்று யோசித்துப் பதில் சொன்னுள்.

"ஆனல், ஏன் ஒருமனிதன்—பழையதிருடன்—என்னுடைய ஆயிரம் ரூபாவுடன் ஓட, அவனுடன் நீ—"

"ஆ! நாகநாதரே, தயவுசெய்து அதைப்பற்றிப் பேசாதேயுங்கள்— நாம் அதைத்தவிர வேறு ஏதாவது பேசுவோம்!" என்று என்தோளின்மீது கையைவைத்துக் கூவினுள்.

"நான் உன்னைக் கோபிக்கவில்லை. சென்றன செல்க; என்னுடைய ஆயிரரூபாவை அவன் வைத்திருக்கிறபோதிலும் எதுவரையில்—"

"எதுவரையில் என்ன?"

"எதுவரையில் என் இன்னுயிர்க் காதலாகிய நீ சௌக்கியமாகவும் உயிருடனும் இருக்கிருயோ அதுவரையில் அவர்கள் செய்யும் இன்னல்களை லக்ஷியம் செய்யேன்" என்று கூறினேன்.

"ஆனல்—"

"நான் அறிவேன். நீ சொல்லியதை நான் இலக்ஷியம் செய்யாமல் போனபோதிலும் என்மீது கருணைகூர்ந்து நீ என் உயிரைக் காப்பாற்றியதற்காக உனக்கு மிகுதியும் கடமைப்பட்டிருக்கிறேன்" என்றேன்.

சிறிதுநேரம் இருவரும் மௌனம் சாதித்தோம். பிறகு அவள் என்னை நிமிர்ந்து நோக்கி "நாகநாதரே,

இந்த சம்பாஷணை எனக்கு வருத்தத்தைக் கொடுக்கின்றது. தாங்கள் எனது நேயராக இருப்பது உண்மையாயின் வேறெதையாவது பற்றிப் பேசமாட்டீர்களா?" என்றாள்.

"நமது நேயத்தைப் பின்னும் விருத்திசெய்து கொள்ளுவதற்கு, நீ எதுசொன்னபோதிலும் செய்யத் தயாராக இருக்கிறேன். நீ என் உயிரை இரக்ஷித்த உண்மையான நேசியாயினை" என்று முகமன் கூறினேன்.

"தாங்கள் அதை எவ்விதம் அறிவீர்கள் ?" என்று உடனே கேட்டாள்.

"எப்படி யெனின், நீ ஒருத்தியே அன்று ஹனுமான் மந்திரத்தில் இருந்தாய். அந்தப் பாம்பைக் கொன்றதும் நீயே. நான் உயிர்துறக்கவேண்டும் என்பது அவர்களுடைய எண்ணம். என் பிரேதத்தை அடக்கம்செய்ய ஏற்கனவே குழி வெட்டப்பட் டிருந்தது. என்னை அவ்விதம் கொலைசெய்வதற்குள்ள காரணத்தைச் சொல்லமாட்டாயா?" என்று அவளைக் கெஞ்சிக்கேட்டேன்.

"ஐயோ! நான் சொல்லமாட்டாதவளாக இருக்கிறேன். என்ன நடக்கப் போகிறதென்பதைப் பற்றி ஏற்கனவே இரம்பாவில் எச்சரித்தேன். அவர்களுடைய உண்மையான நோக்கத்தை மட்டும் தெரிந்துகொள்ளாமலும் இருந்தேன், தெரிந்துகொள்ளாமலும் இருக்கிறேன். அவர் களுடைய எண்ணங்கள் எப்பொழுதும் பிறருக்குத் தெரியாதனவாகவே இருக்கும்" என்று கூறினாள்.

"என்னிடத்திலிருந்து மற்றோர் ஆயிரம் ரூபா கிரகிக்களத்தனம் செய்தனர்" என்றேன்.

"தாங்கள் கொடுக்காமல் இருந்தது மிகவும் சரி; தாங்கள் கொடுத்திருந்த போதிலும் நடக்கப்போவதென்னவோ ஒன்றுதான். தாங்கள் போலீஸாரிடம்

தெரியப்படுத்துவீர்கள் என்று பயங்கொண்டிருக்கிற தோடு தாங்கள் இறக்கவேண்டு மென்பதும் அவர்களு டைய முக்கிய எண்ணம்'' என்று சொன்னாள்.

"பாங்கியில் ஜயன் இரசீதைப் பணமாக மாற்றுகை யில் நீ வெளியில்தானே இருந்தாய்?'' என்று குறித்துக் கேட்டேன்.

"எனக்குத் தெரியும்,'' என்று ஒரு மாதிரியாக மொழிந்து, "நான் அவர்களைச் சேர்ந்தவளென்றும், அவர் களுக்கு உதவி செய்பவளென்றும், தாங்கள் நினைப்பீர்கள் என்று அப்பொழுதே எனக்குத் தெரியும். ஆ, சரி நாக நாதரே என்னை எவ்விதம் வேண்டுமென்றாலும் தாங்கள் நினைக்கலாம். எனக்குப் பரிந்து பேசுபவர்கள் கிடையாது. ஆனால் தாங்கள் உடனே போய்விடவேண்டு மென்றும், இருந்தால் அபாயம் என்றும் நான் சொன்னதைத் தாங்கள் இலக்ஷியம் செய்யாததைமட்டும் தயவுசெய்து யோசித்துப் பாருங்கள். நான் சொல்லியதைக்கேட்டு ஏதோ உளறு கிறேன் என்று நினைத்திருந்தீர்கள் போலும்'' என்றாள் அமிர்தா.

"அமிர்தா, நீ என்னுடைய நட்பினள் என்பதை நான் அறிவேன். நீ நட்பின்றித் தனிமையாக இருப் பதை இரம்பாவில் ஒப்புக்கொண்டாய். அப்பொழுது தான் நண்பனானேன்'' என்றேன்.

"ஆ, நான் வந்தனம் செய்கிறேன்!'' என்று என் னுடைய கரத்தை அவளுடைய கையால் பிடித்துக் கொண்டு, "அதன் நிமித்தம் என்மனப்பூர்த்தியாக வந்த னம் செய்கிறேன். தங்கள் மீது வந்த அபாயம் நல்ல வேளையாக உயிரைக்கொண்டு போகாமல் ஆயிரம் ரூபா வோடு போயிற்று. நான் சொன்னதை அப்பொழுதே

கவனித்து எவருக்கும் தெரியாமல் மறைந்திருந்தீர்களாயின் தங்களைப் பின் தொடரும் எண்ணத்தை அவர்கள் விட்டொழித்திருப்பார்கள்" என்று கூறினள்.

"இன்னும் எவ்வளவோ பெயர்கள் அந்தப் பொறியில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்க ளல்லவா? அந்த நாற்காலியும் அதனுடைய சூத்திரமும்—என்னொருவனுக்காகச் செய்யப்பட வில்லையே?" என்று கேட்டேன்.

அவள் பேசாமலிருந்ததிலிருந்தும் நான் சொன்னதை அவள் ஒப்புக்கொண்டாளே ஒழிய மறுக்கவில்லை என்று கண்டு கொண்டேன்.

"உனது நேயர்கள் அதிக அபாயமான மனிதர்கள் என்று மட்டும் நன்றே தெரிகின்றது" என்று சொல்லிச் சிறிது சிரித்து, "எனக்காகத் தோண்டப்பட்ட குழியைக் கண்டது முதல் டாணுக்காரர்களிடம் சொல்லி விடலாமா வென்று யோசித்துக்கொண்டிருக்கிறேன்" என்று முடித்தேன்.

"வேண்டாம்! தயவு செய்யுங்கள் அப்படித் தாங்கள் செய்வதால் அவர்களுக்கு ஒன்றுமில்லை, குற்றமற்ற—நான் உள்பட—மனிதர்களில் சிலர் சேர்க்கப்பட்டு தண்டனைக்குள்ளாகவேண்டி வரும்" என்று கொஞ்சும் மொழியால் கெஞ்சினாள்.

"நீ எப்படி சேர்க்கப்படுவாய்?"

"அவன் இரசீதைப் பணமாக்குகையில் நான் பாங்கியினண்டையி லிருக்க வில்லையா?"

"ஆமாம், நீ என் அங்கிருந்தாய்?" என்று நான் கேட்டேன்.

அதற்கு மறுமொழி கூறாமல், "ஆ! என்னுடைய நிலைமையைத் தாங்கள் அறிவீர்களாயின்! நான் எவ்வளவு கஷ்

டப்படுகிறேன் என்ருவது என் பிராணனை எவ்வளவு தியாகம் செய்திருக்கிறேன் என்ருவது நீங்கள் நினைத்து மிருக்கமாட்டீர்கள் " என்று என்னுடைய கையைப் பிடித்துக்கொண்டு குழந்தைபோல் அழவாரம்பித்தாள்.

" கண்மணீ, அமிர்தா ! அவையனைத்தையும் நாம் மறந்து விடுவோம். அதிக சாமர்த்தியமாகக் கண்டு பிடிக்கப்பட்டிருந்த பொறியில், யோசனைக்குறைவால் அகப்பட்டுக்கொண்டேன். நீ அப்பொழுது வந்து என்னைக் காப்பாற்ருமலிருந்தாயாளுல் நான் மரணத்தையே அடைந்திருப்பேன். அந்த வீட்டில் அன்றிரவு நீயும் இருந்தாய்; உன்னுடைய புகைப்படத்தை எனக்குக் காட்டியதோடு எனது பயத்தை இரட்டிக்கும்படி நான் அடைந்த கஷ்டங்களில் நீயும் பங்கு பெறுவாய் என்றும் பயமுறுத்தினர் " என்று சொல்லி அவளுடைய கண்களில் ஓடிய நீரைத் துடைத்தேன்.

" ஆமாம், ஆமாம், நான் அறிவேன்! ஓ, அவைகள் யாவும் மிக்கபயங்கரம்—நினைக்கவும் பயங்கரம்—அதன் பிறகு தங்கள் முகத்தில் நான் எவ்விதம் விழிப்பேன்!" என்று கூவினுள்.

" அமிர்தா, என்னுடைய முக்கியமான எண்ணமெல்லாம் அவைகள் யாவையும் மறக்கவேண்டும் என்பதே" என்று மெதுவாகச்சொல்லி, "அஃது என்னுடைய தப்பிதமேயாகும்—நீ சொல்லியதைக் கவனியாததப்பிதமேயாகும். நான் அறியாத விரோதிகளினுடைய கெட்ட எண்ணத்தைத் தெரிந்து கொள்ளாதவனுனேன். எனக்கு எப்படித்தெரியும்? நான் அது வரையில் அவர்களைக் கண்டதே யில்லை. நீ அவைகளைப்பற்றி கவலைப்படாதே" என்று தேறுதல் சொன்னேன்.

"நான் சொன்ன யுக்தியைக் கண்டுபிடித்துத் தாங்கள் ஒளித்துக்கொண்டிருந்தீர்களேயானல் எவ்வளவோ மேன்மையாக இருந்திருக்கும்" என்று குறித்தாள்.

"அவைகளைக் கவனிக்காதே" என்று நான் சந்தோஷத்துடன் கூறி "எல்லாவற்றையும் கடந்துவிட்டோம், இனி எதற்கும் பயங்கொள்ள வேண்டியதில்லை. இப்பொழுது நான் சர்வ ஜாக்கிறதையாக இருக்கிறேன்" என்று மறுபடியும் சொன்னேன்.

"தங்களுடைய யுக்திக்கு அவர்கள் பயப்படுபவர்கள் அல்லரே. தங்களைத் தப்பித்துக்கொள்ளவிட அவர்களுக்கு இஷ்டமில்லை என்பதை மறவாதேயுங்கள்" என்று மற்றோர்முறை என்னை எச்சரித்தாள்.

"என்னிமித்தம் அவர்கள் தோண்டிய குழியை நான் என்கண்ணல் கண்டாயிற்று" என்றேன்.

"அந்தக் குழி தங்களுக்கு மட்டுமல்ல; நம்மிருவருக்கும்" என்று அவளுடைய இனிமையான குரலில் சொல்லினள்.

"நீ எவ்விதம் தப்பித்துக்கொண்டாய்?" என்று ஆச்சரியத்தால் வினவினேன்.

"எனக்கு நன்ருகத் தெரியவராது; ஆயினும் ஒருவிதமாக உத்தேசிக்கிறேன்."

"அதை நான் தெரிந்துக் கொள்ளக்கூடாதா?" என்று கேட்டேன்.

"நான் நினைத்தது சரி என்று கண்ட பின்னர் தங்களிடம் கூறுகின்றேன்" என்று பதில் சொன்ஞள்.

"அந்த விஷயத்தை நம்முடைய மனத்தினின்றும் அகற்றுவோம். நாகரீகம் என்று சொல்லக்கூடிய பதமே மனிதர்களிலும் அவர்கள் வசிக்கும் இடங்களிலும் இருக்

கும் இயற்கை வனப்பினைப் போக்கடிக்கக் கூடியதாக இருக்கின்றது பார். இந்தத் தோட்டத்தில் இயற்கைவிநோதங்களுடைய சோபை மிகுந்து இருக்கின்றது. ஆனால் நாகரீகத்திலோ செயற்கை விநோதமே தலை எடுத்து நிற்கிறது. நாம் அமைதியாயும் சந்தோஷமாயும் வாழ்வோம். நம்முடைய வாழ்நாட்களின் இடையே தோன்றிய சிற்சில இன்னல்களைப்பற்றிநாம்கவனிக்கவேண்டிய அவசியமொன்றும் இல்லை" என்று ஓர் வேதாந்த உபன்னியாசம் செய்தேன்.

"ஆ, தாங்கள் எனக்கு எவ்வளவு தாராளமாக இருக்கிறீர்கள்! உண்மை இன்னதென்று தெரிந்து கொண்டபின்னும் இவ்விதமே இருப்பீர்களா என்றே யான் சந்தேகப்படுகிறேன்; தாங்கள் இருக்கமுடியாது என்று நான்மிகவும் வருந்துகின்றேன், தாங்கள் எனக்கு நண்பாக இருப்பதற்குப் பதிலாக—என்னையே நான் வெறுப்பது போல் தாங்களும் என்னைவெறுப்பீர்கள்" என்று கூறி விம்மி விம்மி யழுதாள்.

"அமிர்தா," என்று அவளுடைய தோளில் காத்தை வைத்துத் தேறுதல் சொல்லி, "நான் உன்னை ஒருபொழுதும் வெறுப்பேன் என்று எண்ண வேண்டாம். அதற்கு மாறாக, உண்மையை வெளிப்படையாக ஒப்புக்கொள்கிறேன்" என்றுகூறி அவளைச்சமீபித்து, "நான்—நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்று மெதுவாகச் சொன்னேன்.

இந்தவார்த்தையைக் கேட்ட அமிர்தா ஏதோ பேச வாயை அசைத்தாளேயொழிய பேசவில்லை. என்னைப் பார்த்தவண்ணம் ஒரு சிலை போல் ஸ்தம்பித்துப் போய் நின்றனள். சற்றுயோசித்துத் தன்னுடைய மார்பின் மீது கையை வைத்துப் பெருமூச்சுவிட்டு "என்னைக் காதலிப்பதா?" என்று ஒருமாதிரியாக வினவி, "ஆ, நாகநாதரே,

கூடாது! ஆயிரம் முறை கூடாது!! தாங்கள் இன்னது சொன்னீர்கள் என்று தங்களுக்கே தெரியவராது. அந்த வார்த்தைகளை நீக்கி விடுங்கள்" என்று என்னைப் பணிவுடன் கேட்டாள்.

அவள் இருந்த நிலைமையால் அவள் உண்மையே பேசினாள் என்று கண்டேன்.

"ஏன் அவைகளை நீக்கவேண்டும்?" எனது கையை அப்பொழுதும் அவளுடைய தோளின்மேலேயே வைத்துக்கொண்டு, "நீ என்னுடைய விரோதிகளுக்கு வேண்டியவளாக இருக்கிறபோதிலும் நீ என்னுடைய பகையாளியல்ல—நான் உன்னைக் காதலிக்கிறேன், எதைப்பற்றியும் பயங்கொள்ளேன்" என்று தைரிய வசனம் கூறினேன்.

"ஹஷ், அதை மறு முறை சொல்லாதேயுங்கள்!" என்று வேண்டினாள்.

"ஏன்?"

"ஏனெனில்—சரி, ஏனெனில் தாங்கள் தப்பித்துக் கொண்டபோதிலும் அவர்கள்—" என்று ஏதோ சொல்லுவதற்குள் வார்த்தை தடுமாறியது.

"அவர்கள் என்ன?" என்று கேட்டேன்.

"ஏனென்றால்—நாகநாதரே—ஏனென்றால் ஐயோ! அவர்களை நான் நன்றாக அறிவேன். தாங்கள் வெற்றியடைந்தபோதிலும் அது கொஞ்ச காலத்திற்கே. தாங்கள் இறக்க வேண்டுமென்று அவர்கள் இன்னும் எண்ணுகின்றார்கள்"—என்றாள்.

"நீ அதை அறிந்த விதமெப்படி?" என்று சட்டென வினவினேன்.

"சொல்லுகிறேன் கேளுங்கள்," என்று பலமாகப் பேசினாள்.

## பதின்மூன்ருவது அத்தியாயம்

### எம்முடைய அதரங்கள் சந்தித்தன

பக்கத்தே கிடந்த நாற்காலியில் அமிர்தா சாய, அவளுடைய வார்த்தையை ஆவலோடு எதிர்பார்த்துப் பக்கத்தில் நின்றிருந்தேன். அவளுடைய கையைக் கட்டிக்கொண்டு நிமிர்ந்து என்னை நோக்கினள். அவளுடைய குற்றமற்ற எழில்—அது வரையில் நான் கண்டிராத எழில்—என்னை மயக்கியது.

"நான் உயிர் துறக்கவேண்டுமென்று அவர்கள் ஏன் விரும்புகின்ருர்கள்?" என்று வினவி, "நான் இப்பொழுது உண்மையை அறிந்துகொண்டேனுயின் ஜாக்கிரதையாக இருக்கலாமன்ருே?" என்று நான் கேட்டேன்.

"ஆ! ஆமாம்! தாங்கள் அஜாக்கிரதையாக இருக்கும் பொழுதுதான் தங்களை அவர்கள் சூழ்ந்து கொள்ளுவார்கள். அவர்களைப் போன்ற கொலை பாதகர்களுடைய ஸூக்ஷ்ம புத்தியைத் தாங்கள் அறியமாட்டீர்கள். அப்பாதகர் இரக்கமற்றவர்கள்" என்று மறுமொழி தந்தாள்.

"இப்பொழுது அவர்கள் யாது யோசிக்கின்ருர்கள்?" என்று ஆவலோடு வினவினேன்.

"தாங்கள் தப்பித்துக்கொண்டு விட்டமையால்," என்று கூறி, "நீங்கள் போலீஸாரிடம் தெரியப்படுத்துவீர்கள் என்று பயப்படுகிருர்கள்" என்று முடித்தாள்.

"நான் அப்படி யொன்றும் செய்யப்போவதில்லை. இப்போது அவ்விதம் செய்யவேண்டாமென்று நான் எனக்குள் யோசித்துக்கொண்டிருக்கிறேன்" என்று மறுமொழி பகர்ந்தேன்.

"இருக்கலாம். தாங்கள் உயிர் பெற்றிருக்கும் வரையில் அவர்களுடைய பாபச் செயல்களுக்குக் குறுக்கிலிருக்கிறீர்கள் அல்லவா ? இனிமேல் அவர்கள் காளிகட்டத்திற்குப் போகத்துணியார்கள்" என்றாள் அமிர்தா.

"அவர்கள் இப்பொழுது எங்கிருக்கின்றார்கள் ?"

"வெளி தேசங்களுக்குப் போயிருப்பார்களென நினைக்கிறேன். தப்பித்துக்கொள்ள வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தே அவர்களுடைய தொழிலில் பிரவேசிப்பார்கள். ஹா! அவர்கள் எவ்வளவு பயங்கரமான கூட்டக்காரர்கள் என்பதைத் தாங்கள் அறியமாட்டீர்கள் ! இவ்வூர் போலீஸாருடைய ஒரு கண்ணில் நுழைந்து மற்றொரு கண்ணின் வழியே போய்வரும்படியான அவ்வளவு சாமர்த்தியசாலிகள்" என்று மொழிந்தாள் அமிர்தா.

"ஆனால் என்னைப் போன்ற அநேகர் அகப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்கின்றாயா?" என்று கேட்டேன்.

"நிச்சயமாக நான் அறியேன்—ஆனால் அவ்விதமிருக்கும் எனவே சந்தேகிக்கிறேன்" என்று பதில் கூறினாள்.

"நீ யேன் அவர்களுடன் நேசம் பாராட்டுகின்றனை ? அப்பேர்ப்பட்ட நேயத்தைப்பற்றி உனது தந்தையார் என்ன சொல்லுகிறார் ?" என்று வினவினேன்.

"நான் வற்புறுத்தப்பட்டு நேயம் பாராட்டுகிறேன். மனிதத்தன்மையற்ற அந்தப் பாவிகளுடைய பார்வைக்கு எவ்வளவு பயப்படுகிறேன் ! தங்களை நடத்திய விதத்திலிருந்தே அவர்களுடைய கொடுஞ்செயல்களை அறிந்திருப்பீர்களே ?" என்று விடை பகர்ந்தாள்.

"அமிர்தா," என்று அழைத்து, "எனது ஆப்த நண்பரும் பெரிய வியாபாரியுமாகிய கோவிந்தராம் பண்டிதரை அறிவாயோ ?" என்று கேட்டேன்.

அந்தப் பெயரைக்கேட்ட மாத்திரத்தில் அவளுடைய முகம் மாறுபாடடைந்தது. சலவைசெய்த வஸ்திரம் போல அவள் முகம் வெளுத்தவுடன் ஆழ்ந்த சிந்தனையிலாழ்ந்தாள்.

"நான்—சரி, நாங்கள் ஒரு முறை சந்தித்திருக்கிறோம். அவர் புனவில் பெரிய வியாபாரியல்லவா ?" என்று கேட்டாள் என் இன்னுயிர்க் காதலி.

"ஆமாம்" என்று பதில் கூறி, அவரைப்பற்றி உனக்கென்ன தெரியும் ?" என்று வினவினேன்.

"எதுவுமில்லை. நாங்கள் ஒரே முறை சந்தித்திருக்கிறோம்" என்றாள் அமிர்தா.

"எங்கு சந்தித்தீர்கள் ?"

"நாங்கள் சந்தித்தது ஓர் விதமான சந்தர்ப்பம்—அவர் தங்களுடைய ஆப்த நண்பராகையால் அதைப் பற்றி யொன்றும் பேசாததற்குத் தயவுசெய்து மன்னியுங்கள்," என்று மறுமொழி கூறினாள்.

"ஜயன் நந்தனாகிய இருவரிடமிருந்து நீ யாது எதிர் பார்க்கின்றனை?" என்று பேச்சை வேறு வழியில் திருப்பினேன்.

"கேட்டை—ஒப்பற்ற கேட்டை எதிர் பார்க்கிறேன்; தாங்கள் எதிர் பாராமலிருக்கையில் தங்களை எதிர்ப்பார்கள்" என்று உத்தரம் சொன்னாள்.

"நான் டாணுக்காரர்களை அணுகாமல் இருந்தால் எனக்காக அவர்கள் பயங்கொள்ளவேண்டிய அவசியமென்ன ? என்னை அவர்கள் தொந்தரவு செய்யாமலிருக்கிறவரையில் என்னுடைய ஆயிரம் ரூபாவைப்பற்றி கவலை எடுப்பதில்லை என்னும் நிச்சயத்துடன் இருக்கிறேன்" என்றேன்.

“அவ்விதம் அவர்கள் விடமாட்டார்கள் என்றே நான் நினைக்கிறேன்” என்று சேர்ந்து கூறிமுடித்தாள்.

“நீ பேசுபவைகள் யாவும் இரகசியமாக இருக்கின்றன. பயங்கொள்ள உண்மையாகவே யாது காரணம் இருக்கின்றது? உடனே போலீசாரிடம் சென்றேனாயின் அவர்கள் அத்தோட்டத்தைத் தோண்டி பரீக்ஷைசெய்து அதனுள் உள்ள இரகசியத்தை யறிவார்களே!” என்று கூவினேன்.

“வேண்டாம்” என்று கூவிய அமிர்தா தான் உட்கார்ந்த நாற்காலியினின்றும் எழுந்து, அச்சம் மேலிட்டவளாக, “நாகநாதரே, அஃதொன்றுமட்டும் செய்யவேண்டாமென்று கெஞ்சுகிறேன். அப்படிச் செய்வதால் ஒரு பெருங்குழப்பம் உண்டாகுமே யொழிய காரியமொன்றும் கைகூடாது. குற்றவாளிகள் அகப்படுவார்கள் என்று எண்ணவேண்டாம். அவர்களுடைய சதியாலோசனை அதிக சாமர்த்தியமானது. தயவுசெய்து பொறுமை பாராட்டுங்கள். அத்துடன் உங்களையே காப்பாற்றிக் கொள்ளும் மார்க்கத்தில் கண்ணாக இருப்பீர்களானால் மட்டும் நீங்கள் அவர்களைக் கொன்றுவிடலாம்” என்று கூறினள் அமிர்தா.

“உன்னுடைய உதவிமட்டும் எனக்கிருக்குமாயின் நான் எவ்வளவோ காரியங்களை எளிதில் செய்து முடிப்பேன்” என்று சௌரியம் பேசினேன்.

அவள் அதற்கொன்றும் பதில் உரைக்காமையால் அவர்களுக்குப் பயப்படுகிறாள் என்பது நன்றே விளங்கிற்று. அன்றிரவு நடந்த விஷயங்களின் இரகசியத்தை அறிய எவ்வளவோ கேட்டும் சொன்னாளில்லை. ஒருகால்

தன்னுடைய குற்றங்களைக் காட்டிக்கொள்ள பயந்தாள் போலும்; ஆனால் ஓர் யுவதி—நிஷ்களங்கமாகவும், குற்ற மற்றதாகவும் இரா நின்ற வதனத்தையுடைய யுவதி—மனித் தன்மையற்ற பாதகர்களுக்கு உதவியாக இருப்ப தென்பது ஒருநாளுமில்லை. அவள் அவர்களுடைய நட் பினள் என்பதை அவள் ஒப்புக் கொண்டாளாயினும், கட்டாயத்தால் பாராட்டப்படும் நேயமென்றே சொன் னாள். ஆயினும் நான் போலீஸாரை அணுகக் கூடா தென்றதற்குக் காரணம் என்ன?

அந்தபாபச் செயலில் அவளும் சம்பந்தப் படுவாள் என்று பயந்துதான் என்னை அவ்விதம் கேட்டுக்கொண் டாளோ என்று நானே சந்தேகித்தேன்.

"உனது தகப்பனார் எங்கே?" என்று கேட்டேன்.

"பஞ்சாபில் இருப்பதாகச் சென்ற வாரம் லிகிதம் வந்தது. நான் சில தினங்களாக இந்த சதாசிவபண்டா ரத்தையா வுடைய வீட்டில் இருந்து வருகிறேன்" என்று மறுமொழி புகன்றாள்.

கொலைக்கு அஞ்சா பாதகர்களுடைய நட்பினளாக இருப்பாளேல் சதாசிவபண்டாரம் போன்ற நல்ல மனிதர் களுடைய வீட்டில் வெகுநாட்களுக்கு விருந்தினளாக இருக்கமுடியுமா வென்று நானேயோசித்தேன். உண்மை சதாசிவபண்டாரத்திற்கு தெரியுமென்றும், அவர் இஷ் டப்பட்டால் ஓர் பெருங்கதை—அமிர்தாவையும் அவளு டைய தோழர்களையும் பற்றிய—ஒரு பெருங்கதை சொல் லக்கூடுமென்றும் ஊகித்தேன்.

"உனது தகப்பனார் பண்டாரத்தையாவுக்கு நேயர் போலிருக்கிறது?" என்று கேட்டேன்.

அதற்கவள் "ஆமாம்" என்று பொருள் படும்படி தலையை அசைத்துப் பிறகு பக்கத்தே யிருந்த பலகணி யின் வழியாகத் தோட்டத்தைக் கவனித்துக்கொண்டிருந் தாள்.

அவளுடைய முகமே இரகசியத்திற்கு இருப்பிடம் போல் தோன்றிற்று. பிறருக்குச் சொல்லக்கூடாத ஓர் இரகசியத்திற்கு அவள் உரியவளாக இருந்தனள். காளி கட்டத்து ஹனுமான் மந்திரத்தில் நடந்த சகலமும் அவ ளுக்குத் தெரியுமேயாயினும் கொலைப் பாதகர்களாகிய "நேயர்களை" காப்பாற்ற எண்ணங்கொண்டிருந்ததை நினைக்குந்தோறும் என்மனம் தடுமாற்றம் அடைந்தது.

"அமிர்தா, நீ ஏன் என்னிடத்தில் உண்மையைக் கூறுவதற்கு யோசிக்கிறாய்?" என்று கேட்டு,

"நான் உன்னைக்காதலிக்கிறேன் என்பதையுணர்ந் தும் என்னை எவ்வளவு சந்தேகத்திலாழ்த்தி வைக்கிறாய்?" என்று அவளுடைய காதோடு சொல்லி, "நீ ஒரு பொழுது என்னுடைய நட்பினளாகவும் மறுநிமிஷத்தில் எனது விரோதியாகவும் காணப்படுகின்றதற்குக் காரணம்யாது?" என்று மீண்டும் வினவினேன்.

"நாகநாதரே, தாங்கள் என்னை நேசிப்பது தகா தென்று ஏற்கனவே சொல்லவில்லையா?" என்று கேட்டு என்கையிலிருந்த அவளுடைய கரத்தை விடுவித்துக் கொண்டாள்.

"ஆ, நான் கூறியதை வேறுவிதமாக நினைத்து விடாதே; அமிர்தா என்னுடைய எண்ணங்கள் உன்னையே நாடிநிற்கின்றன. நீ என்னை எட்டுணையாவது காதலிப் பாயாவென்று நினைத்த சமயங்கள் பல" என்றேன்.

"தாங்கள் என்னை எவ்விதம் காதலிக்கமுடியும்? நான் தங்களுக்குப் புதியவள் தானே!"

"எனக்காக ஏற்பட்டவள் உன்னையன்றி வேறு ஒருத்தியில்லை என்று நான் நன்றே அறிவேன். நான் விதரணை தெரியாத மனிதன். அஃது என்னுடைய இயற்கைக் குணம். உண்மையை உரைத்ததைப்பற்றிப் பரிகாஸம்செய்யாதே."

"இவ்வளவு தூரம் நடந்தவைகளைக் கவனித்திருந்தும் தாங்கள் இவ்விதம் சொல்லுவது தகுதியா?" என்று அவளுடைய இனிய மொழியால் உசாவினுள்.

நான் அவளுடைய மெல்லிய கரத்தைப் பிடித்து, "ஆமாம், ஏனெனில் உன்னை நான் உண்மையாகவும் கௌரதையாகவும் காதலிக்கின்றேன்" என்று சொல்லி "என்று நாம் சந்தித்தோமோ அன்று முதல் உன்னைப்பற்றி எண்ணுவதும், உன்னுடைய ரூபத்தை ஞாபகப்படுத்துவதும், நீ என் பக்கலில் இருப்பதாகக் கனவு காணுவதுமே என் வேலையாயிற்று" என்று பின்னுங் கூறினேன்.

நான் பேசிய உடனே கலங்கிய அவளுடைய கண்களால் என்னைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு, "ஹா, நாகநாதரே, காதலானது பின்வரும் நன்மைதீமைகளைக் கவனிக்காதல்லவா? என் போன்ற ஒருத்தியைக் காதலிப்பது அநியாயமல்லவா என்று தாங்களே கேட்டுப்பாருங்கள்?" என்று கேட்டாள்.

"ஏன்?" என்றுகேட்டு, "ஏன் அநியாயமென்கிறாய்? நான் உன்னைநம்புகிறேன், ஏனென்றால்,—ஏனென்றால் நான் உனக்குமிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.—ஏனென்றால் நீ எனக்குப் பொருத்தமுள்ளவளாகச் செய்துகொண்

டாய். அதனால் நான் உன்னைக்கேட்பது யாதெனில் நமது நேயம் நாளடைவில் காதலாகமாறினலாகாதா?" என்று கூறினேன்.

அவள் தலைகுனிந்த வண்ணம் உமிழ்நீரை இருமுறை விழுங்கினாள். ஏதோ பேச வாரம்பித்தவள் திடீரென்று நின்றுவிட்டாள்.

உடனே நான் அவளுடைய பத்மம் போன்ற காத்தை கையில்பற்றி முத்தியளித்தேன். அதற்குப்பதிலாகத் துக்கத்தோடு "அஃது ஒருபொழுதும் முடியாது—என்னைத்தனியேவிடுங்கள், அப்படிச்செய்தால் நம்மிருவருக்கும் நன்மை பயக்கும். நான்யார் என்றுவது எப்பேர்ப்பட்டவள் என்றுவது தாங்கள் தெரிந்து கொள்ள வில்லை—தாங்கள்—" என்று ஏதோ சொல்லப்போகுமுன்.

"எனக்குத் தெரிய வாாதேதோடு, நான் அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற அவா உடையேனுமல்லேன்!" என்றுகூவி, "அமிர்தா, என்னுடைய மனதை உனக்கே அர்ப்பணம் செய்தேன்—நான் ஒரேமுறை காதலித்தேன் அதுவும் இப்பொழுதே!" என்று கூறிமுடித்தேன்.

அவள் தன்னுடைய முன்றானையை வலக்கை விரலில் சுற்றிக்கொண்டு பூமியைப்பார்த்த வண்ணமிருந்தாளேயன்றி பதில் பகர்ந்திலள்.

"என்னைப்பற்றி சிலாகிக்கக் கூடிய விஷயம் அதிகமொன்றுமில்லை. நவீன நாகரீகமென்பதின் பொருளே தெரியாதவன். நீ தேசசஞ்சாரத்தில் என்னையும்விட ரூபவானும், புத்திவானும், ஐஸ்வரியவானுமான அநேகரைச் சந்தித்திருப்பாய்; நான் எந்தவிதத்திலும் அவர்களுக்கு

இணையாகேன். ஆயினும் எனது முழு எண்ணமும் உன்னைப்பற்றியதாகவே இருக்கிறது. எனது முழுமனத்தோடும், என் ஆன்மசாக்ஷியாகவும் உன்னைக் காதலிக்கிறேன்" என்று கூறினேன்.

யாது பதிலளிப்பளோவென்று சந்தேகித்து அவளுடைய கரத்தைப் பின்னுமோர் முறை பிடித்துக்கொண்டு நிற்கையில் அவள் நடுங்குவதை நான் உணர்ந்தேன். கொஞ்சநேரம் வரையில் பேசமாட்டாதவளாக நின்று மௌனம்சாதித்தாள். அப்பொழுது அங்கே குடிகொண்டிருந்தநிச்சப்தம், பக்கத்துத்தோட்டத்தில் பறந்துகொண்டிருந்த ஈக்களின் சப்தத்தாலும் பறவைகளின் கூவுதலாலும் தவிர்க்கப்பட்டதே யொழிய நாங்கள் பேசினேமல்லோம். அச்சமயம் ஒவ்வோர் நிமிஷமும் ஒருமணி நேரத்தைப் போன்றிருந்தது. காதலின் பாற்பட்டு இன்னல்களையடைந்திருக்கும் எனது சகோதர்களே! நான் அப்பொழுது இருந்தநிலைமையை நீங்களும் உணர்ந்தே இருப்பீர்கள். அப்பேர்ப்பட்ட காதல் என்னும் தீ அவிந்துவிட்டபோதிலும் நீங்கள் மறக்கக் கூடியதல்ல என்மீது கிருபைகூர்ந்து அதை யோசித்துப்பார்த்து ஞாபகப்படுத்திக்கொள்ளுவீர்களாயின் என்னைப்பித்தனென்று எண்ணமாட்டீர்கள். வருஷங்கள் கழிந்திருப்பினும், உம்முடைய காதலியின் சந்தோஷமான ஞாபகங்கள் உம்முடைய மனத்தைவிட்டகலா. காதலற்றமனிதன்மனிதனேயல்லன். முதல் முதல் தன்னுடைய மனைவியைக்காதலிக்கிறவனே பெண்டு பிள்ளைகளின்மீது பிரியம் வைத்துக் கடைசியாக கடவுளையும் நேசிக்கிறான். அதாவது கடவுளை ஒரு மேல்மாடியாகப் பாவிப்போமானல் அதை அடைவதற்கு முதற்படியாகத் தோன்றுவது ஒப்பற்ற காதலேயாகும்.

"அமிர்தா—அமிழ்தினும் இனிய குயில் மொழி யுடைய அமிர்தா—நம்மிருவருக்கும் இடையில் உன்னால் வைக்கப்பட்டிருக்கிற தடையை உன்மனமாகிய வாளால் வெட்டி எறியமாட்டாயா? நான் நடந்தவைகளை மறந்து விட்டது போலவே நீயும் அவைகளைமறந்து எனக்கே சொந்தமானவளாக ஆய்விடு!" என்று கெஞ்சினேன்.

அமிர்தா கண்களில் நீர்ததும்ப, "ஹா, என்னால் மட்டும் கூடுமானல்!—அவ்வளவு தைரியம்மட்டும் எனக்கு இருக்குமானல்!" என்று கூவினள்.

"என் நிமித்தம்—அவ்வளவு தைரியத்தை உண்டுபண்ணிக்கொள்ளக்கூடாதா?" என்று வினவி, "நீ என்னுடையவளாகவே இருப்பதாக வாக்களிக்கமாட்டாயா? உன்னுடைய நேயனுகவும் உனது போர்வீரனுகவும் இருந்து உன்னுடைய எதிரிகள் கையிலிருந்து உன்னைக்காப்பாற்றுவேன். உன்னை என்பக்கத்திலிருத்திக்கொண்டே அவர்களுடன்சண்டை செய்து வெற்றிபெறுவேன்" எனக் கூறிமுடித்தேன்.

"ஆ, அவர்களுடன் எதிர்க்கவா! அவர்களை எதிர்ப்பதென்பது நம்மிருவருடைய மரணத்திற்கும் ஹேதுவாகும்!" என்று பெருமூச்சுவிட்டாள்.

"உன்னுடைய காதல் எனக்கு உயிரையும் சந்தோஷத்தையும் கொடுக்குமேயொழிய மரணத்திற்கு—என்னுடையவும் உன்னுடையவும் மரணத்திற்குக் காரணமாக இராது?" என்று மொழிந்து, "உனது வாக்கையளிக்க மாட்டாயா? நமது காதல்—உனக்கு இஷ்டமானல்—இரகசியமாகச் சிறிது காலத்திற்கு இருக்கட்டும்; நாம் பரஸ்பரம் காதலிப்போம்; நீ காதலிப்பதாக மட்டும் வாக்

களி. அதற்கு பாத்தியஸ்தனாகும்படி நான் செய்து கொள்ளுகிறேன்" என்று முடித்து உரைத்தேன்.

அவளுடைய அழகிய தலையைச் சாய்த்துக்கொண்டு சிறிது நேரம் மௌனம் சாதித்தாள்.

பிறகு மெதுவாக அவளுடைய தலையை நிமிர்த்தினாள். அப்பொழுது காதல் அவளுடைய கண்களிலும் முகத்தி லும் பிரதிபிம்பித்திருந்தது. உடனே முதன் முறை எம் முடைய அதரங்கள் சந்தித்தன. பிரம்மத்துடன் சேர எண் ணங்கொண்ட பக்தனும் என்னைப்போல் பரமானந் தத்தை அடைந்திருப்பான் என்று நான் எண்ண வில்லை. எங்களுடைய சிரேஷ்டமான உடன்படிக்கை—உடன் படிக்கை யாகிய முத்தம்—முடிந்தது.

---

## பதினான்காவது அத்தியாயம்

---

### யார்?"

ஆனந்தமயமான சமுத்திரத்தில் அரைமணி நேரம் கழித்தோம். சந்திரபிம்பத்தை யொத்த அவளு டைய முகத்தை என் தோளின்மேல் வைத்துக் கொண்டு அவளுடைய இருகரங்களாலும் எனது இடையைக்கட்டிக் கொண்டு ஆனந்தபாஷ்பம் பொழிந்தாள். நானும் அவளு டைய இருகபோலங்களிலும் ஓயாமல் முத்தியளித்தேன். ஆநந்த வெள்ளத்தில் மூழ்கி இருக்கும் ஞானி எப்படி பூலோக விவகாரங்களை மறந்து விடுவானோ அஃதேபோல் ஏற்கனவே நடந்தவைகளையும் பிறகு நடக்கப் போவதை யும் மனத்தினின்றும் நீக்கி அப்பொழுது அவளுடன்

சேர்ந்திருந்ததையே நினைத்து நினைத்துப் புளகாங்கிதம் அடைந்தேன்.

அமிர்தாவோ என்னைப்பின்னும் பலமாகக் கட்டிக் கொண்டாள். அவள் மனோசமாதானத்தை மிகவும் விரும்பினாளென்பதை அவளுடைய முகச்சாடையால் அறிந்து கொண்டேன். தனிமையாகவும் நேயர்கள் இன்றியும் அவள் இருந்ததோடு ஓர் உண்மையான ஆண் மகன் காதலையும் எதிர்பார்த்திருந்தாள். அவளைக் காத லிக்கும் வரையில் நான் ஓர் உண்மையான பிரம்மசாரியாக இருந்தமையால் பெண்பிள்ளைகளின் மனதையறியச்சக்தி யற்றவனாக இருந்தேன்.

சற்றுநேரத்திற்குப் பிறகு மெல்லியதும் தெளிவா வானதுமான குரலில் பின்வருமாறு பேசினாள்.—

"நான்—நான் செய்வது சரியாவென்று எனக்கே தெரியவில்லை. நான் என்னவோ பயப்படுகிறேன்."

"எதற்காகப் பயப்படுகிறாய்!" என்று மத்தியில் வினவினேன்.

"இனி நமக்கு ஏது சம்பவிக்குமோ என்றுதான் பயப்படுகிறேன்" என்று சொல்லி, "நான்—நானோ பரம ஏழை தாங்கள் தனவந்தர் என்பதை யோசித்துப் பாருங்கள்—பின்னும்———" என்று ஏதோ சொல் லப்போகுமுன்,

"அதைப்பற்றி நீ யேன் யோசிக்கின்றாய்? நம்மிரு வரும் இராஜபோகத்தி லிருப்பதற்குவேண்டிய திரவியத் தைக் கொடுத்திருக்கிற இறைவனைப் பன்முறையும் துதிப் போம்; ஆனால் உன்னை என் காதற்கிழத்தி, இல்லறத் துணைவி, மனையாட்டி என்று அழைக்கும்படியான பாக்கி

யத்தை எப்பொழுது பெறுவேனே என்று ஏங்குகின்றேன்" என்று நான் கூறி முடித்தேன்.

"ஆ! நானும் தங்களை என் மணாளர், நாயகர் என்று அழைக்கும் நேரம் வருமாயின் உடனே மனோசாந்தியடைவேன்" என்று சொல்லிப் புன்னகை புரிந்து ஆசைமிகுதியோடு என் முகத்தில் முத்தியளித்தாள்.

உடனே இருவரும் அங்கு கிடந்த சோபாவின்மீது உட்கார்ந்துகொண்டு காதலர்களாக—நேயர்களாக அல்ல—முதல்முறை பேசலாயினோம். ஆநந்தம், இன்பம், சுகம் என்பதெல்லாம் அஃதே என்று நினைத்தேன். அந்த சந்தர்ப்பத்தில் எம் மிருவருடைய மனதும் ஏகோபித்திருந்தது என்று சொல்லவேண்டுவது அநாவசியம்.

அவ்விதம் நாங்கள் பொழுதுபோக்குகையில் மாலைப் பொழுதும் வந்ததென்பதை ஒரு பெண்மணி "அமிர்தா அமிர்தா" என்றழைத்துக்கொண்டு நாங்கள் இருக்கும் கூடத்துள் வந்தமையால் உணர்ந்தோம். அதுவரையில் பூலோகத்தையும், அதிலுள்ள இயற்கை விநோதங்களையும், எல்லாவற்றிற்கும் முதற்காரணனாகிய இறைவனையும் மறந்திருந்தோம்.

அமிர்தா தனியாக இராமையைக்கண்டு "நான்—நான் வந்ததற்குத் தயவுசெய்து மன்னிக்கவேண்டும்" என்று கேட்டுக்கொண்டே வந்தவழியைப் பார்த்துத் திரும்பினாள் உள்வந்த யுவதி.

"சாரதா, ஏன் போகின்றாய் இவர்தான் நாகநாதர்" என்று அவளிடம் கூறி, "இப் பெண்மணி சந்திரசேகரருடைய குமாரி சாரதா!" என்று என்னை அழைத்துக் கூவி எங்கள் இருவரையும் பரிச்சியம் செய்து வைத்தாள்.

நாங்கள் மூவரும் உத்தியானத்தை நோக்கிச் சென்றோம். சாரதா என்னும் பெண்மணிக்கு வயது பதினைந்தே இருக்கும். எலுமிச்சம்பழம் போன்ற நிறத்தினள், மங்கைப்பருவம் எய்திய யுவதி, மாந்தளிர்போன்ற சரீர காந்தியுடையாள்! அவளுடைய முகத்திலும் நயனங்களிலும் ஒருவிதமான வசீகாசக்தி பிரதிபலித்துக்கொண்டிருந்தது. நாங்கள் மூவரும் உலாவி வருகையில் நான் ஊர்போக வேண்டுமென்னும் எண்ணத்தைச் சொல்ல பண்டாரத்தையாவைப் பார்க்காமல் போகக் கூடாதென்று இருவரும் தடுத்தனர்.

"பண்டாரத்தையாவும், அவருடைய மனைவியும் வந்து விடுவார்கள். தாங்கள் அவர்களைப் பார்க்காமல் செல்லுவீர்களானல் அவர்கள் மனவருத்தம் அடைவார்கள்" என்ருள் அமிர்தா.

"நான் இங்கிருக்கவேண்டுமென்கின்ருயா?" என்று வினவினேன்.

" ஆமாம் தாங்கள் இருக்கவேண்டுமென்று நாங்கள் கேட்டுக்கொள்ளுகிருேம். அமிர்தா இந்தவீட்டிற்குப் புதியவள். அவள் சதா தேசசஞ்சாரி. அவள் பற்பல இடங்களிலிருந்தும் எனக்குக் கடிதம் எழுதுவாள். ஆனல் எவ்விடத்திற்குப் பதில் எழுதுவதென்பது மட்டுந் தெரியாமல் தியங்குவேன்" என்று சொல்லிச் சிரித்தாள் சாரதா.

"ஆமாம்" என்று கூறிய அமிர்தா, "நாங்கள் பள்ளிக் கூடத்தில் படித்துக்கொண்டிருக்கையில் நானு தேசங்களையும் பார்க்கவேண்டுமென்னும் அவா மிகுதியும் இருந்தது. ஆனல் நான் சதா சுற்றிக்கொண்டிருக்கின்றமையால் சளைத்துப்போய்விட்டேன். ஒரு சிறு கிராமத்தில் வசிக்க என்னுடைய மனம் எவ்வளவோ இச்சிக்கின்றது! எனக்கு

நாகரீகமும் வேண்டாம். வீண் இடம்பமும் வேண்டாம். வெளிவேஷமும் வேண்டாம்; மனேவமைதியையே மிகுதியும் விரும்புகின்றேன்" என்று முடித்தாள்.

"ஒருநாள் அவ்விதமே இருப்பாய்" என்று சொல்லி அமிர்தாவைப்பார்த்துப் புன்னகை புரிந்தேன்.

அதன்பொருள் தெரிந்தவளாக: "என்னவோ— யார் கண்டார்கள்?" என்ருள் அமிர்தா.

கொஞ்சநேரத்தில் சதாசிவபண்டாரமும் எங்களுடன் வந்துசேர்ந்தார். "நான் தங்களைப் பார்க்கலாமென்று எண்ணி மற்றுமோர்முறை வந்திருந்தேன். ஆனல் தங்களைப் பார்க்கும்படியான பாக்கியத்தை பெறவில்லை. தாங்கள் வெளியே போயிருப்பதாகச் சொல்லியதோடு முரட்டுத்தனமாக நடக்கவில்லை தங்கள் வேலையாளன்" என்று சிரித்துக்கொண்டே பேசினர்.

"ஓஹோ அப்படியா" என்று ஆச்சரியத்துடன் வினவி,

"எப்பொழுதும் பழைய வேலையாட்கள் எஜமானுடைய நோக்கம்போலவே நடக்கப் பிரயத்தினப்படுவார்கள்" என்றேன்.

"ஆமாம் தாங்கள் சொல்லுவது சரி; அவன் மிகவும் நல்லவனுகக் காணப்படுகிருன். அப்பொழுதுகூட முரட்டுத்தனமாக அவன் நடந்துகொண்டது என்னுடைய தப்பிதமே யாகும். தங்களுடைய இரகசியங்களை நான் கேட்க எவ்வளவும் பாத்தியமற்றவனுக இருக்கையில் அவ்விதம் செய்த குற்றத்திற்குக் தக்க தண்டனை யளித்தான்" என்ருர் சதாசிவ பண்டாரம்.

எங்கள் மூவரையும் அழைத்துக்கொண்டு அவ் வுத்தி

யான மத்தியிலிருந்த ஓர் ஆலவிருக்ஷத்தின் நிழலில் போய்ச் சேர்ந்தார் பண்டாரம். அங்கு சூரியகிரணம் பூமியில் படாதவிதமாகத் தழைத்து நிழல் கொடுத்துக் கொண்டிருந்தது அம்மரம். நாங்கள் போய்ச் சேர்ந்த உடன் ஓர் வேலைக்காரி பல பழவர்க்கங்களை இரண்டு தட்டு களில் கொண்டுவந்து வைத்தாள். நாங்கள் அவைகளைப் புசித்துக்கொண்டே அநேக பொது விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டு மாலைப்பொழுதைக் கழித்தோம்.

நிலவு புறப்படும் வரையில் அவ்விடத்திலேயே இருந்து சதாசிவபண்டாரத்தின் இஷ்டப்படியே வீட்டிற் குள் சென்றோம். அமிர்தாவும் சாரதாவும் இரண்டாவது கூடத்திற்குச் சென்றனர். நானும் பண்டாரத்தையாவும் மேல் மாடியிலுள்ள அவருடைய அறைக்குச் சென்றோம்.

அங்கு சென்று சற்றுநேரத்திற்கெல்லாம் 'நாக நாதரே' என்று அழைத்து "தங்களுடன் பேசும்படி யான சமயம் வாய்த்தமைக்கு மிகவும் சந்தோஷம் அடை கிறேன். தங்களைப் பார்க்கவேண்டுமென்றே அன்றையத் தினம் கல்கத்தா வந்தேன்" என்று கூறினார்.

"யாதுகாரணம் பற்றி?" என்று ஆசையுடன் கேட் டேன்.

"காரணம் அநேகம்" என்று மெதுவாகவும் உண்மை யாகவும் பதில் பக தார். அவருடைய முகம் இளைத்தும் நீண்டும் இருந்தது. எப்படி இருந்தபோதிலும்—அவர் ஒரு பண்டாரமாக இருந்தும்—நான் அவரை மிகுதியும் விரும்பினேன். அவ்வளவு உண்மையும் கூர்மையான புத்தியும் உடைய ஒரு மனிதனைப் பண்டாரவகையில் காண்பதே எனக்கு ஓர் ஆச்சரியமாக இருந்தது.

"தாங்கள் என்னுடன் பேசவேண்டுமென்று எண்ணி

இருந்தமையே இப்பொழுது நான் வந்ததற்குக் காரணம்'' என்று நான் சொன்னேன்.

உடனே எழுந்துபோய்க் கதவைத் தாளிட்டு வந்து உட்கார்ந்துகொண்டு பண்டாரம் பேசலாயினர்.—“நாக நாதரே, ஓர் இரகசிய சங்கதியைப்பற்றி உம்மிடம் பேசலாமாவென்று யோசிக்கின்றேன்—தங்களுடைய சொந்த விஷயத்தில் நான் பிரவேசிப்பது தகாதாயினும் அப்பேர்ப் பட்ட அவசியம் ஏற்பட்டிருப்பதால் நான் பேசவேண்டிய வனுகயிருக்கிறேன். நீங்கள் என்னைப் பக்ஷபாதமில்லாத வன் என்ருவது கருதுகின்றீர்களல்லவா?''

அவர் இருந்த மாதிரியால் ஆச்சரியம் அடைந்தவனாக “ஐயா அந்த விஷயத்தில் எனக்கு மிகுதியும் நம்பிக்கை யுண்டு!'' என்று பதில் சொன்னேன்.

“தாங்கள் முன்ன மோர்முறை வந்தபொழுது பேசிக்கொண்டிருந்த விஷயம் ஞாபகத்தி லிருக்கலாமே! நான் என்ன சொன்னேன் என்பதை மறந்து விட வில்லையே?'' என்ருர்.

“அமிர்தாவைப்பற்றி நாம் பேசிக்கொண்டிருக்கை யில் அவளுடைய இரகசியத்தைத் தாங்கள் சொல்லாதது இன்னும் என் நினைவைவிட் டகலவில்லை!'' என்று கூவி னேன்.

“சொல்லும்படியான நிலைமையில் நான் இல்லாமை யால் சொல்ல மறுத்தேன்'' என்று விடை யளித்தார்.

“நான் தங்களைப் பார்த்துச் சென்றவுடன் என் உயி ருக்கே மோசம் வந்தது. காளிகட்டத்தின் ஒரு மூலை வீட்டில் சாதுரியமாகப் பிடிக்கப்பட்டேன். என்னுடைய ஆயிரம் ரூபா இரசிதையும் பிடிங்கிக்கொண்டனர். ஏதோ

நற்காலமே தப்பித்தேன். எனக்கு ஒரு குழியும் தோண்டப்பட் டிருந்ததாகப் பின்னர் தெரிந்துகொண்டேன்'' என்று நான் கூறினேன்.

"சங்கதி அப்படியா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டார்.

"ஆமாம், நான் அமிர்தாவினுல் தப்புவிக்கப்பட்டேன்'' என்று மறுமொழி கூறினேன்.

அவர் ஏதோ வொன்றைப்பற்றி யோசித்து இருந்தமையால் நான் சொல்லியவுடன் மௌனம் சாதித்தார்.

"என்னை அவ்விதம் கொலைசெய்யத் துணிந்தவர் ஜயன், நந்தனன் என்னும் இருவர்—அவர்கள் அமிர்தாவின் நண்பர்கள்'' என்று நான் சொன்னவுடனே,

"சரி: நான் தெரிந்துகொண்டேன். நான் தங்களை எச்சரிக்கவில்லையா?'' என்று உசாவினுர்.

"தாங்கள் எச்சரித்தீர்கள் உண்மையைக் கூறுமிடத்து, ஐயா, நான் தாங்கள் சொன்னதின்பொருளை அறியாதவனுக இருந்தேன்—இன்னும் அவ்விதமே இருக்கிறேன்'' என்று சொல்லி அவரைக் கவனித்தவிதமே இருந்தேன்.

"பிறகு சொல்லக்கூடாத இரகசியங்கள் என்னிடத்தில் சில இருப்பதாகக் கூறவில்லையா? அவைகளை நான் சொல்லுவேனே யாயின் கடவுளுடைய உண்மையான அடிமையாக இருக்க முடியாது'' என்ருர் சதாசிவ பண்டாரம்.

"அப்பேர்ப்பட்ட கொலை நடக்கப்போவதைத்தெரிந்திருந்த தாங்கள் என்னிடம் உண்மையைச் சொல்ல வேண்டுவது தங்களுடைய—பொதுஜன நன்மையையே

நாடிநிற்கும் பண்டாரத்தையாவாகிய தங்களுடைய, கடமையல்லவா ?" என்று கேட்டேன்.

"நான் சொன்னேன்—ஆனல் தாங்கள் அவைகளைக் கவனிக்கவில்லை" என்று பலமாகக் கூறி "இரம்பாவில் அமிர்தாவும் எச்சரித்தாள். அவள் சொன்னபடி உடனே போய்விடாமல் காலகாணம் செய்தீர்கள் ! " என்று மீண்டும் பேசினர்.

"ஆனல், யாதும் அறியாதவனும், சட்டங்களுக்குக் கட்டுப்பட்டவனும், குற்றமற்றவனுமாகிய ஒரு மனிதன் கைதியைப்போல் ஏன் ஒளித்துக்கொள்ளவேண்டும் ?" என்று வினவினேன்.

"பகைமையின் ஆழத்தையும் பாதகர்களுடைய கெட்ட எண்ணத்தையும் யாரே அறிவார் ? மனிதர்களுடைய பாபகிருத்தியங்களைப் பற்றிச் சிறிதுநேரமேனும் சிந்தித்து ஆச்சரியம் அடைந்ததில்லையா?" என்று என்னைக் கேட்டார்.

"அவர்களை இராக்ஷசர்களுடன் சேர்க்கவேண்டும். என்மீது அவர்களுடைய பகைமைக்குகாரணம்யாதென்று மட்டும் எனக்கு விளங்கவில்லை. அவைகளைத் தாங்கள் தெரிந்திருந்தீர்களாயின் போலீசாரிடம் சொல்லிவிட வேண்டுவது தங்களுடைய கடமையன்ரு ?" என்று அவரை உசாவினேன்.

" ஆமாம் ;" என்று நன்ருக யோசித்து, ஆனல் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் காலம் இருக்கிறது. சில சமயங்களில் ஒருவன் செய்யும் அவனுடைய கடமையே அநியாயமாக இருக்கும் " என்று பதில் பேசினர்.

" இப்பேர்ப்பட்ட அயோக்கியர்களுடைய நடத்தையை வெளிப்படுத்துதல் நியாயமற்றதாகாது" என்றேன்.

"தங்களுடைய உணர்ச்சியினின்றும் நான் தற்போது பிறழ்ந்திருப்பதற்குத் தயவுசெய்து மன்னியுங்கள். என்னுடைய ஸ்தானத்தில் தாங்கள் இருப்பீர்களாயின் அவ்விதம் செய்தல் அநீதி என்றே பெறப்படும்" என்றார் பண்டாரம்.

"உயிர் போகும்படியான நிலைமையிலிருந்து நான் தப்பித்துக் கொண்டவனாயிற்றே. அந்த இரகசியமான உண்மைகளை நான் அறியலாகாதா?" என்று வேண்டினேன்.

"நாகநாதரே! என்னிடத்திலிருந்து அறிய முடியாதென்றும், உண்மை என்னுடைய வழியாக வராதென்றும் ஏற்கனவே சொல்லவில்லையா?" என்று பதில் கூறினார் பண்டாரம்.

"அந்த இரகசியத்தைச் சொல்லாமல் சந்தேகத்தில் என்னைத் தாங்கள் ஆழ்த்திவைத்திருப்பதின் பயன் என்ன? என்னிடமிருந்து அவர்கள் பணம் சம்பாதிக்கவேண்டுமாயின் அவ்வளவு பயங்கரமான வழியையன்றி வேறு வழி செய்யலாகாதா?" என்று கடாவினேன்.

"அவர்கள் யாது உபாயம் செய்தனர்?"

சுருக்கமாகவும் தெளிவாகவும், என்னை டெலிபூனில் அழைத்தது முதல் என் வீடு திரும்பிவந்து சேர்ந்தவரையில் சொல்லி முடித்தேன். அதன் மத்தியில் அவர் மௌனம் சாதித்திருந்ததோடு அச்செயல்களைக் கேட்டு ஆச்சரியமாவது பயமாவது கொள்ளாமையால் அப்பேர்ப்பட்ட சங்கதி பண்டாரத் தையாவுக்கு ரொம்பவும் சாதாரணமானதேயென்று நினைத்தேன்.

"நான் சொல்லியது மாத்திரமின்றி அமிர்தாவும் தங்களை எச்சரித்திருக்கிறாளே?" என்று கேட்டார்.

"அவைகள் யாவும் முடிவுபெற்று விட்டன. அவை நடக்கப் போகின்றனவென்று அமிர்தா அறிந்திருந்த போதிலும் அவள் யாதும் செய்யவில்லை என்பதைமட்டும் நான் மனப்பூர்த்தியாக அறிவேன். அவள் எனக்கு மிகுதியும் நம்பிக்கை யுடையவளாக இருக்கிருள். அதுபற்றியே இங்கே—இன்று, அவளை என்னுடைய மனைவியாகும்படி கேட்டேன்" என்று சொன்னேன்.

"தங்களுடைய மனைவியாகவா!" என்று கேட்டு திடீரென்று எழுந்து நின்ருர்.

"ஆமாம் என்னுடைய இல்லறத் துணைவியாக!"

"அதற்கவள் யாது மறுமொழி தந்தாள்?"

"அவள் சம்மதித்தனள்" என்று பதில் சொன்னேன்.

"நாகநாதரே!" என்று துக்கமான குரலுடன் என்னை யழைத்து, "இது ஒருபொழுதும் கூடாது! சொல்ல முடியாத இரகசியம் ஒன்று மறைந்திருப்பதாக நான் தங்களிடம் முன்னமே சொல்லவில்லையா?" என்று கேட்டார்.

"இரகசியம்! அமிர்தாவைப் பற்றிய இரகசியமா? அஃது என்னை? தயவுசெய்து கூறுமாறு வேண்டுகிறேன்" என்று தாழ்மையாகக் கேட்டேன்.

"நான் ஏற்கனவே சொல்லியுள்ளதை மற்றுமோர் முறை ஞாபகப்படுத்த முடியுமேயொழிய வேறொன்றும் என்னுல் முடியாது. தங்களுக்கும் அமிர்தாவுக்கும் நடுவே ஒரு மரணப் படுகுழி இருக்கிறதென்றும், அவளை விரும்புவீராயின் அக்குழியில் விழுவீரென்றும், அதன் பலன் மரணமே என்றும் சொல்லி இருக்கிறதைத் தயவு செய்து ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். நான் சொல்வதாவது, அவளை மறந்து விடுங்கள்! அவளை நீங்கள் சந்தித்ததாகவே நினைக்கவேண்டாம்' எங்காவது சந்தித்த போதிலும்

அவளை நிமிர்ந்து பாராதேயுங்கள்!" என்று என்னை வேண்டிக்கொண்டார்.

"அவளை என் முழுபலங்கொண்டு காதலிக்கின்றேனே, அஃதொன்றே எனக்குப் போதுமானது."

"ஆ," என்று கூறி "கூடாது. நீங்கள் அவளைக் காதலிக்கக் கூடாது. நீங்கள் அவள்மீது பகைமை பாராட்டலாம்; நான், நான் அதைக் கூடாதென்று மறுக்கிறேன். தெரிந்ததா?" என்று திடமாகச் சொன்னார்.

"அதே சமயத்தில் ஒரு பெண்மணியின் வளையல் சப்தம் கேட்டமையால் திரும்பிப் பார்க்க அமிர்தா திறந்த கதவண்டை நின்றுகொண்டிருந்தாள்.

"அதோ நிற்கிற அவள் சொல்லுவாள்! அவளையே நீங்கள் கேட்டீர்களானால், தங்களைக் காதலித்ததாகச் சொல்லியது வீண்பாசாங்கென்றும், நீர் அவளைக் காதலிக்கக்கூடாதென்றும் சொல்லுவாள்" என்று அவளைக் காட்டினார்.

எனது கண்களில் தோன்றிய கோபக்குறியுடன் அவரைப் பார்த்தேன்.

"என்னுடைய சொந்தக் காரியத்தில் தாங்கள் தலையிடவேண்டிய அவசிய மென்ன? எம்முடைய காதலைத் தடுப்பதற்குத் தாங்கள் யார்?" என்று வினவினேன்.

## பதினைந்தாவது அத்தியாயம்

### எவராலும் எழுதப்பட்டிராத விநோதம்

"ஆ! பண்டாரத்தையா," என்று கூவிய அமிர்தாவின் முகம் வெளுத்தது. "அவரிடம் யாது சொன்னீர்கள் ?" என்று கேட்டாள்.

"குழந்தாய், உன்னுடைய கலியாணமும் காதலும் தவிர்க்கப்பாலன வென்பது உண்மையன்றோ ?" என்று வினவினர்.

"ஆமாம் ! நான் மற்ற பெண்பிள்ளைகளைப்போல் அல்லவென்றும், என்னைச் சுற்றி இருப்பது ஒரு பலமான இருப்புச் சங்கிலியென்றும் அதனின்றும் வெளிவருவது இயலாதகாரியமென்றும் நான் அறிவேன் !" என்றழுது கொண்டே பேசினள்.

"அதனின்றும் வெளிவருவதற்கு ஒரே வழியுண்டு" என்றார் சதாசிவ பண்டாரம்.

"இல்லை ! இல்லை !" என்று கூவி தன் இருகாங்களாலும் தனது முகத்தை மூடிக்கொண்டு, "வேண்டாம் அது! ஒரு பொழுதும் வேண்டாம்! தயவுசெய்து அதைப் பற்றிப் பேசாதேயுங்கள் !" என்று கெஞ்சினள்.

"அப்படியானல் இவருடைய காதலை ஒப்புக்கொள்ள உனக்கென்ன பாத்தியதை இருக்கிறது. நீ அவர்மீது செலுத்தும் காதல் அவருக்கு நன்மை பயப்பதை விட்டு மரணத்தைக்கொடுக்கும் என்பதை நீ உணர்ந்திருந்தும் யாங்ஙனம் அவரைக் காதலிப்பதாகப் பாசாங்கு செய்தனை ?" என்று கோபமாகக் கேட்டார்.

அவள் என்னைப் பார்க்காமல் வேறு திசையை நோக்கி நின்றாள். பண்டாரத்தினுடைய வார்த்தைகள் அவ

ளுடைய பயத்தை அதிகரித்தபோதிலும் என்னை அவள் காதலிக்காமலில்லை என்று தெரிந்துகொண்டேன். நான் உண்மையைப் பண்டாரத்தினிடத்தில் சொல்லிவிட்டது காரணமாக அமிர்தா மனவருத்தம் அடைந்தாள் என்றும் நினைத்தேன். ஆமாம், நான் நடந்துகொண்டது முட்டாள் தனமே. நான் அவ்வுண்மையை—துக்கமான விஷயத்துடன் முடிவுபெற்ற அவ்வுண்மையை—அவரிடம் கூறியதற்கு மிகுதியும் வருந்தினேன். கடைசியாக நான் இருந்த நிலைமையினின்றும் எழுந்து, "ஐயா, என் நிமித்தம் தாங்கள் சிரமம் எடுத்துக்கொள்ளவேண்டாமென்று இறைஞ்சுகின்றேன். நான் அமிர்தாவைக் காதலிப்பதோடு அவள் என்னுடையவளாய் இருப்பதாக வாக்களித்துள்ளாள். ஏதேனும் கேடு விளையுமாயின் அதைச் சந்தோஷத்துடன் அங்கீகரிப்பேன். அப்பேர்ப்பட்ட் கொலையாளிகளோடும், கள்வர்களோடும், தாங்கள் சேர்ந்தவர்களாக இல்லையாயின் அவர்களின் சூக்ஷுமமான சதியாலோசனையைத் தாம் அறிந்தவிதமெப்படி?" என்று வினவினேன்.

"ஆ!" என்று கூவிச் சிறிது மனவருத்தத்துடன், "தாங்கள் உண்மையைத் தெரிந்துகொள்ளாமலே பேசுகிறீர்கள். உண்மையை—தாங்கள் இவளைக் காதலிப்பதின் பயனாக அடையப்போகும் உண்மையைத்—தெரிந்து கொள்ளுவீர்களாயின் என்னுடைய வழிக்கே வந்து விடுவீர்கள்" என்று பதில் சொன்னார்.

"நான் பயமற்றவனாக இருக்கிறேன் என்று தங்களுக்கு ஏற்கனவே சொல்லவில்லையா? எப்பேர்ப்பட்ட இரகசியமான பயத்தையும் அவள் நிமித்தம் எதிர்ப்படவே இஷ்டம் உள்ளவனாகிறேன்" என்று திடமாக மொழிந்தேன்.

"ஐயா, தாங்கள் அறியாமலல்லவா பேசுகின்றீர். நான் உண்மையை உரைத்தேனாயின் 'ப்ளேக், காலரா முதலிய தொத்துவியாதிகளைக்கண்டு எவ்விதம் பயந்து விலகுவீரோ, அவ்விதமே இப்பெண்ணினின்றும் விலகி, ஓடி விடுவீர்;" என்று குறித்தார் சதாசிவபண்டாரம்.

"ஐயே, தங்களுடைய வார்த்தை மிகவும் விநோதமாக இருக்கிறது. தாங்கள் இவளைப்பற்றிக் குறைகூறியதிலிருந்தும் அமிர்தா ஒரு கொலைக்கஞ்சாப் பாதகி என்றும், சாதுரியமான திருடி என்றும் எவருமே எண்ணிக் கொள்வார்" என்று ஆத்திரத்தோடு கூறினேன்.

"நான் சொல்லியதைத் தாங்கள் வேறுவிதமாக எண்ணிவிட்டீர்கள். நான் குறை கூறவில்லை என்றும், தங்களுடைய காதல் மரணமாக முடியுமென்றும் தெரியப்படுத்தவே எண்ணங்கொண்டவன்" என்றார்.

தாங்கள் அவ்வளவு 'ஸ்ரத்தை' எடுத்துக்கொள்ள வேண்டிய தென்ன? தங்களுடைய எண்ணம்யாது?" என்று கேட்டேன்.

"உங்கள் இருவருடைய க்ஷேமமே என்னுடைய நோக்கம்" என்று சாவதானமாகப் பதில் கூறினார்.

"அமிர்தாவை என்னிடம் உண்மையைக் கூறும்படி சொல்லியதோடு அவளுடைய மனமார்ந்த காதல், மாயக் காதல் என்றும் குறித்தீர்கள்" என்று முன்னையினும் விட கோபமாகக் கூறினேன்.

"நான் தங்களிடம் சத்தியத்தைக்கூற முடியாதவனாகையால் உண்மையைப் பேசும்படி அவளுக்குச் சொன்னேன்" என்று மறுமொழி கூறி "ஆ! நாகநாதரே, விஷயம்—அபாயமும் பயங்காமுமான விஷயம்—தங்களுக்குச்சொல்லப் படுமேயாயின்—" என்று தயங்கினார்.

"பண்டாரத்தையா, இவைகளை எல்லாம் நாகநாதருக்குச் சொல்லி அவரை ஏன் பின்னும் பின்னும் இரகசியத்திலாழ்த்துகிறீர்கள்—எனது உயிரையே தியாகம் செய்ய வேண்டுவதாக இருந்தபோதிலும் சம்மதமே. தாங்கள் இதுவரையில் எனக்கு உற்ற நேயராக இருந்து இவ்விதம் திரும்பியதென்னோ?" என்று வினவினாள் அமிர்தா.

"குழந்தாய் இவ்வோர் விஷயத்தில் மட்டுமே" என்று பதிலளித்து, "உனது நிலைமையையும், கடந்துபோன எல்லா சங்கதிகளையும், நீ நினைத்துப் பார்த்து நான் செய்வது சரியா அல்லவாவென்று சித்தாந்தப் படுத்திக்கொள். இவளைப்போன்ற நல்லவர் கெடும்பொழுது என்போலியர் அதைத்தடுக்கக் கடமைப் பட்டிருக்கின்றார்க ளன்றோ?" என்று கேட்டார்.

"இந்த உபயோகமற்ற சங்கதிகளை எல்லாம் கவனியாதேயுங்கள். இவை தங்களுடைய நிலைமைக்குப் பொருத்தமற்றன. இவள்மீது குறிப்பான எந்தக்குற்றத்தைச் சாற்றுகிறீர்? தயவுசெய்து அஃதொன்றைமட்டும் கூறுமின்?" என்று கேட்டேன்.

"குற்றம் இவள் மூலமாகச் செய்யப்படுகிறதேயொழிய இவளே குற்றம் செய்வதில்லை" என்று பதில் சொல்லி அதிகம் பேசமுடியாதவராக நின்று மௌனம் சாதித்தார்.

"இன்னும் தெளிவாகச்சொல்ல முடியாதா?" என்று கூவி, "இப்பொழுது ஆபத்திலிருக்கிற சங்கதிகளை எல்லாம் தயவுசெய்து யோசித்துப் பாருங்கள்" என்று முடித்தேன்.

"ஆமாம், முதலில் தங்களுடைய பிராணன், அதைப் பற்றி நான் முன்னமேயே சொல்லியிருக்கிறேன்" என்றார்.

"அமிர்தா," என்றுகூவி அவள் நின்றபக்கம் திரும்பி, "நீயாவது பேசமாட்டாயா? இவற்றின் பொருள் யாதெனவுரைக்கலாகாதா? உனக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம்? அவ்விதமான சம்பந்தமில்லையாயின் இவர் ஏன் இவ்விதம் பேசுகிறார்?" என்று கோபமாகக் கேட்டேன். சற்றுநேரம் மௌனம் சாதித்துப் பிறகு "அவருக்குப் பாத்தியதையுண்டு" என்று பொருள் படும்படியாகத் தலையை அசைத்தாள்.

"நம்முடைய மத்தியில் இவருக் கென்னவேலை? நான் உன்னை நேசிக்கிறேன். மற்றவர்கள் நம்மத்தியில் பிரவேசிக்க வேண்டியதில்லையே!" என்று பின்னும் வினவினேன்.

"அவர் ஒருவருக்கே பாத்தியம் இருக்கிறது என் அன்பரே!" என்று பதிலளித்தாள். என்னை அன்பரே என்றழைத்ததில் அஃதே முதன் முறை.

"என்ன பாத்தியம்?" என்று நான் கேட்க

"அவள் பூமியைப் பார்த்த வண்ணமே நின்று, "அவரையே கேளுங்கள்" என்றாள் அமிர்தா.

"நாகநாதரே, இந்த அபாயமான தப்பிதத்தை நான் தடுத்தேன். இனி இதைப்பற்றி நான் ஒன்றும் பேசத் தயாராக இல்லை" என்றார் பண்டாரம்.

எனக்கு மனோவருத்தமும் கோபமும் மூண்டன. அந்த இரகசியம் ஒவ்வொரு நிமிஷமும் அதிகரித்தது. பண்டாரத்திற்குப் பாத்தியதை உண்டென்று அமிர்தாவே ஒப்புக்கொண்டாள். அப்படி இருந்தும் ஒரு சாதாரண நண்பன் அவள் செலுத்தும் காதலில் பிரவேசிக்கவேண்டிய காரணம் யாதென்று வெகுநேரம் யோசித்தும் ஒரு விதமான முடிவிற்கு வந்தேனில்லை.

அவ்வளவு சம்பாஷணைகள் நடந்த பிறகும் அமிர்தா என் மீது பக்ஷம் குன்றியவளாகக் காணப்படவில்லை.

"இந்தப் பெண்ணை நீங்கள் ஒப்புக் கொள்ளும்படி சொன்னீர்களே, எதை ஒப்புக் கொள்ளுமாறு சொன்னீர்?" என்று நான் பண்டாரத்தைக் கேட்டேன்.

"உண்மையை" என்று சாவதானமாகப் பதில் சொன்னார்.

நான் எனது காதலி இருந்தபக்கம் திரும்பி "உண்மை யாது? நீ என்னை நேசிக்கின்றனையா?" என்று உசாவினேன்.

"நாகநாதரே, ஆமாம்" என்று விடை பகர்ந்தாள்.

"நான் அதைப்பற்றிக் கேட்கவில்லை; ஆனால் உன்னைப்பற்றிய உண்மை?" என்று அவசரமாகக் கேட்டார் பண்டாரம்.

"நான் எப்பேர்ப்பட்டவள் என்பதை நாகநாதர் அறிவார்."

"ஆனால் நீ யார் என்பதை அவர் அறியார்."

"அப்படியானால் தாங்கள் அவரிடத்தில் சொல்லலாம்" என்று கோபத்துடன் கூறி, "சொல்லுங்கள், தங்களுக்கு இஷ்டமிருந்தால் என் அன்பனைவிட்டு என்னைப் பிரியுங்கள்—அவமானத்தில் என்னைத் தள்ளுங்கள்! நான் தங்களுடைய கைகளி லிருக்கிறேன்!" என்று கதறினாள்.

"அமிர்தா!" என்று வருத்தத்துடன் அழைத்து,

"நான் உன்னுடையவும் உன் தந்தையா ருடையவும் தோழன்—நான் உங்களுடைய பகைவனல்லன். இது வரையில் உனக்கு விரோதமாக யான் ஏதேனும் செய்ததாக நீ கருதுவையேல் நான் அதைப்பற்றி அனுதாபப் படுகிறேன்" என்று கூறினார்.

"எனக்கும் நாகநாதராகிய என் பிராணநாதருக்கும் மத்தியில் ஒரு தடையாகத் தாங்கள் நிற்கின்றீர்கள் அல்லவா?" என்று கேட்டாள் அமிர்தா.

"ஆமாம்; ஏனெனில் துக்கமும் மரணமுமே சம்பவிக்கப் போவதை நான் அறிவேனுகையால்; நான் செய்திருக்கிற வாக்குத்தத்தத்தை நீ நன்ருக அறிந்திருக்கிருய்' என்று பதில் சொன்னுர் பண்டாரம்.

"ஆ! நான் நன்ருக அறிவேன். ஐயா நான் ஏதேனும் கோபமாகப் பேசி இருப்பின் தயவுசெய்து க்ஷமித்துக்கொள்ளுங்கள். தாங்கள் என்னுடையவும் நாகநாதருடையவும் நண்பர் என்பதை நான் தெரிந்து கொள்ளாமலில்லை.—உண்மை அபிமானத்தைப்பற்றி உபன்னியாஸம் செய்பவர்களாகிய தாங்களே இப்பேர்ப்பட்ட தடையை எம்மிருவருக்கும் நடுவில் வைத்து விட்டீர்களே—என்று எம்முடைய சிற்றறிவிற்குத் தோன்றுகின்றதே யொழிய தங்களுடைய சிரேஷ்டமான எண்ணம் விளங்கவில்லை" என்று விட்டு விட்டுப் பேசினுள் அமிர்தா.

சதாசிவபண்டாரம் ஒரு பெருமூச்சு விட்டார். அவருடைய மெலிந்த உதடுகள் இரண்டும் ஒட்டிக்கொண்டன; நரைத்த அவருடைய கண் இமைகள் நிமிர்ந்தன; அவருடைய முகத்தில் ஒரு பயங்கரமான குறி காணப்பட்டது.

"அமிர்தா, நான் நல்ல எண்ணத்துடனேயே பேசினேன். நீ நாகநாதர்மீது செலுத்தும் அன்பு கேட்டை விளைவிக்கும் என்பதைத் தெரிந்துகொண்டாயா?" என்று பண்டாரம் மீண்டும் வினவினுர்.

"அமிர்தா ஏற்கனவே தெரிந்துகொண் டிருக்கிருள்" என்று சொல்லி, "ஆயினும் நஷ்டத்தை அனுபவிப்பதென்று நிச்சயம் செய்துவிட்டோம்" என்றேன்.

"அந்த நஷ்டம், ஹா, பெருத்ததாயிற்றே!"

என்று உறுதிபடக் கூறி, "தாங்கள் முன்னரே குறிக்கப் பட்டிருக்கிறீர்கள். தாங்கள் தப்புவதற்குள்ள ஒரே மார்க்கம்—அமிர்தா சொல்லியதுபோல் உடனே ஓடிப் போய் வேறுபெயருடன் இருப்பதே—இங்கிருந்து அமிர்தாவை நேசிப்பதென்பது தங்களுடைய புத்திசாலித் தனத்தைக் குறைப்பதோடு—அதன் முடிவு தற்கொலையே யாகும்!" என்று முடித்தார்.

"அப்படியே இருக்கட்டும்,"' என்று நான் தைரியமாகப்பேசி "நான் காதலிக்கும் பெண்ணை ஒருபொழுதும் கைவிடேன். தாங்கள் சொல்லுவதில் ஏதோ ஒரு இரகசிய அபிப்பிராயம் இருக்கின்றது; அதனால் நான் அதை ஒப்புக்கொள்ளச் சம்மதியேன்" என்று பின்னுங் கூறினேன்.

"தங்களுடைய பிராணனைக் காப்பாற்றும் பொருட்டுக் கூட சம்மதியீர்களோ?" என்று கடாவினார், பண்டாரம்.

"என்னுடைய உயிரைக் காப்பாற்றும் பொருட்டும் சம்மதியேன். இது என்னுடைய விஷயம். அவளுடையதும் கூட" என்று ஆத்திரத்துடன் சொன்னேன்.

"அமிர்தாவை நான் காப்பாற்றுவேன்; சந்தேகம் வேண்டாம். நான் சிறிதும் பயப்படவில்லை. ஒரு வார்த்தையினாலாவது சைகையினாலாவது எங்கள் விரோதிகள் என் முன் அகப்பட்டுக் கொள்வார்களாயின் அன்றே அவர்களுடைய கடைசி நாள். ஏற்கனவே ஹனுமான் மந்திரத்தில் நடத்திய செய்திகளைப்பற்றிய விவரம் சொல்ல வேண்டி வரும். ஆகையால் அவர்கள் ஓடுவதையே குறியாகக் கொண்டிருப்பார்கள்" என்று நான் மீண்டுங் கூறினேன்.

"ஆயின் காளிகட்டத்தில் அன்றிரவு நடந்த இரகசிய

சங்கதியை வெளியிடுவதாகத் தங்களுக்கு உத்தேசமோ?" என்று சற்றுப் பயந்தவராகக் கேட்டார் பண்டாரம்.

"என்னுடையபகைவர் என்னைத்திடமென்று சூழ்ந்து கொலை செய்வதற்கு வேண்டிய சதியாலோசனை செய்வதாகத் தாங்கள் சொல்லுகின்றமையால் நானும் என்னுடைய காரியத்தைச்செய்து பழிக்குப்பழி வாங்குகிறேன். நானோ சட்டத்திற்குக் கட்டுப்பட்ட மனிதன். எவனாவது ஒரு பகைவன் காரணமின்றி என்னை எதிர்ப்பானாயின் அவனை நான் ஒரு சரியான சம்மட்டியால் அடிப்பேன்" என்றேன்.

"தாங்கள் நம்பிக்கையற்றிருக்கிறீர்கள்" எனக் கூறித் தார் பண்டாரம்.

"என் காதல் சம்பந்தப்பட்ட மட்டில் நான் அவ்விதமே இருக்கிறேன், எனது மனைவியாவதாக அமிர்தா இன்று வாக்களித்து விட்டாள். அவ்விதமாய் பிறகு நடக்கும் சகல விஷயங்களும் எம்மிருவரைப் பொறுத்தது."

"இவளுடைய தகப்பனார் அந்த ஏற்பாட்டுக்கு மறுத்தால்?—" என்று சந்தேகமாகக் கேட்டு அமிர்தாவைப் பார்த்தார்.

"நான் அவரை நேரேபார்க்கிறேன்" என்று பயமுறுத்தும் பாவனையாகப் பேசி, "நான் பேசியபிறகு அவர் மறுத்தொன்றும் சொல்லார். தங்களைவிட நான் அவரை நன்றாக அறிவேன்" என்று நிச்சயமாகக் கூறினேன்.

அவ்வார்த்தைகளைப் பேசிய மாத்திரத்தில் அமிர்தாவின் முகம் மாறுபட்டது. அக்காக்ஷி மிகவும் பரிதாபமாகவும் துக்கமாகவும் இருந்தது.

"தங்களுக்கு என்னதெரியும்?" என்று வினவினுள் அமிர்தா.

"ஒன்றுமில்லை, கண்மணீ, நமது காதலைத் தடுக்கக் கூடியதொன்றும் இல்லை. உனது தந்தையின் விஷயங்கள் உன்னுடையன வல்ல. அவருடைய செய்கைக்கு நீ உத்திரவாதியுமன்று" என்று நிச்சயித்துக் கூறினேன்.

நான் அவ்விதம் பேசிய பிறகே அவளுடைய மனதிலிருந்த பாரம் இறங்கியதுபோல் சாந்தமான பார்வையோடு என்னை நோக்கிப் பின்வருமாறு கூறினுள்.

"ஆ! தங்களை நான் எவ்விதம் வந்தனம் செய்வேன். நான் திக்கற்றவளாயும் ஆதாரணையற்றவளாயும் இருக்கிறேன். எனக்கு மட்டும் அவ்வளவு சக்தி இருக்குமாயின் நான் தங்களுக்கு ஒரு விநோதமான கதையைச் சொல்லுவேன்—ஏனெனில் என்னுடைய கதை இதுவரையில் எவராலும் எழுதப்பட்டிராத விநோதம். ஆனுல் ஐயா அதற்குச் சம்மதியார்" என்ருள்.

"உனக்குச் சரியாகத் தோன்றுமாயின் நீபேசலாம்!" என்று புதிதான குரலில் கூவிய சதாசிவ பண்டாரம், "நாகநாதர் உண்மையைக் கடைசிமுறையாகவும் முதன்முறையாகவும் கேட்கட்டும்" என்று பின்னும் கூறினுர்.

"ஆ, உண்மை!" என்று எதிரொலி கொடுத்துப்பேசி, "சரி, உண்மையைச் சொல்லுங்கள்" என்று கெஞ்சிக் கேட்டேன்.

"முடியாது" என்று கூவித்தன்னுடைய முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு, "முடியாது—தயவுசெய்து மன்னியுங்கள்—என்னுல் முடியாது" என்று பதில் அளித்தாள்.

"உன்னால் முடியாது," என்று சேர்ந்து பேசி, "உன்னால் முடியாது, ஏனெனில் அஃது அவ்வளவு கர்ணகடூரமாகவும், அவ்வளவு மானக்கேடாகவும், அவ்வளவு அபவாதமானதாகவும் இருக்கும்! அதனாலேயே நீ எவரையும் காதலிக்கலாகாதென்று தடுக்கின்றேன்" என்று அமிர்தாவைப் பார்த்துக் கூறிமுடித்தார் பண்டாரம்.

---

## பதினாறாவது அத்தியாயம்

---

### அந்தப் புதியமனிதன்.

ஒரு மாதம் வரையில் நாங்கள்—நானும் அமிர்தாவும்—ஒருவரை யொருவர் காதலிப்பது சதாசிவ பண்டாரத்திற்கு மட்டுமே தெரியும். எங்களுடைய காதல் அசம்பாவிதமே என்று தெரிந்திருந்த பண்டாரமும் விதிப்படியாகுக வென்று விட்டு விட்டார். அமிர்தா சந்திரகாசியில் உள்ளளவும் வாரத்திற்சின்னாள் ஆங்கு சென்று அவளுடன் சந்தோஷமாய்ப் பேசி இருந்து வருவேன். சதாசிவ பண்டாரம் எம்மை எச்சரிப்பதை விட்டொழித்தாரேனும், நாங்கள் சேர்ந்திருக்கும் சமயங்களில் அவருடைய முகம் மாறுபாடடையும். சாரதாவும் அமிர்தாவுடன் இருந்ததோடு அவளுடைய இன்னுயிர்த் தோழியுமாக இருந்தாள்.

அந்த நான்கு வாரங்களில் இரங்கையாவுடன் கடிதப் போக்கு வரவை ஏற்பாடுசெய்ய விரும்பி அமிர்தா கொடுத்த பஞ்சாப்விலாஸத்திற்கு ஒரு தந்திகொடுத்தேன். ஆனால் பதில் ஒன்றும் வந்திலது. லாகூரில் உள்ள ஒரு சாப்பாட்டுக் கடைக்குத் தந்திகொடுத்து கேட்டதில்

அங்கே இரங்கையாவென்ற பெயரையுடைய எவருமே இல்லை என்று பதில் வந்தது.

நான் இதை அமிர்தாவிடம் சொல்ல அவள், "தந்தையார் ஒருகால் லாகூருக்கே போகாமல் வெளியூர்களில் பிரயாணம் செய்கின்றனரோ தெரியவில்லை. ஒருவாரமாக அவரிட மிருந்து எனக்கும் யாதொரு கடிதமும் கிடையாது" என்று கூறினாள்.

இரங்கையாவுக்கு நான் கடிதம் எழுதக்கூடாதென்னும் நோக்கத்துடன் அமிர்தா இருந்ததாக நான் நினைத்தேன். அவர் எங்களுடைய கலியாணத்தைத் தடுப்பரோவென்றும் சந்தேகித்தேன்.

அவரைப் பார்க்காமலும், அவருடைய அபிப்பிராயத்தைப் பெறாமலும் இருக்கும் வரையில் நான் பயத்தினின்றும் நிவர்த்தி பெறமுடியாதென்பதை நன்குணர்ந்திருந்தேன். அவளைச் சூழ்ந்திருந்த இரகசியத்தைப்பற்றி நான் எவ்வளவுக் கெவ்வளவு கூர்ந்து கவனித்தேனோ அவ்வளவுக் கவ்வளவு அஃது அதிகரித்தது.

சின்னாட்களுக்குப் பிறகு, அவளுடைய தகப்பனார் அலஹபாத் "பார்சீ ஹோட்டலில்" இருப்பதாகவும், இரண்டு மூன்று வாரங்கள் வரையில் கல்கத்தா வரமாட்டாரென்றும், இரண்டு தினங்களில் சிம்லாபோவதாகவும் எனக்குக் கடிதம் எழுதி இருந்தாள் அமிர்தா.

ஆகையால் மறுநாட்காலை அலகபாத்போய்ச்சேர்ந்து பார்சீ ஹோட்டலில் இரங்கையாவைப்பற்றி விசாரித்தேன்.

"அப்பெயரையுடைய கனவான்யாரையும் காணோம்" என்று ஒரு புஸ்தகத்தைப் பார்த்துக் கூறிய குமாஸ்தா—

"அவர் இன்னும் வரவில்லை ஆயினும் அவர் வருவார் எனவே எதிர்பார்க்கிறேன். இரங்கையா என்னும் கனவானைப் பார்க்கவேண்டுமென்று நேற்றையதினம் ஒரு ஹிந்துஸ்தான் மாது தேடி வந்தாள்" என்றான்.

"ஆயின் தங்களுக்கு அவளுடைய பெயர் தெரியவாரதா?" என்று நான் வினவியதற்குத் தெரியாதென்று மறுமொழி தந்தான்.

"அந்த மாது அவரைப் பார்க்கவந்தமையால் அவர் அவசியம் வருவார் என்றே ஆகின்றது. அதில் சந்தேகிக்கவேண்டியதில்லையே?" என்று மறுபடியும் கேட்டேன்.

"அதில் ஒன்றும் சந்தேகமில்லை. அநேகமாக இன்று அவர் வருவார் என்றெண்ணுகிறேன்" என்றான் குமாஸ்தா.

அவனிடமிருந்து அதிகம் கிரகிக்க முடியாமையால் அத்துடன் திரும்ப வேண்டியவனானேன். உள்ளே சென்று போஜனம் செய்து முன் அறையொன்றில் அன்றைப் பத்திரிகையுடன் உட்கார்ந்திருந்தேன். அவ்விரவை அங்கு கழித்து இரங்கையாவைப்பற்றி விசாரிப்பதா அல்லது கல்கத்தா திரும்புவதா என்ற சந்தேகத்துடன் உட்கார்ந்திருக்கையில் அரைமணி நேரத்திற்குப் பிறகு நிமிர்ந்து பார்க்கும்பொழுது இரங்கையா நல்ல உடையணிந்து பலகடிதங்களுடன் வர, நான் படித்துக்கொண்டிருந்த பத்திரிகையால் முகத்தை மறைத்துக் கொண்டு அவரைக் கவனித்தேன். நான் உட்கார்ந்திருந்த இடத்திற்குச் சற்று தூரத்திலிருந்த நாற்காலி யொன்றில் உட்கார்ந்து கையிலிருந்த தந்திக் கடிதமொன்றை ஆவலுடன் திறந்து பார்த்தார். உடனே அவருடைய முகம் மாறு

பாடடைந்தது. அந்தத் தந்தியை மிக்க மனவருத்தத்துடன் கையில் கசக்கித் தன்னுடைய சட்டைப் பையில் போட்டுக் கொண்டார்.

அவர் உடுத்தியிருந்த உடையினின்றும், அவர் ஒரு கனவான் என்றும், வயது காலத்தைச் சுகமாகக்கழிப்பவரென்றும் எவருமே எளிதில் அறிந்து கொள்ளுவார்கள்.

உடனே கையிலிருந்த ஒவ்வோர் கடிதமாகப் படிக்க ஆரம்பித்தார். அவர் உட்கார்ந்திருந்த நாற்காலியின் பக்கத்தில் குப்பைக் கூடையொன்றிருந்தது. உபயோகமற்ற சிலவற்றை அவர் அதனுள் எறிவாராயினர். அக்கடிதங்களிலொன்று மனோவமைதியைக் கொடுத்தமையால் ஒரு தந்தியை எழுதிக்கொண்டு வெளியே எழுந்து போயினர்.

அவர் எழுந்து சென்றவுடன் என் கையிலிருந்த பத்திரிகையைப் போட்டுவிட்டு மற்றோர் பத்திரிகையுடன் இரங்கையா உட்கார்ந்திருந்த நாற்காலியில் அமர்ந்தேன். நான் அவ்விதம் செய்ததை எவரும் கவனித்திலர். சற்று நேரம் படிப்பவன் போலப் பாசாங்கு செய்து யாரும் பார்க்காமலிருந்த சமயத்தில் அவரால் எறியப்பட்டதோர் லகோடாவை எடுத்துப் பார்த்தேன். அதில் "விசாகப் பட்டணம் பிரயாணிகள் ஹோட்டல் கீலகர்" என்று எழுதப்பட்டு அந்த விலாஸத்தினின்றும் திரும்பியனுப்பப்பட்டிருந்தது. அது என்னை ஆச்சரியத்தி லாழ்த்தியது. நான் எழுந்து போய் தபால் குமாஸ்தாவைக் கண்டு பின்வருமாறு கேட்டேன். "சற்று நேரத்திற்கு முன்பு தாங்கள் ஒரு கனவானுக்குச் சில கடிதங்களும் ஒரு தந்தியும் கொடுத்தீர்களே அவருடைய பெயர் கீலகரோ?" என்று வினவினேன்.

"ஐயா அவரேதான்" என்று பதில் பகர்ந்து,

"அவைகளைப் பெற்றுக்கொண்டு அதோ அந்த வழியாகச் சென்றார்" என்றான்.

"ஆயின் தாங்கள் அவர்களை அறிவீர்கள்போலும்!" என்றேன்.

"ஆ, அவர் அடிக்கடி இங்கே வரும் வழக்கமுண்டு. கொஞ்ச நாளைக்கு முன்னர்கூட ஒருமுறை வந்திருந்தார்" என்று கூறினான். ஆகையால் அமிர்தாவின் தகப்பனார் அவ்வூரில் கிலகர் என்னும் வேறு நாமதேயத்தோடு இருந்து வருகிறார் என்று எண்ணினேன்.

சில வியாபார விஷயங்களில் பெயரை மாற்றும்படியான நேரம் வருவது சகஜமேயாயினும், இரங்கையாவினுடைய இரகசியம் மட்டும் சாதாரணமானதாகத் தோன்றவில்லை.

சிறிது நேரம் காத்திருந்து அவர் வந்தவுடன் அவரைப் பார்க்க வேண்டுமென்று நிச்சயம் செய்துகொண்டேன். நான் நினைத்ததுபோலவேயே பக்கத்து தந்தி ஆபீஸுக்கு போய் அவர் திரும்பி வந்த உடன் அவரை சமீபித்து நமஸ்கரித்து "ஐயா தாங்கள்தான் இரங்கையாவென்று எண்ணுகிறேன்" என்றேன்.

அந்தப் பெயரைக் கேட்டவுடன் அவர் முகம் மாறுபட்டது.

"ஐயா, தங்களை நான் தெரிந்துகொள்ள முடியவில்லையே!" என்றாரேயொழிய தான் இரங்கையா என்றாவது அல்லவென்றாவது சொல்லவில்லை.

"சின்னாட்களுக்கு முன்னர் நாம் இரம்பாவில் சந்தித்தோம்" என்று சொல்லி, "அப்பொழுது தங்களுடன் பேசும்படியான பாக்கியத்தைப் பெறவில்லை. தாங்களும்

திடீரென்று புறப்பட்டுவிட்டீர்கள். என்னுடைய அறைக்கு எதிர் அறையில்தானே தாங்கள் வந்திறங்கினீர்கள். அஃது ஞாபகத்திலில்லையா?" என்று கேட்டேன்.

"ஆமாம்!" என்று ஞாபகம் வந்தவராகக் கூறி "இது எவ்வளவு மடமைத்தனம். தயவு செய்து மன்னியுங்கள். நான் தங்களை எவ்விடத்தோ பார்த்திருப்பினும் இன்ன இடத்திலென்று முதலில் ஞாபகத்திற்கு வரவில்லை. தாங்கள் சௌக்கியந்தானே? தங்கள் நாமதேயம்—" என்று நீட்டினார்.

"நாகநாத—நாகநாத பண்டிதர்!!" என்று முடித்தேன். "நாகநாதரே, தாங்கள் என்னை அடையாளம் கண்டு கொண்டதற்கு மிகுதியும் நன்றிபாராட்டக் கடமைப்பட் டிருக்கிறேன். எனக்கு வயதாய்விட்டபடியால் ஞாபகம் பயன்படுவதில்லை. நான் சதா பிரயாணம் செய்து கொண்டிருக்கிறே னாகையால் பலரைச் சந்திக்கும்படி சம்பவிக்கிறது" என்று சந்தோஷமாகப் பேசினார்.

"தங்கள் குமாரி சதாசிவ பண்டாரத்துடன் சந்திரகாசியில் வசிக்கிறாப் போலிருக்கிறது" என்று குறித்தேன்.

நான் சொன்னதைக் கேட்டுத் திடீரென்று பயந்தவராக, "ஆ! ஆமாம்; அந்தப்பெண் இரம்பாவில் என்னுடன் இருந்தபொழுது தாங்கள் பார்த்திருக்கிறீர்கள் போலிருக்கிறது" என்று கூறினார். நான் ஆமாம் என்று கூறினேன். ஆயினும் அமிர்தாவை "அந்தப் பெண்" என்று அவர் குறித்ததானது எனக்கு ஆச்சரியமாகவே பட்டது. இரம்பாவில் அன்றிரவு இரங்கையாவை இரகசியமாகச் சந்தித்த மனிதர்களும் "அந்தப்பெண்" என்றது என்னுடைய ஞாபகத்திற்கு வந்தது.

"நான் அமிர்தாவைச் சந்தித்தது மாத்திரமின்றி ஒப்பற்ற நேயனு மாயினேன்" என்றேன்.

"ஓ!" என்று தனது இருகண்களையும் திறந்து "இதைக்கேட்டு நான் மிகவும் சந்தோஷம் அடைகிறேன்" என்றார் இரங்கையா.

அவர் அவ்வளவு சாமர்த்தியமாக நடித்தபோதிலும், என்னுடைய எதிரில் அவர் உண்மையான சந்தோஷத்தை யடைந்தவராகக் காணப்படவில்லை.

நாங்கள் பற்பல விஷயங்களைப் பேசி இருந்து, "ஐயா இரங்கையகாரு நான் பலவாரங்களுக்கு முன்னரே தங்களைப் பார்க்கவேண்டுமென்னும் அவாவுடன் இருந்தேன். தங்களிடத்தில் சில சங்கதிகளைச் சொல்ல விரும்புகின்றேன்!" என்றேன்.

"ஓ! அஃதென்னை!" என்று என்னை ஆச்சரியத்துடன் பார்த்து வினவி "நான் இங்கிருப்பதை அமிர்தாவினால் தெரிந்து கொண்டு வந்திருக்கின்றீர்களே யொழிய எதிர்பாராத சந்திப்பல்லவே இஃது?" என்று முடித்தார்.

"ஒருபொழுதும் இல்லை. நான் தங்களைப்பார்க்க வேண்டுமென்றே வந்தேன்—விஷயம் மட்டும் சற்று இரகசியமானது" என்றேன்.

அவருடைய முகத்தின் ஒளி சற்று மங்கியதாக நினைத்தேன்.

"சரி; நான் கவனமாக இருக்கிறேன், சங்கதி இன்னதென்று சொல்லுங்கள்" என்று மேலே சொல்லும்படி கேட்டார் இரங்கையா—.

சிறிது யோசிக்து, "ஐயா தங்களுடைய குமாரி அமிர்தாவை நான் காதலிக்கிறேன். அவளும் என்னுடைய மனைவியாக இருக்கச்சம்மதித்தாள்; தங்களுடைய உத்தர

வைப் பெறவே இங்கு வந்திருக்கிறேன்" என்று புகன்றேன்.

ஆச்சரியத்தால் என்னைக் கவனித்து தான் உட்கார்ந்திருந்த நாற்காலியினின்றும் எழுந்து—"என்ன ?" என்று கூவி "அமிர்தா தங்களை முன்பின் அறியாமலிருந்தும் கண்டவுடன் காதலிக்கிறாளா?" என்று உசாவினார்.

"அவள் காதலிக்கின்றாள்;" என்று விடைகூறி "நான் தங்களுக்குத் தெரியாதவனாக இருந்தபோதிலும் இனிமேல் அப்படி யல்லவே. எனக்கு ஏராளமான திரவியம் இருக்கிறது. தங்களுடைய பெண்ணைக் கௌரவமாகக் காப்பாற்றக் கூடிய ஐஸ்வரியம் எனக்குண்டு" என்று உண்மையைச் சொன்னேன்.

சிறிதுநேரம் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்து, "தங்களுடைய வருமானம் என்ன?" என்று என்னைப் பார்த்துக்கேட்டார்.

நான் எனது வியாபாரத்தையும் கல்கத்தாவில் வீடு வாசல், திருச்சியின் நிலம் முதலியவற்றைப் பற்றியும் வியக்தமாகக் கூறினேன்.

"நான் சம்மதி கொடுப்பேனாயின் எனது குமாரிக்கு எவ்வளவு சொத்து எழுதிவைப்பதென்பதை யோசித்தீர்களா?" என்று மீண்டும் வினவினார்.

நான் அதைப்பற்றி யோசிக்கவில்லை என்றும் இருபதினாயிரம் பவுன் கொடுக்கச் சம்மதம் என்றும் சொன்னேன்.

" அதனால் தங்களுடைய வியாபாரம் குறைவு படாதா?" என்று கடாவினார்.

"இதைப்போல் பன்மடங்கு கொடுக்கவும் எனக்குச் சக்தியுண்டு" என மறுமொழி பகர்ந்தேன்.

"சரி அமிர்தா என்ன சொல்லுகின்றாளோ அதைத் தெரிந்து கொள்ளவேண்டும்" என்று கூறி,

"தங்களுடைய மரணத்திற்குப் பிறகு தங்களின் பெரும்பகுதியை அவள் அடையும்படி எழுதிவைக்க வேண்டும். மானிடசரீரந்தானே, இப்பொழுது இருப்பது போல் மனிதர் மறுநிமிஷத்தில் இருப்பதில்லை. இவ்வளவு வெளிப்படையாகக் கேட்டதற்குத் தயவுசெய்து மன்னிக்கவேண்டும். எனது குமாரியின் பிற்கால சௌகரியங்கள் தந்தையாகிய என்னால் தயாரிக்கப்பட வேண்டியன அல்லவோ?" என்று கேட்டார்.

"எல்லாவற்றையும் நான் அறிந்து கொண்டேன்" என்றுகூறிப் புன்னகைபுரிந்து, "எனக்குப்பிறகு சகல சொத்தையும் அமிர்தாவே அடைவாள்" என்று உறுதி மொழிசொன்னேன்.

அவர் சொல்லிய எல்லாவற்றிற்கும் நான் சம்மதித்தமையால் எம்முடைய விவாகத்திற்கு இரங்கையா சம்மதித்தார்.

பிறகு, "நான் இரங்கையாவென்று இவ்விடத்தில் அழைக்கப்படுவதில்லை. நான் கீலகன். கொஞ்சகாலத்திற்கு முன் செய்த வியாபாரத்தில் நஷ்டம் வந்தமையால் கடையைக் காலிசெய்து வேறு பெயருடன் இருந்து வருகிறேன். அதுமுதல் நான் கீலகன், இப்பொழுது தெரிந்துகொண்டீர்களல்லவா" என்று கேட்டார்.

"முற்றும் கண்டுகொண்டேன். நாம் எப்பொழுது கல்கத்தாவில் சந்திப்பது!" என்று கேட்டேன்.

"வருகிறமாதம் பத்தாம்தேதி. அதாவது இன்று முதல் பதினாறும்நாள் நான் வருவேன். சில நாட்கள் வெளியூர்களுக்குப் போகவேண்டும். அமிர்தா, பண்டா

ரம் அவர்களைக் கண்டால் என்னுடைய அன்பைக் கூறுங்கள். அநேகமாய் சந்திரகாசியில் நாம் சந்திப்போம்" என்று சொன்னார் இரங்கையா.

எங்களுடைய சொந்தக்காரர்களையும் அவர்களுடைய சம்பந்தங்களையும் பற்றி வெகுநேரம் பேசிக்கொண் டிருந்தோம்.

நாங்கள் அவ்விதம் பேசிக்கொண்டிருக்கையில் மூக்குக் கண்ணாடி யணிந்திருந்த ஒரு குட்டையான மனிதன் நாங்கள் உட்கார்ந்திருந்த கூடத்திற்குள் வந்து போய்க் கொண்டிருந்தான்.

அவன் இரங்கையாவைப் பார்த்துவிட்டு உடனே மறைந்துவிட்டான். எனது வேலை முடிந்த உடன் நான் கல்கத்தா வந்துசேர இரவு பத்துமணியாயிற்று. எனது வீட்டிற்குச் சமீபமாக வருகையில் அலஹாபாத்தில் கண்ட மூக்குக்கண்ணாடி மனிதன் என்னைப் பின்தொடர்ந்து வருவதைக் கண்டேன். அவன் ஹிந்துஸ்தான் தேசத்தவன்போலத் தோன்றினான்.

அந்தப் புதியமனிதன் என்னைப்பற்றி விசேஷ கவனம் செலுத்தவேண்டிய காரணம் என்ன?

சதாசிவபண்டாரம் சொல்லியதுபோல் இன்னமோர் முறை என்னைப் பிடிக்கவோ வென்று சந்தேகித்தேன். நான் என்வீட்டு மூலை திரும்பியவுடன் அவனைச் சந்தித்து பலவாறு நிந்தித்தேன்.

மறு நிமிஷத்தில் நான் செய்தது அநீதம் என்று கண்டேன்.

# பதினேழாவது அத்தியாயம்

---

## ஒரு பெரும் தத்துவ சாஸ்திரி :

என்னைப் பின் தொடருவதின் கருத்தென்ன வெனக் கோபமாக அந்த ஹிந்துஸ்தான் மனிதனை கேட்டேன். அதற்கு அவன் தலைவணங்கி "தங்களைப் பின் தொடருகிறேன் என்று நான் அறியேன். தங்களுக்கு இம்சையைக் கொடுத்திருப்பேனாயின் மிகவும் மனவருத்தம் அடைவதோடு ஆயிரம் முறை மன்னிப்பும் கேட்கிறேன்." என்று பதில் கூறினான்.

"தாங்கள் என்னைக் குறிப்பாய்க் கண்ணோக்கியதானது எனக்கு இம்சையைக் கொடுத்தது;" என்று முன் பின் பாராமல் பேசி,

"இன்று மாலை அலகாபாத்தில் என்னைப் பின் தொடர்ந்தீர்; இப்பொழுது கல்கத்தாவும் வந்துவிட்டீர்." என்றேன்.

"ஆ, ஆமாம்," என்று கையை ஆட்டிக்கொண்டு கூவி "நான் அலகாபாத்தில் இருந்தது உண்மையே; ஆயினும் இந்தச் சந்திப்பு எதிர்பாராதது என்பதுமட்டும் நிச்சயம். தாங்கள் அலகாபாத்தி லிருந்ததை நான் அறியேன்!" என்று பதிலளித்த விதத்தினின்றும் அவன் உண்மையைக் கூறினான் என்றே சொல்லவேண்டும்.

"சரி," என்று நான் ஹிந்துஸ்தானியில் பேச ஆரம்பித்து,

"தாங்கள் சொல்வது ஒரு உபயோகமற்ற கதை. நான் இராங்கையாவுடன் அலஹாபாத் பார்சிஹோட்டலில் பேசிக்கொண் டிருக்கையில் தாங்கள் வந்தீர்கள். நானும்

தங்களைக் கவனித்தேன், நீங்களும் என்னைக் கவனித்தீர்கள். ஒருகால் இரங்கையாவைக்கூடத் தமக்குத் தெரியாதென்று சொல்லுவீரோ?" என்று கேட்டேன்.

"நான் அதை மறுக்கவில்லையே," என்று புன்சிரிப்புடன் கூறி, "இரங்கையாவைப் பலவருஷங்களாக நான் அறிவேன். அவரை நான் பார்சிக ஹோட்டலில் சந்தித்ததையும் மறுக்கவில்லை," என்று தாழ்மையாகக் கூறினான்.

"ஓ, அவர் எங்கு தங்களைக் கவனித்து விடுவாரோவென்று பயந்து திரும்பி விட்டீர்களோ?" என்று உசாவினேன்.

"தங்களுடைய சூக்ஷ்ம திருஷ்டிக்கு மெச்சுகிறேன். ஆமாம் தாங்கள் சொல்லியது முற்றும் உண்மை." என்று பதிலளித்தான்.

"ஏன்?"

"எனது சொந்த விஷயம் காரணமாக;"

"ஆயின் தாங்கள் என்னைப் பின்தொடரவில்லை என்கிறீர்களா?" என்று யான் வினவியதற்குப் பதிலளிக்காமல் என்னைப் பார்த்த வண்ணமே மௌனம் சாதித்தான்.

"சரி; உண்மையை—தாங்கள் அலஹபாத்திலிருந்து என்னைப் பின்தொடர்ந்த உண்மையை—ஒப்புக் கொள்ளுங்கள்." என்றேன்.

"உண்மை இல்லாததை நான் ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும்?" என்று கேட்டு, "முன் பின் அறியாத தங்களை நான் பின் தொடருவதற்குக் காரணம் என்ன இருக்கிறது?" என்று மீண்டும் வினவினான்.

"உண்மையைக் கூறுமிடத்து இன்னும் எனக்கு சந்தேகமாகவே இருக்கிறது." என்று பின்னும் ஹிந்துஸ்

தானியிலேயே பேசி, "சின்னாட்களுக்கு முன்னர் என் உயிருக்கு ஆபத்து நேரிடப்பட்டது" என்று முடித்தேன்.

"யாரால்?" என்று சீக்கிரமாகக் கேட்டு, "நாக நாதரே, தயவு செய்து சொல்லுங்கள். இந்த விதமான விஷயங்களில் எனக்கு அக்கரை அதிகம்." என்றான்.

"ஆனால்! என்னுடைய பெயரைத் தாங்கள் அறிவீர்களோ ?" என்று ஆச்சரியத்துடன் கூவிக் கேட்டேன்.

"நன்றாக:" என்று ஒரு மொழியாகப் பதில் தந்தான்.

"என்னுடைய விஷயத்தில் தாங்கள் அக்கரை செலுத்த வேண்டிய தென் ?"

"ஏதாவது ஓர் எண்ணமிருக்கலாம்." என்று சாவதானமாகக் கூறி "தங்களை எதிர்த்தவிதம் எப்படி என்று தயவு செய்து சொல்லுங்கள்." என்று வேண்டினான். முதலில் யோசித்து பிறகு நடந்தவைகளைச் சில வாக்கியங்களில் கூறினேன்.

"ஆ, உண்மையாகவே எஜமானாகிய தங்களுடைய மனம் சந்தேகத்தி லாழ்ந்து இருக்கின்றது." என்று சொல்லி, "தங்களுடைய மனோவருத்தத்திற்கு நான் காரணனாக இருந்திருப்பின் மன்னிப்புக் கேட்கிறேன். இராங்கையாவைத் தாங்கள் எவ்வளவு காலமாக அறிவீர்கள்?" என்று கேட்டான்.

"சில மாதங்களாக;" என்று விடை கொடுத்து, "விஷயம் யாதெனில் அவருடைய குமாரியை நான் காதலிக்கிறேன்." என்றேன்.

"அவருடைய குமாரியா !" என்று ஆச்சரியத்தோடு கூவி என்னைக் கூர்ந்து கவனித்தான். பிறகு மெதுவாக

வாய்க்குள் பேசி, குட்டையாக இருந்த தன் கூர்மையான தாடியைத் தடவிக் கொண்டிருந்தான்.

"அவ்விதம் காதலிக்க வாரம்பித்த பிறகே நீங்கள் எதிர்க்கப் பட்டீர்களோ?" என்று கேட்டான்.

"இல்லை, அதற்கு முன்னரே."

அவன் சில நிமிஷம் மௌனமாக இருந்து அதிகமாக மயங்கினவனுகக் காணப்பட்டான். அவன் அவ்விதம் கலங்கியதற்குக் காரணம் யான் அறிந்து கொள்ள முடியவில்லை.

என்னைப் பற்றி அக்கரை எடுத்துக் கொள்ள வில்லை என்று சொல்லிய போதிலும், என்னுடைய பெயரைத் தெரிந்து கொண்டிருக்கிறதி லிருந்தே என் நிமித்தம் அனுவசியமாகக் கவலைப்படுகிறுன் என்று கண்டேன்.

"இதைப் பற்றித் தாங்கள் ஏன் கேட்டீர்கள்?" என்று கேட்டேன்.

"ஆ, ஒன்று மில்லை." என்று கூறி நகைத்து "அனுவசியமான சந்தேகத்தைத் தங்களுக்கு உண்டு பண்ணிவிட்டேன். போக்குவரவு சௌகரியங்கள் மிகுதியும் ஏற்பட்டுள்ள இக்காலத்தில் ஒரு மனிதனைக் காலையில் அலஹபாத்தில் காண்பதும் இரவில் கல்கத்தாவில் காண்பதும் ஆச்சரியமன்று!" என்றுன்.

"நாம் சந்தித்தது எதிர்பாராத விதமாயின் அது ஆச்சரியத்தையே கொடுக்கின்றது!" என்றேன். நான் ஏற்கனவே அமிர்தாவினுலும் எச்சரிக்கப்பட்டிருக்கிறேன். ஆகையால், அந்த மனிதன் இரங்கையாவினுடைய நேயனுகவாவது என்னைக் கொலை செய்யத் துணிந்த பாதகர்களின் கையாளாகவாவது இருக்கவேண்டு மென்று நிச்சயம் செய்தேன். அந்தப் புது மனிதன் பார்வையை நான்

விரும்பவில்லை அப்படி இருந்தும் அவன் என்னுடன் வர லாமாவென்று கேட்டதற்கு என் மனச்சாக்ஷிக்கு விரோத மாக வரும்படி சொன்னேன். அவன் என்னைப் பின் தொடர்ந்தான். நான் வசிக்கும் இடத்தை அடைந்தும் என் வீதியின் பக்கம் திரும்பாமல் நேராகச் சென்றேன்.

நாங்கள் நடந்து கொண்டிருக்கும் போது, "நாகநா தரே தாங்கள் கோவாவில் தங்கி இருக்கும்போது நாம் சந்தித்திருக்கிறோமன்றோ? ஒருகால் தாங்கள் கவனித் திருக்கமாட்டீர்கள்; அப்பொழுது தாங்கள் ஹரிஹரன் என்னும் ஓர் மலையாளியுடன் நேசமாயிருந்தீர்களல்லவா?" ஒன்று வினவினான்.

"ஹரிஹரன்!" என்று நானும் கூவினேன். ஏனெனில், அந்தப் பெயரை நினைக்குந்தோறும் மறவாத ஞாப கம் என் மனத்தைவாட்டிற்று. ஏனெனில் அவனையொரு தனவந்தனாக நினைத்து அவனையே முற்றும் நம்பிவிட் டமையால் ஆயிரம் ரூபாபோல் எனக்கு நஷ்டம் வந்தது.

"ஹரிஹரன் மிகவும் சுருசுருப்புள்ளவன்" என்று குறித்தான். என்னுடன் பேசிக்கொண்டு வந்த மனிதன் நம்பிக்கைத் துரோகியாகிய மலையாளியின் தோழனாக இருப்பானோ என்றும் சந்தேகித்து,

"ஆமாம்" என்று நான் மொழிந்தேன்.

"கண்டுபிடிக்கப்படுமளவும் யோக்கியனாகவே இருந் தானல்லவா?" என்று கேட்டு, "அவனுடைய உண்மை யான பெயர் மணியன், அவன்—" என்று ஏதோ பேசி முடிக்கு முன்,

"ஆமாம்; நான் அறிவேன். எனக்குச் செய்த நம் பிக்கைத் துரோகத்திற்காகக் கைதிசெய்யப்பட்டான்" என்று கூறி முடித்தேன்.

"அதை விடப் பன்மடங்கு அதிகமான குற்றத்திற்காகக் கைதிசெய்யப்பட்டான். அவன் இராஜத்துரோகி, அவனோர் கொலைக்குற்றத்தின் நிமித்தம் கைதிசெய்யப்பட்டிருக்கிறான் ;" என்றான் ஹிந்துஸ்தான் மனிதன்.

"கொலையா!" என்று பெருமூச்சு விட்டு," நான் அதை அறிந்தவனல்லேன்!" என்று மொழிந்தேன்.

"ஆமாம்—சிவகுமாரன் என்னும் பிரபுவின் கொலை; தாங்களும் அதன் விசாரணை சம்பந்தமாகப் பத்திரிகையில் பார்த்திருப்பீர்களே?" என்று உசாவினான்.

நான் பார்த்ததில்லை என்று சொன்னதின் பேரில், மணியன் சாதுரியமான திருடர்களுடைய கூட்டத்தைச் சேர்ந்தவ னென்றும் "இளையோரும் முதியோருமாக சுமார் முப்பது பெயர்போல் அக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் நகை திருடுவதிலும் பெட்டி உடைப்பதிலும் சூதாடுவதிலும் மஹாசூரர்கள். வருஷம் இருமுறை இவர்கள் கூட்டம் கூடுவார்கள். அப்படிக் கூடப்பட்ட பொழுது ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் விதமான வேலை நியமிக்கப்படும். ஐந்தாறு பெயர்கள் திருடர்களாக இங்கிருந்து விட்டு திருடிய பணத்துடன் பம்பாயில் போய் பெரிய மனிதர்களைப்போல் நடிப்பார்கள். அம்மாதிரியாகவே பம்பாயில் திருடி வந்த பணத்தைக் கல்கத்தாவில் வைத்துக்கொண்டு சாப்பிடுவார்கள். போலீசார் கண்டு பிடிக்க முடியாதபடி அவ்வளவு சாதுரியமான முன்னேற்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். அநேகக் கொள்ளைக்கூட்டங்களில் இதுவே முதன்மைப் பற்றியது. தங்களுடைய நண்பனாகிய மணியனைக் கைதிசெய்ததிலிருந்தும் மேற்சொல்லப்பட்ட இரகசியம் வெளியாயது" என்று கூறி முடித்தான்.

"மணியன் யாதாயினுன்?" என்று கேட்டேன்.

"அவன் தூக்குமரத்தினின்றும் தப்பித்தானெனினும், அந்தமான் தீவுக்கு ஜன்மக்கைதியாக அனுப்பப்பட்டிருக்கிறுன்" என்று பதில் மொழிந்தான்.

"நானும் அவனும் கோவாவில் சேர்ந்திருந்ததைத் தாங்கள் பார்த்திருக்கலாமே?" என்று கேட்டு,

"அவன் ஒரு கொலையாளியைப்போல் எனக்குத் தோன்றவில்லை. அவன் ஒரு சூதாடியாக இருந்தபோதிலும் புத்தி நுட்பமுடையவனுகவும், சந்தோஷமான முகத்தையுடையவனுகவும் இருந்தமையால் நான் ஏமாற்றப் பட்டேன்" என்றேன்.

"அவனும் மற்ருருவனும் சேர்ந்து சிவகுமாரனைக் கொலைசெய்து அவனுடைய பணத்தை இருவருமாக அபகரித்துக்கொண்டது சந்தேகமற ருஜூப்படுத்தப்பட்டது" என்றுகூறி, "தாங்கள் தப்பித்துக்கொண்டது தங்களுடைய நற்காலமேயாகும். அவன் கைதியாக்கப்படாமவிருந்தால் தங்களையும் கொலைசெய்திருப்பான்" என்ருன்.

"அவன்மீது சாற்றப்பட்ட குற்றம் நம்பிக்கை துரோகமென்றல்லவா?" என்று வினவி, "நான் விசாரணைக்குப் போகலா மென்றிருந்தேன். ஆனுல் வியாபார விஷயமாக நேப்பாளம் போய்விட்டேன்" என்று சொல்லி அதன் முழு உண்மையையும் அறிய அவனுடன் இருந்தேன்.

"அவனைச் சேர்ந்தமற்றவர்களைப் பிடிப்பதற்கே நம்பிக்கை துரோகம் என்று வெளிக்குச் சொல்லப்பட்டது" என்ருன்.

"தாங்கள் இவைகளை யாங்ஙனம் அறிவீர்?" என்று கேட்டேன்.

"விசாரணையன்று எல்லாம் வெளியாயது" என்று பதில் சொன்னான்.

"மாஜிஸ்திரேட் கோர்ட்டின் விஷயங்களைப் பத்திரிகையிலிருந்தும் நான் படிக்கும் வழக்கம் இல்லை" என்று நான் சொல்லியவுடன் எனது நேயனாக இருந்த ஹரிஹரன் ஒருநாள் என்னோடு வெகு நேரம் வரையில் பேசி இருந்து வெளியே சென்றதும் திரும்பி வாராமையால் நான் போய்ப் பார்க்கையில் போலீஸார்களால், நம்பிக்கை துரோகத்திற்காகக் கைதி செய்யப்பட்டுக் கடைசியாகக்கொலைக்குற்றம் சாட்டப்பட்டதும் ஒன்றன் பின் ஒன்றாக ஞாபகத்திற்கு வந்தன.

"அவனுடைய நேயராகிய தங்களையும் கைதி செய்ய வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. ஆனால் தங்களுடைய அந்தஸ்து ஹோட்டல்காரனால் தெரியவந்தமையால் அதற்குத் தப்பினீர்கள். ஆயினும் நீங்கள் ஒருவாரம் வரையில் இரகசியமாகப் பின் தொடரப்பட்டீர்கள். பிறகு தாங்கள் யார் என்று கண்டு உங்களை விட்டு விட்டனர்" என்றான்.

"நான் அதை அறியாமலிருந்தேனே!" என்று கூவி "அதைத்தாங்கள் தெரிந்து கொண்டவிதம் எப்படி?" என்று பன்முறைவேண்டியும் சிரித்துக்கொண்டு வெவ்வேறு விஷயத்தைப்பற்றிப் பேசினனே யொழிய எனது கேள்விக்குப் பதிலளித்திலன்.

அவர்கள்—திருடர்கள்—மஹா சாதுரிய சாலிகள் என்பதை நான் அந்தக்குட்டை மனிதனிடமிருந்து தெரிந்து கொண்டேன். ஸ்ரீரங்கத்தில் கொள்ளையடிக்கப் பட்டதற்கும், சிதம்பரம் திருட்டுக்கும், இரயில் நிறுத்திப் பணம் பறிக்கப்பட்டமைக்கும், அரண்மனையில் கள்வர்

புகுந்ததற்கும் அவர்களுடைய கூட்டமே காரணம் என்று ருஜுப்படுத்தப்பட்டதாகக்கூறினான்.

அக்கூட்டத்திலுள்ள ஒவ்வொருவரும் - பெண்ணுயினும் சரியே, ஆணுயினும் சரியே,—அவரவர்களுடைய அகௌரதையான தொழிலில் போதிய சாமர்த்தியம் வாய்க்கப்பெற்றவர்களாகவே இருந்தனர் என்றும், அவர்களால் சேர்க்கப்படும் தொகை பெரியதாகையால் அவரவர்களுடைய இஷ்டம்போல் கனவான் போலவும் பெருமாட்டி போலவும் அலங்கரித்துக் கொள்ளப்போதிய சாதனங்களிருந்தன என்றும் எனக்குத்தெரியும்படி விபரமாகச் சொன்னான்.

"அவர்களை யார் காட்டிக் கொடுத்தார்கள்?" என்று மிக்க ஆவலோடு கேட்டு, "யாராவது காட்டியே கொடுத்திருக்கவேண்டும்" என்று நிச்சயமாகக் கூறினேன்.

"யாரோ பெயரில்லாத கடிதத்தால் போலீசாருக்குச் சொல்லியே இருக்கிறார்கள். ஒவ்வொருவராகச் சாமர்த்தியமாய்க் கைதி செய்யப்பட்டனர். மணியனுடைய நேயன் ஒருவனால் வெளிவந்திருக்கவேண்டுமென்று நினைக்கிறேன்" என்று பதில் பகர்ந்தான்.

"அதைப்பற்றிய அநேக உண்மைகளைத் தெரிந்திருக்கின்ற தாங்கள் அவர்களைக்காட்டிக் கொடுத்தவனுடைய பெயரை அறியீர்களோ?" என்று கேட்டேன்.

"அக்கூட்டத்தவரில் ஒருவனே செய்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். ஆ! அவர்களுடைய ஒப்புயர்விலாத தந்திரத்தைமட்டும் நீங்கள் அறிவீர்களாயின்! அப்படி அவர்கள் காட்டிக்கொடுக்கப்படாம லிருந்தால் இன்னும் எவ்வளவோ அகிருத்தியங்களைச் செய்வார்கள்;

நம்முடைய பிரபுக்களில் எவ்வளவு பெயர் திருடர்களாக இரகசியத்தில் இருந்து பணம் சம்பாதித்தவர்கள்,! சம்பாதிக்கிறவர்கள், திருட்டு நகைகள் பெரிய மனிதர்களுடைய இரகசிய அறையில் எவ்வளவு கிடக்கின்றன!" என்று பேசினான்.

"தாங்கள் ஒரு பெரும் தத்துவ சாஸ்திரி" என்று கூறி "ஹரிஹரன் என்னும் மணியனைப் பற்றித் தாங்கள் இவ்வளவு விஷயங்கள் அறிந்தவிதம் எப்படி?" என்று சிரித்துக்கொண்டே வினவினேன்.

## பதினெட்டாவது அத்தியாயம்

### மற்றோர் சதியாலோசனை

நான் சந்தேகத்தின் மத்தியிலிருந்த போதிலும் அதைப்பற்றிக் கேட்க ஆவலுள்ளவனாக இருந்தேன். புதிதாக வந்த மனிதன் எவ்வளவு உண்மைகளைப் புகன்றபோதிலும், யாதுகாரணத்தினாலோ அவனும் அந்தக் கொள்ளைக்கூட்டத்தைச் சேர்ந்தவனென்றும், என்னை சரியான வழியினின்றும் தடுமாறச் செய்யவேண்டுமென்னும் நோக்கத்துடன் பேசுகிறானென்றும் எனக்குத் தோன்றிற்று. எங்களுடைய சம்பாஷணையின் மத்தியில் தனது பெயர் சங்கரதாஸ் என்று அந்தப் புதிய மனிதன் கூறினான்.

தனக்கு எவ்வளவு தெரியுமென்பதாகக் காட்டிக் கொண்டானோ அதைவிட அதிகம் தெரிந்திருப்பவன் என்பதை அவனிருந்த மாதிரியினின்றும் தெரிந்துகொண்டேன். அன்றிரவு நடுத்தெருவில் நின்றுகொண்டு, எவனுடைய செயல் எனக்கு விசித்திரமாகத் தோன்றிற்றோ, அந்த ஹரிஹரனுடைய ஆச்சரியமான செயல்களைக் கேட்டவுடன் ஒருவிதமான உணர்ச்சி என்னையறியாமலே எனக்கு உண்டாயிற்று.

"சங்கரதாஸரே! யாதுகாரணம்பற்றி என்னை நீவிர் இதுவரையில் பின் தொடர்ந்து வந்தீர்?" என்று மீண்டும் கேட்டேன்.

"வேண்டுமென்று நான் தங்களைப் பின் தொடரவில்லை என்று ஏற்கனவே சொல்லியுள்ளேனே!" என்று சிரித்துக்கொண்டே பதில் மொழிந்தான்.

"ஆயினும் நான் அதை நம்பவில்லை." என்று வெளிப் படையாகக் கூறினேன். அவன் பல விஷயங்களைப்பற்றி விரிவாகக் கூறினுனாயினும் அவன்மீது எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. உபயோகமற்ற விஷயங்களால் என்னை ஏமாற்ற எண்ணங் கொண்டிருப்பவனாகவும் காணப்பட் டான்.

"அப்படியே நான் தங்களைப் பின் தொடர்ந்திருப்பி னும், எந்த விதமான காரியத்தையும் உத்தேசித்தல்ல என்றுமட்டும் தாங்கள் நிச்சயம் செய்துகொள்ளலாம்" என்றான் சங்கரதாஸ்.

"நான் எப்படி நிச்சயம் செய்வது? தாங்கள் எனக்கு முன் பின் பரிச்சியம் இல்லாதவராயிற்றே!" என்று வின வினேன்.

"தாங்கள் சொல்வதை நான் ஒப்புக் கொள்ளுகி றேன். ஆனால் ஐயா, தாங்கள் எனக்குப் புதியவரல்லர்." என்று பதில் சொன்னான்.

"சரி, சங்கதியின் முடிவிற்கு வருவோம். நான் தங் களின் நிமித்தம் யாது செய்யவேண்டும்?" என்று கேட் டேன்.

"நான் வேண்டுவதொன்றுமில்லை. என்னை அழைத்து முதலில் பேசியது தாங்களே யன்றோ?" என்று கேட்டுப் புன்னகை புரிந்தான்.

"ஆனால் என்னைப் பின்தொடர்ந்தது தாங்கள்தானே? அதை மறுக்கமுடியாதே!" என்று கூவினேன்.

"தாங்கள் என்னைப்பற்றி எவ்விதமான அபிப்பிரா யம் வேண்டுமானாலும் கொள்ளலாம்." என்று சங்கரதாஸ் மறுமொழி கொடுத்து, "தங்களுக்குக் கொடுத்த சிரமத்

திற்காக நான் பன்முறையும் மன்னிப்புக் கேட்கிறேன்." என்று தெலுங்கில் பேசினான்.

பிரதி தினமும் தெலுங்கே பேசும் தெலுங்கு தேசத்தவனும் தோற்கும்படியாகச் சங்கரதாஸ் பேசினான். ஆனால் நாகரீகமான பட்டணங்களில், ஒருவர் பேசும் பாஷையினின்று அவர் இன்ன வகுப்பைச் சேர்ந்தவ ரென்று சொல்லுதல் இயலாத காரியம். ஹரிஹரன் மலையாளியாக இருந்தும் வடஇந்தியாவி லுள்ள சகலபாஷைகளையும் குற்றமின்றிப் பேசுவான் என்பது நினைவிற்கு வந்த பொழுது எவரையுமே நம்புவதற்கு முடியாதவனாயினேன்.

எனது இரகசிய விரோதிகள் என்னைத் தந்திரமாக எதிர்ப்பார்கள் என்று ஏற்கனவே எச்சரிக்கப்பட்டிருக்கிறேனாகையால் சங்கரதாஸனும் அவர்களில் ஒருவனோவென்று சங்கித்தேன். நான் அவனைச் சந்தேகத்துடன் பார்க்கிறேன் என்று சங்கரதாஸ் கண்டுகொண்டும் என் மீது கோபம் கொள்ளாமல் முதலி லிருந்ததைவிட அதிகமான சந்தோஷ சித்தனாகக் காணப்பட்டான்.

கொஞ்சதூரம் சென்றவுடன், "ஐயா, சங்கரரே, தங்களுடன் கூடி இருக்கவாவது, தோழமை பாராட்டவாவது எனக்கு இஷ்டமில்லை" என்று சொல்லி, "நான் சொல்லுவதைத் தெரிந்துகொண்டீரா?" என்று கேட்டேன்.

"ஆ! நாகநாதரே, ஆயிரம் முறை மன்னிப்புக் கேட்கிறேன்" என்று கூவி எழுந்து, "நான் உண்மையே கூறினேன். நான் பதில் பகர்ந்தவை யனைத்திற்கும் தங்களுடைய கேள்வியே காரணமல்லவா? எனது நேயராகிய இரங்கையாவினுடைய புத்திரியைத் தாங்கள் காதலிக்

கின்றதாகக் கூறியமையால் தங்கள் மீது ஒருவிதமான விஸ்வாசம் எனக்கு உண்டாயிற்று" என்றான்.

"ஏன்?" என்று நான் வினவியதற்கு,

"ஏனென்றால் என் தோழனுடைய குமாரியை விஸ்வாசிப்பவனாகையால்" என்று சிரித்துக்கொண்டு பதில் பகர்ந்தான்.

"இஃதோர் விதமான பரிஹாஸமா?" என்று கோபக் குறியுடன் கேட்டேன்.

"அவ்விதம் நினைக்கலாகாது" என்று உத்தரம் கூறி "எப்பொழுதுமே அப்பெண்ணை என் சொந்த மகளைப் போல் விஸ்வாசிப்பேன்" என்றான்.

"அப்படியானால் தாங்கள் அந்தப் பெண்ணை அறிவீர்களோ?"

"நன்றாக."

"எப்படி?"

"சரி அவளுடைய தகப்பனார், எனது ஆயுளினின் விசித்திரமான ஒரு விஷயத்தில் சம்மந்தப்பட்டவராக இருந்தார்" என்று விடைகொடுத்து, "இன்னுங்கூட அந்த விசித்திரமான விஷயம் வெளிவரவில்லை. அதை வியக்தமாக்க வேண்டுமென்று எவ்வளவோ தடவைகளில் முயன்றும் பயன்படவில்லை" என்றான் சங்கரதாஸ்.

"அந்த விஷயத்தில் அமிர்தா எப்படி சம்மந்தப்பட்டிருந்தாள். என்பதை நான் அறியலாமோ?" என்று கேட்டேன்.

"உண்மையைக் கூறு மிடத்து நான் அறியேன்" என்று பதில் புகன்று, "அந்த விஷயம் மனிதர்களால்

உரைக்கமுடியாத அவ்வளவு அசம்பாவிதமாக இருந்தது" என்று முடித்தான் சங்கரதாஸ்.

"தெரியச்சொல்லுங்கள்—நான் அறியும்படி சொல்லுங்கள்?" என்று கேட்டு, என் அன்பிற்குறியவளாகிய அமிர்தாவைப்பற்றிய விஷயம் அவனுக்கு எவ்வளவு தெரியுமோவென்று சந்தேகித்தேன்.

"தாங்கள் தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டும். அந்த விஷயம் என்ெருருவனைப் பொருத்ததாகவும், அதிக இரகசியமாகவும் இருக்கிறது. எப்படி அமிர்தாவுடன் தங்களுடைய நேயம் தங்கள் ஒருவரையே பொருத்ததோ அதேபோல் அந்த விஷயம் என் ஒருவனுக்கே சொந்தமானது" என்ருன்.

"நடந்திருக்கிற சங்கதியைக் கூர்ந்து கவனிக்கும் இடத்து தங்கள் ஒருவரையின்றி இன்னும் சிலருக்கு அதில் பங்குண்டென்றும் பெறப்படுகின்றது" என்று நான் சொன்னேன்.

"ஆ! தாங்கள் அந்தப் பெண்ணைக் காதலிப்பதை அறிந்தே தங்களுடைய எதிரிகள் தங்களை எதிர்த்திருக்கிருர்கள்போலும்!" என்ருன்.

"அந்தப்பெண்!" என்ன விசித்திரம் இராம்பாவின் பக்கத்தே இருந்தகாட்டில் இராங்கையாவை இரவில் சந்தித்த மோட்டார் வண்டிக்காரர்கள் அமிர்தாவை "அந்தப் பெண்" என்று குறித்தனர். அப்படியே கூறினர் ஜயனும் நந்தனனும்! சங்கரதாஸும் "அந்தப்பெண்" என்று கூறியதினுல் அவனும் என்னைப்போல் அவஸ்தைகளை அனுபவித்தவனே அல்லது அந்தக் கொள்ளைக்கூட்டத்தில் சம்மந்தப் பட்டவனே என்னும் சந்தேகம் என்னைப் பற்றிக்கொண்டது.

"நான் அமிர்தாவைக் காதலித்ததுதான், நான் எதிர்க்கப்பட்டதற்குக் காரணம் என்று எப்படி அறிந்தீர்கள் ?" என்று கேட்டேன்.

"அப்படி இருக்கலாமோவென்று நினைத்தேன்."

"அப்படி யொன்றுமில்லை. நான் அறிந்தவரையில் எனக்கு விரோதி என்பவனே கிடையாது."

"அம்மாதைக்காதலிக்கும் மற்றொருவன் இரகசியத்தில் தங்களுக்கு எதிரியாக வேலை செய்கிறான்" என்றான் சங்கரதாஸ்.

"அதுதான் தங்களுடைய அபிப்பிராயமோ?" என்று வினவினேன்.

"ஆமாம் என்று சொல்லி வருந்துகின்றேன். நாகநாதரே தாங்கள் அதிக ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது. நான்—அன்னியனாகிய நான்—சொல்வதைக் குறித்துக் கொள்ளுங்கள் ; இல்லையேல் தங்களுக்கு சம்பவிப்பது துர்ப்பாக்கியம்" என்று கூறினான் சங்கரதாஸ்.

அங்கும் நான் எச்சரிக்கப்பட்டமையால் என்னுடைய நிலைமை மிக்க பயங்கரமாக இருந்ததை உணர்ந்து சோர்வுற்றேன்.

"தாங்கள் இதை எதிர்பார்க்கிறீர்கள் போலும்?" என்று அவனைக் கேட்டேன்.

"இஃது சாதாரணமாக ஊகித்ததல்ல" என்று கூறிச் சற்று யோசித்து, "நான் உண்மையை அறியும்படி நேர்ந்தது" என்று மறுமொழி தந்தான். அவன் சொன்ன கடைசி வாக்கியத்திலிருந்தும் அவன்—சங்கரதாஸ்—கொள்ளைக்கூட்டத்தாரும் கொலையாளிகளுமாகிய ஜயன் முதலானவர்களோடு சேர்ந்தவன் என்னும் முடிவிற்கு வந்

தேன். என்னைத் தப்பானவழியில் திருப்ப எண்ணங் கொண்டே அவ்விதம் எச்சரித்தான் என்று எண்ணி னேன். அவனையும் விட ஜாக்கிரதையுடன் நான் இருந்த மையால் அவனைப்பார்த்து என்னுள் சிரித்துக் கொண் டேன்.

"சரி," என்று சொல்லி "நான் எவரைச் சந்தித்த போதிலும் எனக்கு நேரப்போகும் கெடுதியைப்பற்றியே எச்சரிக்கின்றமையால் இப்பேர்ப்பட்ட எச்சரிப்பால் என் மனம் சலித்துப்போய்விட்டது. ஏன் என்பதை என்னால் அறியமுடியவில்லை" என்று கூறி முடித்தேன்.

"காரணத்தை எவரும் வெளியிட வில்லையா ?" என்று கேட்டான்.

"இல்லை" என்றுமறுமொழி தந்தேன்.

"ஆ! வரப்போகும் பயத்தை நீவிர் தெரிந்துகொள்ள முடியாது. எப்பேர்ப்பட்ட புத்திமதியையும் கவனியாமல் இருப்பது தங்களுக்கு சுபாவமாகிவிட்டது. நான் தங்களு டைய ஸ்தானத்தில் இருப்பேனாயின் நண்பரே, தங்களைப் போலிரேன்" என்று இரக்கத்துடன் கூறினான்.

"சரி" என்று கூவி, "உண்மையாகவே தங்களுக்கு யாது தெரியவரும்? இன்னும் சிலேடையாகப் பேசாதே யுங்கள். வெளிப்படையாகவும், வியக்தமாகவும் தயவு செய்து கூறுங்கள்" என்று கேட்டேன்.

தங்க மூக்குக் கண்ணாடியுள் பிரகாசித்த கண்ணொளி யினின்றும் என்னை இரகசியத்தில் ஆழ்த்துவது அவனுக் குச் சந்தோஷத்தைக் கொடுத்தது என்று கண்டேன் ஆனால் அவன் பதில் பகர்ந்திலன்.

"நிச்சயமாக நீங்கள் மறுமொழி கூறலாம்; இவைகள் யாவற்றிற்கும் காரணம் யாது?" என்று கோபத்தோடு

கூவி "நான் என்னசெய்தேன் விபரமாகச் சொல்லுங்கள்?" என்று கேட்டேன்.

"மன்னிக்கவேண்டும் நான் விவரிக்க முடியாது; அமிர்தாவைக்கேட்டால் எல்லாம் சொல்லுவாள். அவளுக்கு யாவும் தெரியவரும்" என்றான் சங்கரதாஸ்.

"யாவுமா?" என்று கூவி, "பின் அவள் ஏன் என்னண்டையில் உண்மையைக் கூறவில்லை?" என்று வினவினேன்.

"அநேகமாய்—அவள் பயப்படுகிறாள்."

அந்த ஆச்சரியமான புதியமனிதன் என்னைத் தப்பிதமான வழியில் நடத்துவதற்கே அவைகளைச் சொன்னான் என்று சந்தேகித்தேன்.

அநேகம் வண்டிகள் அங்குமிங்கும் போகத்தலைப்பட்டன. அவைகள் நாடகசாலைக்குச் சென்றிருந்த கனவான்களுடன் செல்லுகின்றன என்று அறிந்து, "என்னபாழும் நாகரீகம்! இரவைப்பகலாக எண்ணிச் சீட்டாடுவதும், கள்குடித்துக் கூத்தாடுவதும், நாடகசாலை போய்ப் பார்த்து வருவதுமாகக் கழிக்கின்றனர். சோம்பலின்றியும் ஊக்கத்துடனும் வேலை செய்ய வேண்டிய பகலையோ இரவாகப் பாவித்து நித்திரை செய்வதில் கழிக்கின்றனர்" என்று என்னுள் நினைத்து மனம் நொந்தேன்.

எனது வீட்டிற்குத் திரும்பும் சந்து வந்தும் சங்கரதாஸ் என்னை விட்டகன்றானில்லை, சங்கரதாஸ் காளிகட்டத்துக் கொலையாளிகளாகிய ஜயன் நந்தனன் அவர்களுடைய துணைவனாக இருக்கவேண்டுமென்றும், அவனுடன் வலுவில் ஏன் பேசினோமென்றும் வருந்தினேன்.

நான் நிற்கவே சங்கரதாஸும் நின்று சட்டைப்பையினின்றும் சுருட்டு டப்பியொன்றை எடுத்து எனக்கோர் சுருட்டு கொடுத்தான். ஆனால் நான் அதைப்பெறவில்லை.

"ஆ!" என்று நகைத்து "தாங்கள் என்மீதுகோபித்துக் கொண்டிருக்கிறீர் என்று தெரிந்து கொண்டேன். நாக நாதரே தங்களுக்கு இயற்கையாக உண்டான ஆச்சரியத்தைத் திருப்திகரிக்கும்படியாய் நான் பேசவில்லை என்று நினைக்கிறீர்கள். அவ்விதம் பேசுவது என்னுடைய சொந்த விஷயத்திற்கு விரோதமாக இருக்குமென்றுதான் அஞ்சுகின்றேன். அதுபற்றியே நான் மௌனம் சாதிக்கவேண்டுவதாகிறது; நான் தங்களைப்பற்றிய மட்டில் யோக்கியமாக நடந்து கொள்ளவில்லையா?" என்று கேட்டான்.

அவன் அவ்விதம் பேசியது என்னுடைய சந்தேகத்தை அதிகரிப்பதாயது. என்னை அவன் பின்தொடர்ந்தது எக்காரணம் பற்றியாயினும், முக்கியமான விஷயம் என்பது மட்டும் தெற்றென விளங்கிற்று. ஹரிஹரனுடைய செய்கை அவனுக்கு நன்கு தெரியுமென்பதை அவனே ஒப்புக்கொண்டான்.

"தாங்கள் என்னிடத்தில் யோக்கியமாக நடந்து கொள்ளவில்லை;" என்று சொல்லி "அதனாலேயே தங்களைப் பின்னும் நம்புவதற்கு இஷ்டமில்லாதவனாக இருக்கிறேன்" என்று முடித்தேன்.

"தங்கள் இஷ்டம். நான் சொன்னவைகளை—தங்களுக்கு வரும் கேட்டை—நிதரிசனமாகக் காணும்பொழுது என்னை நம்புவீர்கள். அது மட்டும் நிச்சயம்" என்று சொலலி மெதுவாக நகைத்தான்.

சங்கரதாஸ் தனதுகைகடியாரத்தை எடுத்துப்பார்த்து—"நாகநாதரே,—" என்று ஏதோ சொன்னவுடனே வெகு வேகமாகவந்த வண்டியொன்று எம்மெதிரில் வந்து நின்றது; அந்தவண்டியைக் கண்டவுடன், "ஆ, நான் முற்றும் மறந்தேன். நான் ஒருவரைச் சந்திக்கவேண்டும். நாக

நாதரே வந்தனம் செய்கிறேன். ஒருகால் நாம் மறுமுறை சந்திக்கவும் ஹேதுவுண்டு" என்று எனக்கு வந்தனமளித்து வந்துநின்ற வண்டியின் கதவைத்திறந்து கொண்டு உள்ளே சென்றான். அதனுள் ஒருமனிதன் ஏற்கனவே இருந்தான். அவன், "ஐயா குறித்தநேரத்திற்கு வரமுடியாமற் போனது பற்றி மன்னிக்கவேண்டும்" என்று சொல்லிய வுடன் என்னைப்பார்த்தான். பார்த்ததும் நான் அவனைக் கவனியாமல் இருக்கும் படி இருட்டில் நகர்ந்துக்கொண் டான்.

அந்த முகத்தைக்கண்டதும் நான் மாறியமனிதனுயி னேன். பயத்தால் நடுங்கிக் கீழேவிழாதவண்ணம் பக் கத்தே இருந்த ஓர் விளக்குக் கம்பத்தில் சாய்ந்துகொண் டேன்.

நான் ஆயிரம் வருஷங்கள் உயிருடன் இருந்தபோதி லும் அந்த முகத்தை மறக்கமுடியாது—அப்பொழுது மட் டும் வண்டி என் கண்ணின்றும் மறைந்து போகாமலிருந் தால் அதனுள் இருந்த நந்தனனை உடனே பிடித்து போலீ ஸாரிடம் ஒப்புவித்திருப்பேன்.

சங்கரதாஸ் அவர்களுடைய தோழன் என்பது நிச் சயமாயதோடு, மற்றோர் சதியாலோசனை எனக்கு விரோத மாக நடக்கின்றதென்றும் தெரியவந்தது.

## பத்தொன்பதாவது அத்தியாயம்

### இவைகள் சம்பவிக்கும் காரியங்களே யல்ல

புரட்டாசி மாதத்தின் மத்தி! பகலெல்லாம் சூரியகிரணத்தாலும் இரவெல்லாம் மழையினாலும் எளியோர் அநேகர் வருந்தும்படியான புரட்டாசி மாதத்தின் மத்தி!

என்னுடைய மனத்தே தோன்றிய பயம் பயன்படவில்லை. நான் மாறுபட்ட மனிதனாயினேன். ஏனெனில் அமிர்தா—என்னுடைய அன்பையும் காதலையும் கவர்ந்த அமிர்தா, எனது மனைவியாகி மூன்று வாரங்கள் கழிந்தன.

ஆஹா! கொழுநன் மனைவியர் சந்தித்து ஏகாந்தத்தில் தழுவி விளையாடும் ஆனந்தம்! நீலோத்பல மலர்கள் சந்திரனைக் கண்டு அடையும் பரமாநந்தம்! வெகு நாட்கள் தவம் செய்து இறைவன் திருவடிகளைக் காணும் யோகியின் பேராநந்தம்! அநேக வருஷங்கள் கடுங்காவலி லிருந்து வெளிச்சத்தையே பாராத கைதி விடுபட்டவன் சூரிய சந்திர நக்ஷத்திரக் கூட்டங்கள், சாலை சோலை குளம், காடு மலை வனம் இன்னும் சமுத்திரம் இவைபோன்ற இயற்கை விநோதங்களாகிய பலவற்றையும் கண்ணாரக் கண்டு அவன் அடையும் நேத்திரா நந்தம்! இந்த ஆநந்தங்கள் யாவும் நாங்கள் அடைந்த ஆநந்தத்திற்கு ஈடாகா.

தன் பெண்ணுடைய க்ஷேமத்தைக் கோரிய இரங்கையா என்னை மிகவும் பக்ஷத்தோடு நடத்தினார். அமிர்தாவுடன் இரங்கையாவையும் என்னுடைய வீட்டிற்கு அழைத்துப் போயினேன். என் பழைய வண்டி முதலானவைகளை விற்றுவிட்டு வேறு புதியவண்டி குதிரை முதலியன வாங்கினேன். எனது வேலையாளன் அப்பையா சகல வேலைகளையும் தானே பார்த்து வரலாயினன்.

எந்த வீட்டை நான் இலக்ஷியம் செய்யாமலிருந்தேனோ அதே வீட்டில் என் அமிர்தா வந்து குடியேறியவுடன் அஃது சொர்க்கலோகம் போலாயிற்று.

நாங்கள்—நானும் என் மனைவியாகிய அமிர்தாவும்—உடலினால் இரண்டாகக் காணப்பட்டோமே யொழிய உயிரினால் ஒன்றாகவே இருந்தோம். எங்களுடைய காதலும் கலியாணமும் எம்மை அவ்விதம் செய்தன.

கலியாணம் ஒன்று அவ்வளவு தூரம் செய்யக்கூடியதாவென்று சிலர் நினைக்கலாம். ஆஹா! எவ்வளவு மந்திரங்கள்! எவ்வளவு தேவதைகள் சாக்ஷி! ஒரு பெண்ணை, முன் பின் அறியாத ஒரு பெண்ணைக், கலியாணம் செய்யுமுன் அவளை நாம் பாவிக்கும்விதமும் மந்திர பூர்வமாக விவாகம் செய்தபிறகு கருதும் மாதிரியும் மாறுபட்டே இருக்கின்றது. எவ்வளவு கொடியவளாக இருந்தபோதிலும் தான் "மனைவி" என்றும் தனது கணவனுக்குக் கீழ்ப்பட்டவள் என்றும் மனத்தினால் உணர்ந்துகொள்ளாமல் இராள். அவ்வார்த்தைகளினிடத்தே அப்பேர்ப்பட்ட—ஸ்திரீ ஸமத்துவத்தை நிலைநாட்ட முயலும் பெண் ஸ்வதந்திரவாதியும் மரியாதை செய்யும்படியான அப்பேர்ப்பட்ட வசீகர சக்தி ஒன்று இருக்கின்றது. பெண் ஸ்வதந்தரவாதிகள் தங்களுடைய தாழ்மையான நிலைமையையும், தங்களைப் பிணைத்துக் கொண்டிருக்கும் கட்டுப்பாடுகளையும், கலியாணம் தங்களை அடிமையாக்கிவிடுவதையும், பற்றி எவ்வளவுதான் பேசிய போதிலும் தாம் "மனைவி" என்று சொல்லக்கூடிய பதம் ஞாபகத்திற்கு வந்தவுடன் மனம் இளகாமல் இருக்கவில்லை.

கலியாணம்! மனைவி கொழுநன்!! இப்பதங்களெல்லாம் தேவதாசானித்தியம் பெற்றவைகளாகவே இருக்கின்றன. கலியாணம் செய்வதென்றால் மனிதர்களாக நிச்

சயம் செய்து விடுவதாக நினைத்தல் கூடாது. கலியாணம் நாம் நினைத்தபடியா முடிவுபெறுகின்றது? மணமகன் மணமகள் இருவருடைய சம்மதத்தையும் பெற்ற பெற்றோர் நிச்சயம் செய்த விவாகங்கள் தடைபட்டுப்போய் பெண் வேறொருவனையும் பிள்ளை மற்றொரு பெண்ணையும் விவாகம் செய்துகொண்ட சமயத்தை எவ்வளவு முறை கண்டிருக்கிறோம்! போஜனத்திற்கு வழியில்லாதவன் கலியாண வீட்டில் வயிறுநிறைய உண்டுவரலாமென்று விவாக வீட்டை யடைய அவனே மணமகனான சமயங்கள் எவ்வளவு! ஒரு வாலிபன் படித்தவளும் அழகுள்ளவளுமான பெண்ணையே மணப்பதென்ற நிச்சயத்துடன் இருக்க அவனுக்கு மனைவியாக வருபவள் நிரக்ஷரகுக்ஷியாயும், குரூபியாயும் இருப்பதை நாம் கண்டதில்லையா? அழகும் பணமும் செல்வாக்குமுடைய கணவனுக்காகத் தவம் செய்யும் கன்னியர்கள் நித்திய தரித்திரனுக்கு வாழ்க்கைப்படுவது நவீனமல்லவே? இவைகளைக் கண்டிருந்தும் கலியாணத்தை சாதாரணமாக நினைப்பது எவ்வளவு அறியாமை! மேற்சொன்னவைகளினின்றும் விவாகம் தெய்வ சம்மதமென்பதை யாரே மறுக்கமுடியும்!

நாமாகிய இந்துக்கள் மட்டுமே விவாகத்தைத் தெய்வீகம் பொருந்திய தென்கிறோம். மற்ற வகுப்பினர் அதையோர் ஒப்பந்தம்போல—வீடு வாசல்களை வாங்கி விற்கும் ஒப்பந்தம் போல—வேண்டுமானால் வைத்துக் கொள்ளுகிறதும்—வேண்டாவிடில் ரத்து செய்கிறதுமாக இருப்பதை யாரே அறியாதவர்.

புதிதாக அனுபவிப்பவனாகையாலோ அல்லது வெகு கஷ்டப்பட்டு கிடைத்த பொருளானதாலோ நான் எனது மனைக் கிழத்தியாகிய அமிர்தாவைக் காதலித்ததுபோல்

மற்றவர் தத்தம் மனையாட்டிகளைக் காதலித்திருப்பார்களோ வென்று சந்தேகித்தேன்.

காலையும் மாலையும் காப்பி டீ குடித்து கடற்கரையில் அலைவதாகிய நாகரீகத்தை நானாவது எனது காதலியாவது விரும்பவில்லை. நான் என் வியாபார சம்பந்தமாக வேலை செய்யும் சமயங்களைத் தவிர மற்ற நேரங்களில் அமிர்தாவுடன் வேடிக்கையாகப் பேசிக்கொண் டிருப்பேன். நல்ல படிப்பாளியாகிய பெண்ணுடன் சந்தோஷமாகப் பேசிக்கொண் டிருப்பதைவிட மேலான சுகம் வேறில்லை என்னும் கொள்கையுடையவனாகிய நான் அவ்விதம் காலம் கழித்தது வியக்கற்பாலதன்று. நாங்கள் இருவரும் சேர்ந்து உலாவப் போகுமிடம் பல மலர்ச்செடிகள் பயிர் செய்யப்பட்டிருக்கும் எங்களுடைய மேன்மாடியே யாகும்.

ஒருநாள் சாயங்காலம் நாங்களிருவரும், உத்தியான வனம் போன்ற எமது மாடியின்மீது உட்கார்ந்திருக்கையில் அமிர்தா என்னுடைய வதனத்தைக் கையால்பற்றி ஒரு முத்த மளித்து, "பிராணநாதா, என்னை மணந்ததைப் பற்றி இனி ஒருபொழுதும் கவலைப்படமாட்டீர்களே?" என்று வினவினாள்.

"என் பிரியே, ஒருபொழுதும் அப்படி நினையேன். என்ன காரணத்தினால் நீ இவ்விதம் கேட்கின்றாய்?" என்று கேட்டேன்.

"ஆனால்—ஆனால், எப்படியாவது—"

"எப்படியாவது என்ன?"

"சரி," என்று சொல்லி கடல்போன்ற கரிய கண்களால் ஆகாயத்தைப் பார்த்த வண்ணமாக—

"ஏதோ கெடுதி நேரிடும் என்று பயங்கொள்ளுகிறேன். காரணம் மட்டும் விளங்கவில்லை" என்று கூவினாள்.

"கண்மணீ!" என்றழைத்து, "உபயோகமற்ற விஷயத்தை யெண்ணி ஏன் கவலைகொள்ளுகிருய்? நம்முடைய பரஸ்பரகாதலில் சந்தோஷத்தையே அடைந்திருக்கின்றேம். அப்படி இருக்கும்பொழுது ஏன் இன்னல்களை எதிர்பார்க்க வேண்டும். அப்படியே அவைகள் சம்பவிக்குமாயினும் நாமிருவருமாக அவைகளை எதிர்ப்போம்" என்று தைரியங் கூறினேன்.

"ஆமாம், பிராணகாந்தா" என்று கூவி, "நேற்றே இம்மாதிரியான எண்ணம் உதித்து இப்பேர்ப்பட்ட பரமானந்தத்தைக் கெடுக்க ஏதேனும் குறுக்கிடும் என்று தோன்றியது" என்று பதிலளித்தாள் அமிர்தா.

"நாம் ஒருவரை யொருவர் நம்புவதோடு பரஸ்பரம் காதலிப்பதாலும், நம்மிருவருடைய மனதும் ஒன்று பட்டுப் போயிருக்கின்றமையாலும் நம்முடைய சந்தோஷத்தைக் கெடுக்கக் கூடியசக்தி வேறு எதற்கும் கிடையாது" என்று கூறி,

"இங்கு சின்ஞட்கழித்து நமது சொந்த கிராமத்திற்குச் சென்று விடலாம்" என்று முடித்தேன்.

"தாங்கள் வேட்டையாடுவதில் பிரியங்கொண்டவர்கள் அதற்கு அவ்விடம் அதிக சௌகரியமாக இருக்கும்" என்று புன்னகையுடன் கூறி, "தங்களுடைய தோழராகிய கோவிந்தராமபண்டிதரை நம்முடன் சின்ஞட்கள் கழிக்கும்படி சொல்லுகிறது தானே?" என்று கேட்டாள்.

"அவன் இப்பொழுது புனவில் வியாபாரவிஷயத்தில் இருக்கின்றமையால் அவனை வரவழைக்க முடியாது" என்று நான் சொல்லியவுடன் முகம் சந்தோஷமாகக் காணப்பட்டது.

அமிர்தா, அவனைப் பார்க்க மனமில்லாதவள் என்பதை அவன் வரமுடியாதென்று கூறியவுடன் அவளுடைய முகம் மாறு பட்டதிலிருந்தும் நான் அறிந்து கொண்டேனாயினும் மறு நிமிஷத்தில் அவ்வெண்ணத்தைக் காதல் என்னும் வாளால் அறிந்தேன்.

சிறிது நேரம் இருவரும் மௌனம் சாதித்தோம்.

"நான் அதைத் தவிர வேறெதற்கும் அஞ்சவில்லை" என்றாள் அமிர்தா.

"எதைத்தவிர ?"

"சதியாலோசனை—அஃது எந்தவிதமாக இருக்குமோ அறியேன். ஆனால் ஒருமாதிரியான பயம்மட்டும் என்னைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றது" என்றாள் அமிர்தா.

"இந்த எண்ணத்தை ஒழிக்கப்பார். நீ எதற்கும் பயங்கொள்ள வேண்டிய அவசியமில்லை. நமக்கு விரோதி இருக்கலாம்; ஆயினும் நம்மை எதிர்க்கத் துணியமாட்டான். நான் உன்னுடைய கணவனல்லவா ?"

"நானும் தங்களுடைய பத்தினியல்லவா ?" என்று இனிமையான மொழியால் நவின்று, "என் ஆருயிர்க் காதலரே, தங்களின் நிமித்தமே நான் கவலைப்படுகிறேன்" என்று மீண்டுங் கூறினாள்.

"அமிர்தா நீ இவ்விதம் பயப்படுவதற்குக் காரணம் இப்பொழுது புதிதாக ஏதேனும் தோன்றிற்றா ?" என்று வினவினேன்.

"அப்படிப் புதிதாக ஒன்றுமில்லை. காரணம் கூறவும் ஒன்றும் விசேஷமாக இல்லை" என்றாள்.

"எல்லாவற்றையும் மறந்துவிடு." என்று வற்புறுத்தி "உன்னுடைய பயம் காரணமில்லாததாக இருக்கிறது;

நாமோ விவாகம் செய்துகொண்ட சதிபதிகளா யிருக்கின் றமையால் எதற்கும் பயங்கொள்ள வேண்டாம்." என் றேன்.

"நாதா, தாங்கள் சமீபத்தில் இருக்கும் வரையில் எனக்குப் பயம் என்பதேது? பிரிந்திருந்தால் மட்டும் பய மாக இருக்கிறது. இரண்டு தினங்களுக்கு முன்பு இரவு நேரஞ்சென்று தாங்கள் வீட்டிற்கு வருவதற்கு முன் நான் மிகுந்த கவலையுடன் கூடியிருந்தேன்" என்றாள் அமிர்தா.

"ஆகா, அப்படியா?" என்று புன்னகையுடன் பேசி, "நான் மிகுந்த பயங்காளி என்று நினைக்கின்றாயா?" என்று கேட்டேன்.

"நான் தங்களைப் பங்காளி என்று அறிவேன்." என்று சாதுரியமாகப் பேசினாள்.

பிறகு வேறெதையோ பற்றிப் பேசிக்கொண்டு வரு கையில் முன்னர் சங்கரதாஸைச் சந்தித்ததையும் அவனு டைய அங்க அடையாளங்களையும் சொல்லியவுடன்,

"நான் அவனை அறிவேன்! அவனுடைய அங்க அடை யாளங்கள் சரி; அவன்-அவன் அலஹபாத்தில் எனது தந் தையைச் சந்தித்ததாகக் கூறுகிறீர்கள்! நந்தனனுடன் வண்டியேறிச் சென்றதாகவும் சொல்லுகிறீர்கள்! பிரா ணேசா, இவைகள் சம்பவிக்கும் காரியங்களே யல்ல, தாங் கள் கனவு கண்டிருக்கலாம்" என்று ஸ்திரமாகக் கூறினாள் அமிர்தா.

"நான் உன்னிடம் சொன்னவிதமே நடந்ததை என் கண்ணால் கண்டேன்" என்று விடை கொடுத்தேன்.

"அவன் நந்தனனோடு சவாரிசெய்ததோடு எனது தந் தையை அறிவதாகவா சொன்னான்?"

"ஆமாம்" என்று நான் சொல்லியவுடன்

அவளுடைய வதனம் கருத்தது. அமிர்தா பெரு மூச்சுவிடத் தொடங்கினுள். பயத்தால் பீடிக்கப்பட்டவள் போலக்காணப்பட்டாள். நான் சொன்ன விஷயம் அவளை அந்த நிலைக்குக் கொண்டு வந்துவிட்டதென்று நினைத் தேன். அதன் பொருளொன்றும் எனக்கு விளங்கவில்லை; அதாவது மேலும் மேலும் இரகசியம் விருத்தி பெறறதே யொழிய வெளியாகவில்லை.

## இருபதாவது அத்தியாயம்

---

### என் உயிரைமட்டும் காப்பாற்றுங்கள்.

தாயுமானவராலும் அடைய முடியாத மனோ சமாதானத்தை யடைந்ததோடு மறுநாள் என்பதைப்பற்றிய கவலை இன்றி ஒருமனப்பட்டு வாழ்ந்தோம். எவருடைய நிலைமையைப் பற்றியும் நான் பொருமை கொண்டிலேன்.

சிற்சில சமயங்களில் என்மனத்தே உதித்த அமிர்தாவைப் பற்றிய—கெட்ட எண்ணங்களை ஒழித்தேன். ஏனெனில், அவள் ஜீவித்திருந்தது என் ஒருவன் நிமித்தமே என்றதைக்கண்டிருந்தேன்.

எவ்வளவு இரகசியமான விஷயங்களில் சம்மந்தப்பட்டவளாக அவள் இருந்தபோதிலும், அவள் மீது கொண்ட காதல் காரணமாக முழுமனத்துடன் அவளை நான் நேசித்தேன்.

நான் காதலைப்பற்றி இவ்வளவு வெளிப்படையாக எழுதியதிலிருந்தும் என்னைமூடன் என்றுநினைப்பீர்களேயானால், காதல் அப்பேர்ப்பட்டவர்களுடைய மனத்தே தோன்றியதில்லை என்ற ஒருமறுமொழியே போதுமானது. அப்படி நீவிர் யாராவது, ஒரு புமான் எவ்வளவு அன்பு செலுத்த முடியுமோ, அவ்வளவு அன்பை ஒரு கன்னியா இரத்தினத்தின்மீது செலுத்திய அனுபவம் பெற்றிருப்பீர்களாயின் நான் அமிர்தாவை,—பல இரகசியங்களும், துக்கங்களும் சூழ்ந்து கொண்டிருக்கும் அமிர்தாவை—ஏன் காதலித்து மணந்து கொண்டேன் என்பதை நான் சொல்லாமலே அறிவீர்கள்,

இந்த அனுபவம் வெகு சிலருக்கே தெரியும். ஏனெனில் நம்மவருள் "கலியாணம் செய்துவிட்டோமே என்று காதலிக்கிறோமே யொழிய, காதலிக்கிறோ மென்று கலியாணம் செய்வதில்லை" என்பது சர்வ சாதாரணமாக இருக்கிறது.

என்னுடைய மாமனாராகிய இரங்கையா எங்களுடன் வந்து சேர்ந்து கொண்டார். பகல் போஜனம் செய்து நடுக்கூடத்தில் நானும் இரங்கையாவும் பேசிக்கொண்டிருக்கையில் அமிர்தாவும் வந்தாள். சிறிதுநேரம் பலவிஷயங்களைப் பற்றி சம்பாஷித்தபிறகு அமிர்தா "நான் தங்களுக்கு ஆறுகடிதங்கள் எழுதி இருந்தும் பதில் கொடுக்காத காரணம் என்ன?" என்று இரங்கையாவைக்கேட்டாள்.

"உனது கடிதங்களை நான் அடைந்திலேனே!" என்று மறுமொழிதந்து,

"குழந்தாய்! நீ அவைகளை எங்கு அனுப்பினாய்?" என்று வினவினார்.

"இரண்டை அலஹாபாத்துக்கும், மற்றவைகளை பஞ்சாப்புக்கும் அனுப்பிவைத்தேன்" என்றாள் அமிர்தா.

"ஓ! நான் ஒரு வாரமாக நேப்பாளம் போயிருந்தேன் என்று" பதில் பகர்ந்தார் இரங்கையா.

அவர்கள் அவ்விதம் பேசிக்கொண்டிருந்த போதிலும் என்னுடைய எண்ணம் அந்த வார்த்தையில் நாடவில்லை. பிறகு எம்மிருவரையும் விட்டு விட்டு உள்ளே சென்றாள் அமிர்தா.

"ஐயா, சங்கரதாஸ் என்னும் ஹிந்துஸ்தானி மனிதன் ஒருவனைத் தாங்கள் அறிவீர்களோ?" என்று கேட்டு

“அவன் தங்கமூக்குக்கண்ணுடி போட்டுக்கொண்டிருப்பான்” என்றும் குறித்தேன்.

“சங்கரதாஸா?” என்று கூவிய இரங்கையா,

“அப்பெயரை நான் கேள்விப்பட்டதில்லையே!” என்ருர்.

“அவனை நான் அலஹாபாத் பார்ஸீஹோட்டலில் சந்தித்தேன். அவன் தங்களையும் அமிர்தாவையும் தெரியும் என்று சொன்னுன்” என்றேன்.

“அலஹாபாத் பார்ஸீ ஹோட்டலில்!” என்று கூவி, “நான் அங்கிருக்கையில் அவன் அங்கிருந்தானு?” என்று கேட்டார்.

“ஆமாம்.” என்று விடைகொடுத்து, “அப்பொழுது அவன் கறுப்புச் சட்டை போட்டிருந்ததோடு, கையின் விரலில் பெரிய நீலக்கல் மோதிரத்தையும் அணிந்திருந்தான்” என்று பின்னும் கூறினேன்.

இரங்கையா, உதட்டைக் கடித்துக்கொண்டு, “ஆ! தாங்கள் சொல்லுகிறமனிதனைத் தெரிந்துகொண்டேன்!” என்றுகூவி, “சற்று குட்டையாக இருப்பதோடு, கண்சிறியதாக இருக்கும், தெலுங்கு நன்ருகப் பேசுவான். இடக்கை சுண்டுவிரலில் நீலக்கல்மோதிரம் அணிந்திருப்பான்” என்று ஆச்சரியத்தோடு கூறினுர்.

“அவனேதான்.”

“அவனைத் தாங்கள் சங்கரதாஸ் என்று அழைக்கின்றீர்கள்?”

“ஆமாம்; அவனுடைய உண்மைப் பெயரென்ன?”

“யார் அறிவார்? அவன் அனேக விதமான மாறு

பெயர்களைவைத்துக்கொள்ளுகிறதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்று விடையளித்தார் எனது மாமனார்.

"ஆனால் தாங்கள் அவனை அறிவீர்களோ?" என்று கேட்டேன்.

"தெரியும்—ஆனால் அவ்வளவு நன்றாகத் தெரியவராது" என்று பதில்கூறி, "என்னைப்பற்றித் தங்களிடம் ஏதேனும் வினவினானோ?" என்று உசாவினார்.

"தங்களை அலஹாபாத்தில் கண்டதாக மட்டும் கூறினான்."

"கடைசி முறையாகத் தாங்கள் அவனை எங்கு கண்டீர்கள்?" என்று கடாவினார்;

"அன்றையத்தினம் இங்குசந்தித்தேன். அதன்பிறகு இருமுறை கடைவீதியில் கண்டிருக்கிறேன்." என்றேன்.

"அவன் தங்களைக் கவனித்தானோ?"

"கவனித்ததாகவே தோன்றிற்று;" என்று கூறி,

"ஆயின் தங்களுக்கும் அவனுக்கும் அதிக அன்னியோன்னிய நேசம் இல்லையோ?" என்று கேட்டேன்.

"ஆமாம், தங்களுடைய ஸ்தானத்தில் நான்இருப்பேனாயின், பெருவியாதியைக்கண்டு நடுங்குவதுபோல் அவனை விட்டு விலகி இருப்பேன். அன்னியோன்னிய நேயம் பாராட்ட அவன் தக்கவனல்லன்; தெரிந்துகொண்டீர்களா?" என்று கேட்டார்.

"அவனுடன் பேசியமட்டில் அவன் ஒரு மாதிரியான மனிதன் என்னும் சித்தாந்தத்திற்கு வந்தேன்" என்றேன்.

"நானும் அவ்விதமே நினைத்திருக்கிறேன். கூடியமட்டில் அவன் சந்திப்பையும் தவிர்க்கிறேன்" என்று சொன்னார்.

பிறகு பேச்சு வேறு விதமாக மாறியது. "உங்கள் இருவருடைய சந்தோஷமட்டும் இப்போதுபோல் எப்பொழுதும் இருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். விவாக மாகியவுடன் சந்தோஷத்தி லாழ்ந்திருக்கும் சதி பதிகள் தங்களுக்கு நேரப்போகும் சுகத்தையாவது துக்கத்தையாவது பொருட்படுத்தார்" என்றார் இரங்கையா.

"எப்பேர்ப்பட்ட துக்கமும் எமக்கு நேராது" என்றேன்.

"அப்படி நேரும் என்று நான் நினைக்கவில்லை அமிர்தாவின் பொருட்டு" என்று கூறினன்.

"அமிர்தாவின் பொருட்டு யாது?" என்று மெல்லிய குரலில் கேட்டுக்கொண்டே யாரோ உட்பிரவேசித்ததை நாங்கள் திரும்பிப் பார்க்க அமிர்தாவாக இருந்தது. எனக்கு உள்ளே வேலை இல்லாமையால் இங்கு வந்தேன்" என்று மீண்டும் அமிர்தா கூறினாள்.

இரண்டு நிமிஷங்கழிந்தவுடன் "பிராணநாதா, அதோ நின்று கொண்டிருக்கிற கறுத்த மனிதனைத் தாங்கள் அறிவீர்களோ? இன்றையத்தினம் பன்முறை அவனைப்பார்த்துவிட்டேன். நம்மை அவன் கவனிப்பதாகத் தோன்றுகின்றது" என்று அமிர்தா பயத்துடன் கூறினாள்.

"உங்களைக் கவனித்துக் கொண்டா இருக்கிறான்?" என்று ஆச்சரியத்துடன் இரங்கையா வினவினார். அங்கிருந்த பலகணியின் சந்து வழியாக நான் கவனித்தேன். எங்கள் வீட்டின் எதிரில் ஓர் யுவகன் புகை பிடித்துக் கொண்டு யாரையோ எதிர்பார்த்த வண்ணமிருந்தான். அவன் யார் என்பதை அறிய முடியாதவனாக இருந்தமையால், "நீ அவனை எங்கேயாவது கண்டிருக்கின்றாயா?" என்று அமிர்தாவைக் கேட்டேன்.

"இன்று இரண்டு மூன்றுமுறை நம்முடைய வீட்டு வழியாகச் சென்றதையும், அப்படிச் சென்ற ஒவ்வோர் சமயத்திலும் நமது வீட்டின் எதிரில் நின்று மெல்ல மெல்லப் போகிறவனுகப் பாசாங்கு செய்ததையும் நான் கண்டேன்" என்ருள் அமிர்தா.

"நம்மைக் கவனித்துக்கொண்டல்லவா நிற்கின்ருன் போலிருக்கின்றது!" என்று கூறி, "நீ இதை முன்னமே ஏன் சொல்லவில்லை?" என்று அமிர்தாவைக் கேட்டேன்.

"தங்களுக்கு மனவருத்தத்தைக் கொடுக்க இஷ்டமில்லாமலே தெரிவிக்க வில்லை" என்று தாழ்மையாகப் பதில் பகர்ந்தாள்.

"அமிர்தா இதற்குமுன் எப்பொழுதாவது இவனைக் கண்டிருக்கின்ருயா?" என்று உசாவினுர் இரங்கையா.

"இன்றையத்தினம் வரையில் நான் அவனைக் கண்டதில்லை," என்று விடைகொடுத்து, "இஃதென்ன, மிகவும் விசித்திரமானதாக இருக்கிறதே!" என்ருள் அமிர்தா.

"ஆமாம்" என்று நான் சேர்ந்து கூறினேன். நாங்கள் மூவரும் அவ்விதம் பேசிக்கொண்டிருந்து தெருவில் நின்ற மனிதனையும் கவனித்திருக்கையில் ஓர் உயரமான மனிதன் வந்து அவனுடன் ஏதோ பேசிவிட்டுப் போயினுன். சிறிது நேரத்தில் ஒரு நொண்டி அவனுடன்—எங்களைக் கவனித்துக்கொண்டிருந்தவனுடன்—வந்து சைகை காட்டி நகர்ந்தான்.

கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த இரங்கையா, "இந்த நொண்டிதான் இவ்வேலையில் பிரதானபுருஷனுகக் காணப்படுகிருன்" என்று சொல்லி, "நாகநாதரே, ஏதோ சதியாலோசனைமட்டும் நடந்துகொண்டிருக்கிறது" என்று எச்சரிக்கும் பாவனையாகப் பேசினுர்.

என்ன சம்பவிக்குமோ வென்று பயந்து, "அவர்கள் நம்மை ஏன் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள் என்று ஆச்சரியப்படுகிறேன்" என்று ஆச்சரியத்தோடும்வினவினேன்.

தந்தையும் மகளும் விநோதமாகப் பரஸ்பரம் பார்த்துக்கொண்டனர். அவர்களுடைய திருஷ்டியிலிருந்தே பயங்கரமான உண்மை வெளிவரும் சமயத்தை அறிந்து கொண்டு விட்டார்கள் என்று கண்டேன். ஆயினும் நான் வாய்திறக்கவில்லை.

"அமிர்தா கூறுவது சரியாக இருக்கும் பக்ஷத்தில் இவ்விதம் நாம் கவனிக்கப்படுவது அவ்வளவு நல்ல சமாசாரம் இல்லை" எனக்குறித்தார் இரங்கையா.

"நான் கூறியதில் யாதும் தப்பிதமில்லை. இன்று காலை முதல் இதைப்பற்றி யோசித்துக்கொண்டிருந்தேனாயினும் என் பிராணநாதருக்கு அநாவசியமான மனவருத்தத்தை உண்டாக்கக் கூடாதென்ற எண்ணத்துடன் இருந்தேன்" என்று அமிர்தா சொன்ன மாதிரியில் இருந்தே அவள் உண்மையைக் கூறினாள் என்பதைக் கண்டுகொண்டேன்.

அதே சமயத்தில் கதவை மெதுவாக யாரோ தட்டுவதுபோ லிருந்தது. நாங்கள் கதவைத்திறக்க, எங்களுடைய வேலையாளன் பிரவேசித்து, "சங்கரதாஸ் என்பவர் நாகநாத பண்டிதரைப் பார்க்க விரும்புகிறார்" என்று கூறிச்சென்றான்.

"அமிர்தா, நீதான் என்னைக் காப்பாற்றவேண்டும்!" என்று கூவிய இரங்கையாவின் முகம் வெளுத்தது; "அவன் அறியக்கூடாது. நாகநாதரே, தங்களுடைய மனைவியின் பெருமையை நிலைநாட்ட வேண்டியாவது என் உயிரை மட்டும் காப்பாற்றுங்கள்! எல்லாவற்றையும் பிறகு நன்கு விளக்குகின்றேன்" என்று கெஞ்சிக்கேட்டார்.

# இருபத்தோராவது அத்தியாயம்

## என்னைப் பின்னும் பின்னும் மயங்குமாறு செய்தன

இரங்கையா திடீரென்று பயங்கொண்டதானது என்னைச் சந்தேகத்திலும் பயத்திலும் ஆழ்த்தியது. அவர் சட்டென்று எழுந்து கொல்லைப்புறமாக ஓடினார். நாங்கள் கண்மூடி கண்திறப்பதற்குள் வந்து சேர்ந்தான் சங்கரதாஸ்.

"ஆ!" என்று கூவி, நாகநாத "பண்டிதரா!" என்று ஆச்சரியத்துடன் என்னைப்பார்த்தான்.

அவனுடைய கூர்மையான கண்திருஷ்டியால் அக்கூட்டத்தை ஒரு முறை வலம்வந்து, "இரங்கையா அவர்கள் இங்கிருந்தாரே; எங்கு காணும்? நான் அவருடன் பேசுவதற்கே இங்கு வந்தேன்" என்றான்.

"இரங்கையா இங்கு இருந்தார்: ஆனால் இப்பொழுதே வெளியில் சென்றார்" என்று பதில் அளித்தேன்.

அதி சீக்கிரமே வெளியேசென்ற சங்கரதாஸ் மறுபடியும் உள்ளே வந்தான். மறுமுறை உள்ளே வருகையில் முகம் மாறுபட்டிருந்தது.

"அம்மா அவர் எங்கே?" என்று அமிர்தாவிடம் அவசரமாகக் கேட்டான்.

"அவர் எங்கே என்பது எனக்குத் தெரியவராது. சற்று முன்பாகவே பக்கத்து அறைக்குச் சென்றனர்" என்று பயந்து பதில் தந்தாள் அமிர்தா.

"அப்படியே ஓடிவிட்டாப்போ லிருக்கிறது! அவர் அவ்விதம் செய்வாரென்று நான் நிச்சயித்தே நோக

வந்தேன். நான் அவருடன் வியாபார விஷயம் பேச வேண்டும்" என்றான் சங்கரதாஸ்.

"வியாபார விஷயம் பேசுவதற்கு அவர் தயாராக இருக்கவில்லை" என்று மொழிந்தாள் அமிர்தா. அதன் பிறகே சங்கரதாஸ், கொலைப்பாதகனாகிய நந்தனனுடைய தோழன் என்பது என் ஞாபகத்திற்கு வந்தது. அஃதொன்று பற்றியே என்னுடைய பகைமை விருத்திபெற்றது. இரங்கையா அவனைச் சந்திக்காமல் சென்றமைக்கும் நான் சந்தோஷம் அடைந்தேன்.

"அவர் அவசியம் பேசத் தயாராக இருப்பார்!" என்று கூவி, "விஷயம் அதி முக்கியமானது" என்று குறித்த சங்கரதாஸ் கொல்லைப்புறம் எழுந்தோடினான்.

இதன் தாத்பரியம் என்ன? என்று ஸ்தம்பித்து நின்ற அமிர்தாவைக் கேட்டேன்.

"பிராணநாதா, நான் அறியேன்" என்று கூறிப் பெருமூச்சு விட்டாள். உடனே பலகணி யண்டையில் சென்று பார்த்த அமிர்தா,

"நம்மை இதுவரையில் கவனித்துக்கொண் டிருந்த மனிதன் போய்விட்டான்" என்றாள்.

"அவன் உனது தந்தையைத்தான் கவனித்துக் கொண் டிருந்தான்" என்றேன்.

"அவன், நம்மை—உங்களையும் என்னையும் கவனித்தானே யொழிய அவரையல்ல" என்றாள். அந்த சமயத்தில் நாங்கள் உட்கார்ந்திருந்த கூடத்தின் தென்னண்டைப் புறத்திலிருந்த சிறிய சந்து வழியாக இருவர் ஓடுகிற சப்தம் கேட்டது.

பிறகு "இதோபார், அவர் இந்த வழியாகத்தான்

சென்றிருக்கவேண்டும்" என்று ஒருவன் ஹிந்துஸ்தானியில் சொல்ல, மற்றவன், "ஆமாம், இந்தவழியாகத்தான் தப்பித்துக்கொண்டு போயிருக்க வேண்டும். நாமும் பின்தொடருவோம்" என்று ஹிந்துஸ்தானிலேயே சேர்ந்து கூறினன்.

"அவர்கள் பேசுவதைக் கவனித்தால் சங்கரதாஸ் உனது தகப்பனுரைப் பின்தொடருகிறுன் என்று தோன்றுகின்றது" என்று அமிர்தாவிடம் சொன்னேன்.

"அவன் அவருடைய ஜன்மத் துவேஷி. அன்றையத் தினம் அவன் எனது தந்தையை அலஹாபாத்தில் மறைந்திருந்து கவனிக்கவில்லையா?" என்று கண்ணைக் கசக்கிக் கொண்டே கேட்டாள் அமிர்தா. அவன் நந்தனனுடன் சேர்ந்தவன் என்பது ஞாபகத்திற்கு வந்தவுடன் நான் பயங்கொண்டேன். நான் சந்தோஷமாகக் காலம் கழிக்கும்போது அதைக் கெடுத்தானே என்று கோபம் மூண்டவனுனேன். இதைப்போலவேயே முன்னும் என்னைப் பின்தொடர்ந்து எனக்கு அனுவசியமான மனேசஞ்சலத்தை உண்டுபண்ணியதும் என் ஞாபகத்தை விட்டகலவில்லை.

"அவன் யார்?" என்று அமிர்தாவைக் கேட்டேன்.

"அவனுடைய உண்மையான பெயர் இராமப்பிரஸாத்" என்று பதிலளித்தாள்.

"அவன் உன்னை அறிவான் என்று கூறினனே?" என்று கேட்டேன்.

"ஒருகால் என்னைத் தெரிந்திருத்தலும் கூடும்" என்று பதில் சொல்லி, "அவன் எனது தந்தையின் பகைவன் என்பதை மட்டும் நான் அறிவேன். இவரைப் பிடித்துக் காட்டிக்கொடுக்க வேண்டுமென்று இங்கு வந்

திருக்கிறான்" எனக்கூறி முடித்தாள் என் காதலியாகிய அமிர்தா.

"யார் என்று காட்டிக்கொடுப்பது?" என்று நான் வினவியதற்குப் பதில் பகராமல் வாளா விருந்தாள்.

சற்று சப்தம் கேட்டதே யொழிய பிறகு எவரையும் காணவில்லை. என் காதலைக்கவர்ந்த கண்மணியாகிய அமிர்தாவினிடத்தில் அவளுடைய தந்தையாரின் இரகசியங்களைப்பற்றிக் கேட்க இஷ்டமில்லாதவனாக இருந்தேன். எனது மாமனாராகிய இரங்கையா நந்தனன் ஜயன் முதலியவர்களுடன் சேர்ந்தவராக இருப்பாரோ என்ற சந்தேகம் வெகு நாட்களாகவே உண்டு; ஆனால் அந்தச் சந்தேகம் நீங்கி அப்படி யிராதென்பது நிச்சயமாயது. சங்கரதாஸ் என்றும் இராமப்பிரஸாத் என்றும் பல நாமதேயங்களுடைய கள்வன் அவர்களுக்கு (நந்தனன், ஜயன்) நண்பனாக இருக்கிறான் என்பதும் ஞாபகத்திற்கு வந்தது.

"நல்லவேளை எனது தந்தை அவருடைய விரோதிகளின் கைகளினின்றும் தப்பினாரே! விரோதிகள் அவரைக் கண்டிருந்தால் சுட்டுக் கொன்றுவிட்டு, வேண்டுமென்று செய்யவில்லை என்றும் சாதித்து விடுவார்கள்" என்றாள் அமிர்தா.

"ஆ, அஃதெப்படி முடியும்?" என்று கேட்டு, "அது கொலையேயாகும்" என்றேன்.

"ஆமாம், உண்மையே. ஆனால் அவர்கள் கொண்டதை நிறைவேற்றும் கொள்கையுடையவர்கள். கொலை செய்தும் தப்பித்துக்கொள்ளப் போதிய சாமர்த்தியம் வாய்ந்தவர்கள். அதுபற்றியே நான் அவர்களைக் கண்டு அவ்வளவு தூரம் பயங்கொண்டேன். ஆனால் இறைவன்

அருளால் அவர் தப்பிப் பிழைத்தார்" என்று அமைதியுடன் அவள் கூறினுள்.

அதைக் கூறி முடித்தவுடன் வெளுத்திருந்த அவளுடைய கபோலங்களில் இரத்தத்தின் நிறம் தோன்ற வாரம்பித்தது. முகத்தில் பழைய தேஜஸ்—என்னைத் தேசசஞ்சாரத்தினின்றும் தடுத்து அவளுக்கு அடிமை யாகும்படி செய்ததேஜஸ்—சிறிது சிறிதாகத் தோன்றத் தலைப்பட்டது.

"திடீரென்று வெளிச்சென்ற உனது தந்தையாரின் சாதுரியமே சாதுர்யம். இன்னும் ஒரு நிமிஷம் இங்கிருந்திருப்பாராயின் அவருடைய விரோதிகளின் கைகளில் அகப்பட்டே இருப்பார்" என்று அமிர்தாவிடம் கூறினேன்.

"அவனுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் உண்மை அறிந்து கொண்டார் போலும்" என்று பதில் பேசினுள்.

"நம்முடைய அமைதியும் சந்தோஷமுமான சந்தர்ப்பம் இவ்விதம் ஆயிற்றே என்று தான் வருந்துகிறேன்" என்றுசொல்லி அவளுடைய வதனத்தில் முத்தமளித்து, "நான் வெளியேபோய் அது சம்மந்தமாக யாதுகூடுமோ அதை விசாரித்து வருகிறேன்" என்று கூறி வெளியே சென்றேன்.

எனக்கு அந்தசம்பவம் அச்சத்தையும் ஆச்சரியத்தையும் அளித்தது. எங்களுக்கு வந்த பயம் இரங்கையாவுக்கும் வந்து யாது தீங்கை விளைக்குமோ என்ற அச்சமும் இரங்கையாவுக்கும் இராமப்பிரஸாதுக்கும் உள்ள விரோதம் யாதாக இருக்கும் என்ற ஆச்சரியமும் என்னைப் பின்னும் பின்னும் மயங்குமாறு செய்தன.

# இருபத்திரண்டாவது அத்தியாயம்

## என்னைக் கற்சிலையாக்கியது

நான் வெகுநேரம் வெளியில் சுற்றி வந்தேனாயினும் எனது மாமனாராகிய இரங்கையாவைப் பற்றி யாதும் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. கல்கத்தாபோன்ற பெரிய பட்டணங்களில் ஒருவீட்டினுள் குடி இருக்கும் குடிகளுக்கு மற்ற குடிகளைப் பற்றிய விஷயமே தெரியவாராது. அதாவது அவரவர் தத்தம் தொழிலிலேயே கண்ணாக இருப்பார்கள்.

வெகுநேரம் வரையில் தன்னுடைய தகப்பனாருக்காக அமிர்தா காத்திருந்தும் அவர் வந்திலர்.

அன்றையத்தினம் பகல் பதினோருமணிக்கு நான் வெளியேபோய் வீட்டிற்குள் பிரவேசிக்கையில் சங்கரதாஸ் என்னும் இராமப்பிரஸாத் என்னுடைய வீட்டினின்றும் வெளியே சென்றான். செல்லுகையில் நிமிர்ந்து என்னைப் பார்த்து வந்தனம் செய்தேகினான்.

யாதுகாரணம் பற்றி வந்தான் என்று கேட்பதற்குத் திரும்புமுன் ஒரு துவிசக்கர வண்டியேறி வெகுதூரம் போய்விட்டான். அவனுடைய முகவசீகரமும், அவன் பேசும் விதமும், அவனுக்கு நல்லவனுடைய தோற்றத்தைக் கொடுத்த போதிலும், அவன் நந்தனனுடைய தோழன் என்பது ஞாபகத்திற்கு வரும்பொழுதெல்லாம் அவனைப் பகைத்தேன்.

அவன் வந்ததைப்பற்றி அமிர்தாவை யொன்றும் கேட்காமல் அன்றைப் பொழுதைப் போக்கினேன். அன்றையத்தினம் என் காதலி சந்தோஷ பரிதையாகவே காணப்பட்டாள்.

மறுநாள் அமிர்தா, "தந்தையார் நல்லவேளை தப்பித்துக் கொண்டார். அவர் அவ்விதம் ஓடி யிராவிடில் அவர் இறப்பதுமட்டும் உண்மை" என்று சந்தோஷக் குறிப்புடன் கூறினாள்.

"நீ சொல்வதென்ன ? அவர்கள் உனது தந்தையைக் கொல்லவா ஏற்பாடு செய்திருந்தனர்?" என்று ஆச்சரியத்தோடு வினவினேன்.

"ஆமாம். அவர்களுக்குப் பயமென்பதே கிடையாது. என்தந்தை உயிருடன் இருக்கும்வரையில் பயமேயொழிய அதற்குமேல் கிடையாது" என்று விடை தந்தாள்.

"ஆனால் சட்டம் அவர்களைத் தண்டிக்காதுவிடுமோ?" என்று கேட்டேன்.

"இல்லை சட்டம் அவர்களைத்தண்டியாது. அப்போர்ப்பட்ட சமயம்வந்தால் சாதுர்யத்தினால் தப்பிவிடுவார்கள்" என்று பதில் சொன்னாள்.

"உனது தந்தையார் அவர்கள் கையினின்றும் தப்பியது நல்ல காலமென்றே சொல்லல் வேண்டும். அவரிடமிருந்து கடிதத்தை இன்று எதிர்பார்க்கின்றாயோ ?" என்று உசாவினேன்.

"ஆமாம்; ஒருகால் இன்றிரவு தந்தி வரவும் ஹேதுவிருக்கிறது" என்று மறுமொழி கொடுத்து, "இன்றைத் தினம் இரவு பத்து மணிக்குமேல் நான் தனிமையாக வெளியே சென்று வரவேண்டும் என்பதைக் கேட்டால் தாங்கள் ஆச்சரியம் அடைவீர்களோ?" என்று வினவினாள்.

"கண்மணீ ! நீ யாதொரு உதவியும் இன்றி தனியே இரவில் வெளியே செல்லுவதை நினைக்கும்பொழுது நான் பயப்படுகிறேன்" என்றேன்.

"என்னைப்பற்றித் தாங்கள் எள்ளளவும் பயங்கொள்ள

வேண்டிய அவசியமில்லை. நான் பத்திரமாக வந்து சேரு வேன. அவர்கள் இப்பொழுது ஒரு தீங்கும் செய்ய எத் தனப் படமாட்டார்கள் என்ற நம்பிக்கை எனக்கிருக்கின் றது. நான்—நான் ஒரு மணிநேரம்போல் தனியாகப் போகவேண்டும்" என்று உறுதியாகக் கூறினள்.

"ஓ! உன்னுடைய இஷ்டம் இதுவேயானல் நான் யாங்ஙனம் மறுப்பேன்?" என்று கேட்டேன்.

"ஆ!" என்று கூவி, பொற்கொடிபோன்ற அவளு டையகைகளால் என்னை இருகத்தழுவிக்கொண்டு, "பிராண நாதா, நான் கேட்பதைத் தாங்கள் மறுக்க மாட்டீர்கள் என்று அறிவேன். பத்துமணிக்குப்போய் சீக்கிரம்திரும்பி விடுகின்றேன்" என்று கூறி, எனக்கு முத்தமளித்தாள்.

"சரி, போய்வா," என்று உத்தரவு கொடுத்தேன். அவள் கேட்டுக்கொண்ட விஷயம் என்னைச் சந்தேகத்தில் ஆழ்த்தி மயக்கியபோதிலும் நான் அவள் இச்சைப்படி நடந்தது எனக்கே ஆச்சரியமாக இருக்கின்றது.

ஒரு நன்மையான விஷயத்தையோ தீமையான விஷ யத்தையோ பெண்பிள்ளைகள் சாதிக்க முற்படுவார்களா யின் சாதித்தே விடுவார்கள். நான்கு உபாயங்களாகிய சாம, தான, பேத தண்டங்களில் பின் இரண்டை விலக்கி முன் இரண்டாகிய சாமத்திஞலும், தானத்திஞலுமே வெற்றிபெறுகின்றுர்கள். எப்பேர்ப்பட்ட திடமனத்தின னுடைய மனமும் கலங்கும்படி அழுவதும், கொஞ்சுவதும் அவர்களுக்கு இறைவனுல் அளிக்கப்பட்ட பலமான ஒப் புயர்விலா இரண்டு ஆயுதங்களாகும்.

இப்பேர்ப்பட்ட ஆயுதபாணியாகிய அமிர்தா அவளு ளுடைய வலையில் என்னைச் சிக்கவைத்து உத்திரவைப் பெற்றது ஆச்சரியமன்று.

அன்று இரவு ஒன்பது மணிவரையில் யாதொரு தந்தியும் வராமையால், "அவர் அதிக புத்திசாலி, எனக்கு வெளிப்படையாக எழுதப் பயப்படுகிருர்போலும்" என்ருள் அமிர்தா.

இரவு பத்துமணி சுமாருக்கு என் அறையில் அமிர்தா வந்து, "கண்ணுளா, நான் வெகுநேரம் தாமதிப்பேன் என்று நினைக்கவேண்டாம். வெகு சீக்கிரமாக நான் வந்து சேருவதோடு, பத்திரமாகவும் நான் வருவேன். சந்தேகப் படவேண்டாம்" என்று தைரிய மொழிகூறி என்னைக் கட்டிக்கொண்டு பின்னுமோர்முறை முத்தமளித்தனள்.

நான் சந்தேகப்படாதவன் போலப் பாவனைசெய்து கொண்டேனுயினும் நந்தனனுடைய சூழ்ச்சிகளை நினைக்கும்பொழுது என்னுடைய சந்தேகம் பதினுயிரம் மடங்கு விருத்தி பெற்றது.

சிறிது நேரம் அவளை நான் ஆலிங்கனம்செய்து கொண்டிருந்து விடைகொடுத்தேன். அவள் வெளியே சென்று ஒரு குதிரைவண்டியில் ஏறி ஹேஸ்டிங்ஸ் தெருவிற்கு விடும்படி கூறினுள்.

நான் அவளைப் பின்தொடருவதாவென்று நினைக்க நான் உண்மையாயும், முழுமனத்தோடும் காதலிக்கும் மனைவியைப்பற்றி அவ்விதம் சந்தேகங்கொள்ளுதல் தவறெனவே தோன்றிற்று. நான் நினைக்கும் எண்ணத்தை அவள் அறிவாளாயின் யாது நினைப்பாளோ வென்று யோசித்தேன்.

அவள் ஓர் இரகசியமும் பயங்காமுமான விஷயத்தில் சம்பந்தப்பட்டிருப்பதை என்னிடமே ஒப்புக்கொண் டிருக்கிருளானபடியால் நான் பின்தொடருவதே சரி என்னும் முடிவிற்குவந்து, அவளை எந்தவிதமான தீங்கினின்றும்

காப்பாற்றுவதின் நிமித்தம் வெளியே சென்றேன். ஹேஸ்டிங்ஸ் தெருவிற்கு என்னைக் கொண்டுபோய் விடும்படி ஒரு வண்டியேறிச் சென்றேன். சிட்டாப்பூர் வீதியினின்றும் ஹேஸ்டிங்ஸ் தெருவிற்குத் திரும்பும் சந்தியில் நான் வண்டியை விட்டிறங்கி வண்டிக்காரனுக்குப் பணம்கொடுத்தனுப்பிவிட்டு கோடீஸ்வரர்களான வியாபாரிகளுடைய வீடுகளால் அலங்காரம் செய்யப்பட்டிருந்த தெருவில் தனியே நடந்து செல்லும்பொழுது கீழக்கோடியில் ஒரு வண்டி நிற்பதைக் கண்டேன். அதைக் கவனித்த வண்ணமாக விளக்கு நிழலில் மறைந்து மறைந்து சென்றேன்.

பிறர் அறியாமலிருக்கும் படியான இடத்தில் நான் நின்றுகொண்டு அந்த வண்டியைக் கவனிக்கும் பொழுது அதில் எவரும் இல்லை என்றும், யாருக்காகவோ அஃது காத்துக்கொண் டிருக்கின்றதென்றும் உணர்ந்தேன். அது ஒன்றே அந்தத்தெருவில் நின்றமையால் அதுவே அமிர்தா ஏறிவந்த வண்டியாகும் என்று நிச்சயம்செய்து கவனித்துக்கொண்டிருக்கையில் ஓர் அழகிய பெண்ணுருவம் கீழ்ப்புறத்தினின்றும் வருவதைக் கண்டேன். அவ்விதம் வந்த அமிர்தா அந்தத் தெருவில், வெகுகாலமாய் குடியில்லாதிருந்த ஓர் வீட்டின் முன்கதவை யணுகினாள். தன்னுடைய மடியிலிருந்த ஒரு தீக்குச்சியை எடுத்துக் கிழித்துப் பார்த்தாள். அதன்பொருள் யாதென்று எனக்கு நன்கு விளங்கவில்லை. ஆனால் நான் கூர்ந்து கவனித்ததில் அவள் வீட்டுக்கதவைத் திறப்பதற்குப் பதிலாக அதன் பக்கத்திலுள்ள சுவரைப்பார்த்தாள் என்பதை யறிந்தேன். அத்தீக்குச்சி எரிந்தவுடன் கீழே எரிந்துவிட்டு வண்டியிற்வந்து ஏறிக்கொண்டாள். வண்டி உடனே வெகு வேகமாய்ப் புறப்பட்டு அதிசீக்கிரமே என்னுடைய திருஷ்டியினின்றும் மறைந்தது.

நானும் அந்த வீட்டின் சுவரைப் பரீக்ஷிப்பதின் நிமித்தம் ஒரு நெருப்புக் குச்சியைக் கிழித்துப் பார்த்தேன்.

அந்தச் சுவரில் கறுப்புக் காகிதப் பென்சலினல்' இரண்டு அர்த்த சந்திராகிருதியான அடையாளங்களும் அவைகளின் மேலும் கீழும் இரண்டு குறிகளும் இடப்பட்டிருந்தன. அந்தக்குறிகள் சந்தேகக்குறிகள் என்றும், அவைகளின் தாத்பரியத்தை அமிர்தா அறிந்துகொண்டே சென்றிருக்க வேண்டும் என்றும், அவை அவளுடைய தகப்பனரிட மிருந்துவந்த இரகசியக்கடித மாகுமென்றும் நிச்சயித்தேன்.

போலீஸ் சேவகர்கள் என்னை எங்கு கண்டுபிடிக்க வருவார்களோ வென்ற பயத்துடன் கவனித்துப் பார்க்கையில் வேறு இரண்டு அடையாளங்கள் தென்பட்டன. அவைகள் எல்லாவற்றையும் பன்முறை கவனித்தேன். ஆயினும் அவைகளின் பொருள் இன்னதென்று யான் உணர்ந்திலேன்.

ஆனல் அச்சுவர் இரகசியமாக ஒளிந்து திறியும் மனிதர்கள் வந்து எழுதிப்போகும் இடமென்றும், முதலில் கண்டதுதான் அமிர்தாவின் தந்தையார் எழுதியது என்றும், மற்றவைகளை அவள் பார்க்கவில்லை யாகையால் வேறு யாராவது எழுதி யிருக்கவேண்டு மென்றும் நிச்சயம் செய்துகொண்டேன். அந்த வீடு ஒரு பெரிய வீடேயாயினும் கோர்ட்டில் அதைப்பற்றி நடந்துவந்த வியாச்சியம் காரணமாக எவரும் அதில் வசிக்கவில்லை.

வந்த வழியே சென்று என் வீட்டை யடைந்தேன். நான் வீட்டிற்கு வந்துவிட்டபிறகும் அமிர்தா வரவில்லை என்று கண்டேன். ஒருமணியாகியும் வந்திலள். அந்த அடையாளங்களைப் பார்த்துவிட்டு எங்கு சென்றிருப்

பாளோ வென்று பன்முறை யோசித்தும் ஒருவிதமான சித்தாந்தத்திற்கு வந்தேனல்லேன்.

"வெகுநேரம் தங்களைத் தனியே விட்டுச் சென்றதற்கு மன்னிக்கவேண்டும் பிராணநாத. சீக்கிரம் திரும்புவது இயலாத காரியமாயது" என்று எனது அறைக்கு வருகையில் அமிர்தா கூறிக்கொண்டு பிரவேசித்தாள்.

"எல்லாரும் சௌக்கியந்தானே ?" என்று நான் கேட்டேன்.

"ஆகா, எனது தந்தை கல்கத்தா எல்லையைவிட்டே சென்றுவிட்டார்" என்று பதில்சொன்னாள் அமிர்தா.

அவ்வளவே எனக்கு அதைப்பற்றிக் கூறினாளெனினும் அவளுடைய முகமலர்ச்சியைக் கவனிக்கையில் அவள்தந்தை தப்பித்துக் கொண்டதற்காக மிகவும் சந்தோஷப்படுகிறாள் என்று கண்டேன்.

சங்கரதாஸ்—நந்தனனுடைய தோழனாகிய சங்கரதாஸ்—என்னும் மனிதன் யாது காரணம்பற்றி இரங்கையாவைக் கொல்ல ஏற்பாடு செய்தானோ வென்பது எனக்கே தெரியவில்லை. அவைகளை எல்லாம் யோசிப்பேனாயின் புத்தி தடுமாறும். இரங்கையாவினுடையவும் அவருடைய குமாரியினுடையவும் விருத்தாந்தங்கள் மிக்க இரகசியமாகவும், ஆச்சரியமாகவும் தோன்றின. அப்படி இருந்தும் நான் அவைகளைப்பற்றி யோசிப்பதைவிட யோசியாம லிருப்பதே நலமெனக்கருதி இருந்தேன். அதற்குக் காரணம்—முதன்மையான காரணம்—யாதெனின், நான் அமிர்தாவை எனது உள்ளன்புடனும் முழுமனத்துடனும் காதலித்தேன் ; அவளோ எனக்கே சொந்தமானவளாயினாள் ! அதைவிட நான் எதையும் பெற விரும்பவில்லை.

ஒருமாதம் வரையில் எந்தவிதமான விசேஷ சம்பவமும் இன்றி காலங்கழித்தோம். சிற்சில சமயங்களில் நானும் அமிர்தாவுமாகப் புறப்பட்டுப்போய் சதாசிவ பண்டாரத்துடன் இருந்து வருவோம்.

" தகப்பனார் திபேத்தில் இருப்பதாகக் கடிதம் எழுதி இருக்கிறதோடு அவருடைய ஆசீர்வாதத்தையும் அனுப்பியுள்ளார். நம்மிருவரையும் அங்கு வரும்படி எழுதுகிறார் " என்றாள் அமிர்தா.

" நீ பதில் வரையும் பொழுது என்னுடைய நமஸ்காரத்தையும் அனுப்பு " என்றேன்.

" அப்படியே செய்கின்றேன்," என்றாள் அமிர்தா.

இவ்விதமே நாங்கள் சந்தோஷமென்னும் சாஹரத்தில் நீந்தி விளையாடுபவர்களாயினோம். அமிர்தாவுடன் அநேக சமயங்களில் நாடகத்திற்குப்போகும் வழக்கமுண்டு. அவளும் நாடகத்தில் சற்று விருப்பமுள்ளவளாகவே காணப்பட்டாள். நாங்கள் சிற்சில சமயங்களில் நாடகத்தின் நிமித்தம் பக்கத்து ஊர்களுக்கும் போவதுண்டு.

எம்மை அதுவரையில் கவிந்துகொண்டிருந்த மேகங்களாகிய துக்கங்கள் விலகவே சூரியன் ஒளி என்னக்கூடிய காதலும் சுகங்களும் எங்களுக்குத் தோன்றத் தலைப்பட்டன. முற்றும் முடிந்த சுகத்திற்கு உதாரணம் வேண்டுமானால் நாங்கள் அனுபவித்ததே அதற்குச் சாக்ஷி.

இப்புவியில் சதா துக்கத்தையே அனுபவிப்பவர்களையாவது, எப்பொழுதும் சுகத்திலேயே காலம் கழிப்பவர்களையாவது காண்பது அரிது. ஆகையால் நானும் அமிர்தாவும் அனுபவித்த சுகம் நிலைத்திருக்கவேண்டுமே என்று பயந்தேன். நாளையதினத்திற்கு யாதுசெய்வதென்று விசாரப்பட்டுக்கொண்டிருப்பவன் தனக்குத்தானே விசனத்தையுண்டுபண்ணிக் கொள்வது போலவே, மறுநாளைக்கு வேண்டுமென்பதையே மறந்து அன்றாடம் கிடைக்கக்கூடியதை அன்றே செலவழிப்பவன் அடைவதும் சங்கடமேயாம். அதாவது நடந்தவைகளை நினைப்பதும் துக்கமே!

நடக்கப்போகிறவைகளி னிமித்தம் கவலை கொள்வதும் கஷ்டமே! ஆகையா லவைகளை அறிந்திருக்கின்ற நான் வரப் போகிற நாட்களைப்பற்றி நினைப்பதா அல்லது அவைகளை மறப்பதா வென்பதை நிச்சயம் செய்யக்கூட வில்லை.

உண்மையுடன் காதலிக்கும் ஓர் ஆண்மகனும் ஒரு யுவதியும் விவாகம் செய்து கொள்ளுவார்களேயானுல், நாமே புவியில் புண்ணியசாலிகள் என்றும், துக்க மென் னும் சாகரத்தைக் கடந்தவர்களென்றும் எண்ணிக்கொள் வது சர்வசாதாரணம். ஆனுல் துக்கமென்னும் சாகரம் அவர்களுடைய கண்ணுக்கு மறைந்து தோன்றுகிறதே யொழிய அஃது முற்றும் ஒழியவில்லை என்றும் அவர்கள் செய்யும் சம்சாரயாத்திரையில் அந்த சமுத்திரம் எதிர்ப் படும் என்றும் மறந்து போவதே மானிட இயற்கை. அப்படி இருக்க அவர்களில் ஒருவனுகிய நான் வருபவை களைப் பற்றிச் சிந்தியாமலிருந்தது ஒரு வியப்பன்று. ஆ! நடக்கப்போகும் விஷயங்களை—எந்த விஷயங்களைப்பற்றிச் சிறிதும் கவனியாமல் இருந்தேனே அவைகளை—ஒரு சிறிது முன் அறியும் சக்திவாய்க்கப் பெற்றிருப்பே னுயின், எவ்வளவோ ஜாக்கிரதையாக இருந்திருப்பேன்.

ஒரு நாள் நானும் அமிர்தாவும் பார்சீ நாடகம் பார்க் கச்சென்றிருந்தோம். எங்கள் இருவருக்கும் தனிமை யாகப் போடப்பட்டிருந்த பெட்டியின் இரண்டு நாற்காலி களில் உட்கார்ந்துகொண்டிருக்கையில் எங்களுக்குப் பின் புறம் உட்கார்ந்துகொண்டிருந்த எவனுக்கோ அமிர்தா தன் கை விசிரியால் சைகை செய்ததுபோல் எனக்குத் தோன்றியது. அதைப்பற்றி நான் கேட்க வாயெடுத்தே

ஞயினும் அவள் என்னைப்பற்றி எவ்விதம் எண்ணுவளோ வென்று மௌனம் சாதித்தேன்.

நாடகம் முடிந்தவுடன் அவளைக் கொட்டகைக்கு வெளியே நிறுத்திவிட்டு எங்களுடைய வண்டியைப் பார்க்கச்சென்றேன். அன்றிரவு பயத்தைக் கொடுக்கும்படியான விதமாக இருள் மூடிக்கொண்டிருந்தது.

நான் இரண்டல்லது மூன்று நிமிஷங்களுக்குள் திரும்பிவந்து பார்க்கையில் அமிர்தாவைக்காணோம். பூதேவி விழுங்கி இருப்பினும்கூடச் சற்றுநேரம் செல்லும்; அவ்வளவு சீக்கிரத்தில் மறைந்தாள்! ஒவ்வோர் இடமாகத் தேடிக்கொண்டு நாடகக்கொட்டகையிலிருந்த அனைவரும் வெளியில் செல்லுகிற வரையில் காத்திருந்தும் வந்தாளில்லை. ஒருவராவது அவளைக் கண்டதாகவும் சொல்லவில்லை. நாடகக்கொட்டகையும் மூடப்பட்டது. அதன் பிறகு அவ்விடத்தில் நிற்பது சரியன்றென மதித்து என்னுடைய வண்டியில் தாவி வீடுபோய்ச் சேர்ந்தேன்.

"இல்லை எஜமானே. அம்மாள் இங்கு இன்னும் வரவில்லை" என்று மறுமொழி தந்தான் எனது வேலையாளன் அப்பையா, நான் கேட்ட அவசரக்கேள்விக்கு விடையாக. சட்டென்று அவ்விடத்தைவிட்டு என் அறைக்குச் சென்றேன். அங்கு என்னுடைய மேஜையின் மீது ஒரு கடிதம் என் விலாசத்திற்கு வைக்கப்பட்டிருந்தது.

அதன் மேல்விலாசத்தைப் பார்த்த உடனே கையெழுத்தை இன்னாருடையதென்று அறிந்து கொண்டு இமை கொட்டும் நேரத்தில் அதைப் பிரித்துப் பார்த்தேன்.

அதில் கண்டிருந்த விஷயம் என்னைக்கற்சிலையாக்கியது அதாவது அதைப்படித்துப்பார்த்த நான் அப்புறம் இப்புறம் அசைய முடியாமல் நின்றேன்.

# இருபத்து மூன்றாவது அத்தியாயம்.

"இல்லை"

அந்தக் கடிதம் நடுநடுங்கிக்கொண்டிருந்த என்னுடைய கையில் இருந்தும் கீழே விழுந்தது. அஃது அமிர்தாவினால் வெகு அவசரமாக எழுதப்பட்டிருந்தது.

மறுமுறையும் அக்கடிதத்தைப் பின்வருமாறு படித்தேன். "நாதா.—நான் தங்களை அவ்விதம் அழைப்பது தகாதாயினும் மந்திர பூர்வமாகத் தாங்கள் எனக்கு மாங்கல்யதாரணம் செய்திருக்கின்றீர்க ளாகையால் துணிவு ஏற்பட்டது. நாம் விவாகம் செய்துகொண்டதே தவறு. நான் தங்களை முற்றும் ஏமாற்றியமையால் தங்களுடைய கருணைக்கு நான் பாத்தியப் படவும் இடமில்லை. அத்துடன் தாங்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூறுவேன் என்று நினைக்க வேண்டாம். நான் இனி தங்களைச் சந்திக்க முடியாது. தாங்கள் முழுமனத்துடன் என்னைக் காதலிக்கிறதை நான் அறிந்தே இருக்கிறேன். அஃதே போல நானும் தங்களை நேசித்தேன். தங்களுடைய நன்மையையும், ஒருகால் எனது நலத்தையும் உத்தேசித்து நாம் பிரிந்திருத்தலே நலம்.

"தங்களுக்கு அனுவசியமான சங்கடத்தையும், துக்கத்தையும், பயத்தையும் நான் கொடுத்தேனாயினும் அவைகளுக்கு நான் காரணம் அல்லவென்றும், மற்றொருவருடைய உத்தரவுப் பிரகாரம் நடந்தேன் என்றும் தெரியப்படுத்துகிறேன். தாங்கள் எனக்குச் செய்திருக்கிற நலத்திற்கு மாறாக தங்களுக்கு அவமானத்தையும், அகௌரதையையும் விட்டுச் செல்லுகிறேன். துக்கத்தாலும்

பாபத்தாலும் மூடப்பட்டிருப்பவளாகிய ஒரு பெண்பிள்ளைக்குத் தாங்கள் ஒரு வரம் கொடுக்க இச்சைகொள்வீர்களாயின், நான் இருக்குமிடத்தைத் தெரிந்துகொள்ளப் பிரயத்தனப்படமாட்டீர்கள். அவ்விதம் தாங்கள் பிரயத்தனப்படுவீர்களாயின் அஃது பயன்படாது. ஒரு பொழுதும் தங்களைச் சந்தியாமலிருப்பதற்கே இன்று இரகசியமாகத் தங்களைவிட்டுப் பிரிந்தேன். எனது நடத்தையால் தாங்கள் மனம் வருந்தாதீர்கள். தங்களுடைய அன்பைப்பெற நான் யோக்கியதையற்றவள். சென்று வருகின்றேன். அன்பரே தங்களுடைய துரோகியாகிய—அமிர்தா."

அக்கடிதம் முழுமையும் கண்ணீர்ச் சொட்டுகள் காணப்பட்டிருந்தமையால் அமிர்தா அதை எழுதும் பொழுது அழுதிருக்கிறாள் என்பது தெரியவந்தது.

என்னை விட்டு வேண்டுமென்றே பிரியவேண்டிய காரணம் யாது? நாடகக் கொட்டகையில் தனது தோழனுக்குச்செய்த சைகையின் தாத்பரியமென்ன? அவள் என்னை முற்றும் ஏமாற்றிவிட்டதாகவும் எனது அன்புக்கு உரியவளல்லவென்றும் தானே ஒப்புக்கொள்ளுகிறாள். அதாவது அவள் சொல்லுவதின் பொருள் யாது? எந்தவிதத்தில் என்னை ஏமாற்றினாள்? ஒருகால் இரகசியமான காமுகன் ஒருவன் அவளுக்கு உண்டோ? இந்தவிதமான பற்பல எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து என் புத்தி தடுமாறும்படி செய்தன. அவள் அப்பொழுது கொஞ்ச நாட்களாக நடந்துகொண்ட விதமே சந்தேகத்திற்கு இடங் கொடுத்தது.

எனது முட்டாள் தனமே அவளை மணந்ததென்றும் தோற்றியது. நான் அவளை மணந்ததைப்பற்றி கோவிந்த

ராம் தன்னுடைய எண்ணத்தை என்னிடம் நேரில் சொல்லவில்லை யாயினும், அவனுடைய அந்தரங்க அபிப் பிராயத்தைமட்டும் நான் நன்கு அறிவேன். காளிகட் டத்தில் நடந்த விஷயமும் ஞாபகத்திற்கு வந்தது.

அன்றைத்தினம் இரவு நான் நித்திரை செய்திலேன். எனது தாழ்மையும், உண்மையுள்ளவனுமான அப்பையா வும் என் அறைக்கு வெளியே காத்துக் கொண்டிருந் தானே யன்றி நித்திரை செய்திலன்.

நான் அமிர்த வல்லியைக்கண்டு உண்மையைத் தெரிந்து கொண்டு, அவளைக் குறை கூறேன் என்ற தைரிய வசனத்தைச் சொல்லவேண்டுமென்ற ஆசை மிகக்கொண் டேன். ஆயினும் இன்னது முதலில் செய்வதென்பதை நான் அறிய முடியாத நிலைமையி லிருந்தேன்.

இப்புவியில் மானிடனாகப் பிறந்த எந்தப் புமானும் ஒரு யுவதியைக் காதலித்திராத விதமாக அவ்வளவு உண் மையாக நான் அவள் மீது அன்பு செலுத்தியிருந்தும் தன்னுடைய இரகசியம் எங்குவெளிப்பட்டுவிடுமோ வென் றும், தனது சோரகிருத்தியத்தை நான் எங்கே கண்டு பிடித்து விடுவேனோ வென்றும், தானாகவே புறைந்து விட்டாள்.

மறுநாட் பொழுது—குளிர்ச்சியும், மூடுபனியும் கலந்து காலைப்பொழுது—புலர்ந்தது. அப்பொழுதும் இன் னது செய்வதென்று தோன்றவில்லை. அவளைக் கண்டு பிடித்து திருப்பியழைத்து வந்து உண்மையை ஆதியோ டந்தமாகத் தெரிந்து கொள்ளவேண்டு மென்னும் எண் ணம் ஒன்றே எனது மனதில் நிலைபெற்றிருந்தது.

அப்பொழுதே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று காளி கட்டத்தில் அனுமான் மந்திரத்தே நடந்தவற்றை

வெளியிட நினைத்தேன். அவ்விதம் செய்ய வேண்டா மென்று ஏற்கனவே அவள் என்னைக் கேட்டுக் கொண்டமையால் அவ்விதம் செய்வதற்கு என்மனம் துணியவில்லை. அவள் அவ்விதம் கேட்டதற்குக் காரணம் யாதெனின் தன்னுடைய கெட்ட பெயர் வெளிக்கு வருமென்று பயந்தாள் போலும்.

இல்லை ஆயிரம் முறை இல்லை. நான் அவளைக் கெட்டவளென்று நினைப்பதில்லை. உண்மையாக ஒருத்தியைக் காதலிக்கும் ஒருவன் அவளைப்பற்றிக் கேவலமாக நினைப்பானா? காதலுக்குக் கண்ணில்லை யாயினும், இருவர் மனமும் ஒன்றுபடுமேயாயின் அதைவிட இப்புவியில் அடையும் பாக்கியம் யாது? ஆகையால் அவள்மீதுகொண்ட சந்தேகத்தை அறவே ஒழித்து அப்பையாவினால் கொணர்ந்து வைக்கப்பட்ட காப்பியைக் குடித்தேன்.

சற்றுநேரத்திற்குப் பிறகு நான் கூடத்தை யடைந்தவுடன் கீழ்ப்புறத்துச் சுவரில், என்னைப் பார்த்த வண்ணமாக ஒருபுகைப்படம் தொங்க விடப்பட்டிருந்தது. அஃது என் அன்பைக் கவர்ந்த அமிர்தாவினுடையது. எமது விவாகம் ஆனவுடன் எடுக்கப்பட்ட புகைப்படமாகும்.

உடனே அந்தப் படத்தைக் கையிலெடுத்துச் சில நிமிஷம் கூர்ந்து கவனித்திருந்து அதன் மீது இருந்த சட்டத்தைப் பிரித்துப் படத்தை மட்டும் எடுத்து ஒரு லகோடாவில் போட்டு என்னுடைய சட்டைப் பையில் பத்திரப் படுத்திக்கொண்டேன்.

பிறகு பத்துமணி சுமாருக்கு நாடகக் கொட்டகையின் சமீபத்திலுள்ள வீதியை அடைந்து, என்சட்டைப் பையிலிருந்த படத்தை எடுத்துக்காட்டி "இவள் நேற்று முதல் காணப்படவில்லை" என்று விசாரித்தேன். அநேகர்

அதைப்பார்த்துச் சென்றார்களாயினும் ஒருவராவது அப் பேர்ப்பட்ட ஒருமாதைக் கண்டதாகச் சொல்லவில்லை. பிறகு நாடகக்கொட்டகைக்குச் சென்று, அதன் எஜமானனைக் கண்டு நான் சங்கதியைச் சொன்னேன். முதல்நாள் இரவு அதனைக் கேட்டும் பயனடையவில்லை யாயினும் அப் பொழுது அவன் அனுதாபம் பாராட்டினான். அதன் பின் அவனண்டையில் வேலையாக இருக்கும் எல்லோரிடமும் அப்படத்தைக்காண்பித்து வருகையில் ஒருவேலைக்காரப் பையன், "ஏன் ஐயா, என்னோடுபேசிய கனவானுடன் நேற்றிரவு சென்றார்கள் இந்த மாது!" என்று கூறினான்.

"அவன் யார்? அவன் உன்னிடம் யாதுசொன்னான்? அவன் யாரைப்போலிருந்தான்? என்று பல கேள்விகளை ஒரே மூச்சில் கேட்டேன்.

"நாடகம் முடிவதற்குப் பதினைந்து நிமிஷங்களுக்கு முன்னர் நான் வெளியே சென்றிருந்தேன். அப்பொழுது கறுத்து உயர்ந்திருந்த ஒரு கனவான் என்னண்டையில் வந்து, நாடகம் முடிந்தவுடன் ஓர் அழகிய யுவதி வெளியே வருவாளென்றும், அவளை இவண் அழைத்து வரும்படியும் சொன்னார். அந்த அம்மாளுக்காக ஒரு மோட்டார்வண்டி—சாம்பல் வர்ணமான மோட்டார் வண்டி—காத்துக் கொண்டிருந்தது" என்றான்.

"ஆயின் அவன் ஓடுவதென்பதை ஏற்கனவே நிச்சயித்திருக்கவேண்டும்!" என்று கூவி, "அவன் யார்போலிருந்தான்?" என்று வினவினேன்.

"அவர் ஒருகனவானைப் போன்றிருந்தார். ஆயினும் அவருடைய உடை அவருக்குப் பொருத்த மற்றதாக இருந்தது. அவர் ஒரு பிரபுவாக இருந்து தாழ்ந்த நிலை

மைக்கு வந்து விட்டவர்போலக் காணப்பட்டார்" என்ருன்.

"அவன் வேஷ்டியா கட்டிக்கொண்டிருந்தான்?" என்று கேட்டேன்.

"இல்லை; ஐயா மங்கலான சிவப்புக் கால்சட்டை கை சட்டை யணிந்திருந்தார்" என்று பதில் சொன்னுன்.

"சரி, பிறகு என்ன நடந்தது?"

"நாடகம் முடியும் வரை காத்திருந்தேன். பிறகு ஜனங்கள் யாவரும் வெளியேவரத் தலைப்பட்டனர். அப்பொழுது ஒரு அம்மணி என்னையழைத்து அந்த மோட்டார் வண்டியில் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி வேண்டினுள். நான் வெளியே அழைத்துச் சென்றவுடனே அவர் வந்து சேர்ந்தார். அவர் "வா, என்கண்ணே, ஒரு நிமிஷமும் தாமதிக்க நேரமில்லை" என்ருர். பிறகு அவர்கள் இருவரும் அந்த மோட்டார் வண்டியில் ஏறிச்சென்றனர். இவ்வளவே நான் அறிந்த விஷயம்" என்று தாழ்மையாகக் கூறினுன்.

சிறிதுநேரம் அசைவற்று நின்று, அவளுடைய சோர நாயகன் யாராக இருக்கலாமென்று யோசித்தேன். அச்சிறுவனுடைய சொல் ஆச்சரியமான உண்மையை வெளிப்படுத்துவதாக இருந்தது. "அது எந்த மாதிரியானவண்டி" என்று கேட்டேன்.

"அஃது ஒருவாடகை வண்டி" என்று பதில் கூறி, "அந்த வண்டி இங்கே அடிக்கடி வரும் வாடிக்கையுண்டு. அது பக்கத்துத் தெருவிலிருந்து வருகிறதென்று நினைக்கிறேன்" என்ருன்.

"அந்த வண்டிக்காரனை நீ தெரிந்திருக்கலாமே?" என்று கடாவினேன்.

" அவனைப் பார்த்தால்தான் சொல்லமுடியும்" என்று அவன் மறுமொழி கொடுத்தவுடன் நாடக எஜமானனுடைய உத்தரவின் பேரில் அந்தப்பையனை அழைத்துக் கொண்டு பக்கத்துத் தெருவிற்குச் சென்றேன்.

அங்கு சென்றவுடன் அவன் நின்று கொண்டிருந்த சேற்றால் நிறைந்த வண்டியைக்காண்பித்து, அதுவே நேற்று அமிர்தாவிற்காகக் காத்திருந்த வண்டியென்று குறித்தான். அதிசுலபமாக நான் அந்த வண்டிக்காரனைக் கண்டு விசாரித்ததில் முதல்நாள் இரவு ஒரு கனவானுக்காக நாடகக்கொட்டகைக்குப் பேசிப் போனது உண்மை என்றும், அங்கிருந்து ஓர் யுவதியுடன் வண்டிக்கு அவர் திரும்பி வந்தார் என்றும் கூறினான்.

" நீ அவரை எங்கு கொண்டு போய் விட்டாய் ?" என்று விரைந்து கேட்டேன்.

" பாடலிபுரத்துப் பெரிய கிளப்புக்குக் கொண்டு போய் விட்டு இப்பொழுதே திரும்பி வந்தேன். இன்னும் வண்டியைக் கூடக் கழுவவில்லை " என்று வண்டியைக் காட்டி " இருநூறு மைல் வாயுவேக மனோவேகமாகப் போய்த் திரும்பியதில் என் மெய் நோகின்றது " என்று தனது தடித்த புஜத்தால் இடையைப் பிடித்துக்கொண்டு கூறினான்.

" பாடலிபுரத்துப் பெரிய கிளப்பா ?" என்று கூவினேன். ஏனெனில் என்னுடைய தேச சஞ்சாரத்தில் நான் அங்கே வெகுகாலம் தங்கியிருந்தேனாகையால் அவ்வூரின் ஒவ்வொரு மூலையையும் நான் அறிவேன்.

" ஆனால் நீ அங்கே தங்கி யிருக்க வில்லையோ ?" என்று நான் கேட்டேன்.

" ஒரு பொழுது போஜனம் செய்து, என்னுடைய வண்டிக்கு எண்ணெய் போட்டுக்கொண்டு வருவதற்கு ஒரு மணிநேரம் தாமதித்தேனே அவ்வளவுதான். அந்தக் கனவானும் பெருமாட்டியும் அங்கே வருவார்களென்று யாரோனும் காத்திருந்தார்கள் போலிருந்தது. அவர்கள் அவ்வளவு அவசரத்தி லிருந்தனர் " என்ருன் வண்டிக்காரன்.

" ஏன் ?"

" பாதிவழியில் செல்லும்பொழுது எனது வண்டியினின்றும் நீராவி தப்பு வழியாக வெளிப் போவதைக் கண்டு இரண்டு நிமிஷம் வண்டியை நிறுத்தி வேலை செய்வதற்குள் உள்ளிருந்த பெருமாட்டி அதிகம் கோபித்துக் கொண்டார்கள். பிறகு அவர்களே அந்த கனவானிடம், ' நாம் போய்ச் சேருவதற்குள் அவர், சென்று விட்டாராயின் என் செய்வது ? ' என்று வினவியது என்காதில் பட்டது."

" ஆனுல் அவர்கள் யாரையோ சந்திக்கச் சென்ருர்கள் என்கின்ருயா? " என்று சந்தேகத்துடன் வினவினேன்.

" ஆ ! எனக்கொன்றும் தெரியவராது. அந்த ஹோட்டலின் வெளியே வண்டியை நிறுத்தினேன். அப்பெருமாட்டி கீழிறங்கி வெளியே சென்ருள். அந்த கனவான் பேசிய வாடகையுடன் எனக்கு வெகுமதியாக வேறு கொடுத்தார். அப்பொழுது அதிகாலை நான்கு மணி இருக்கும். அப்பொழுதே நான் புறப்பட்டிருந்தால் வெகுநேரத்திற்கு முன்னரே வந்திருக்கக் கூடும். ஆனுல், அங்கு சிறிது நேரம் தாமதித்ததோடு வழியில் என் வண்டிச் சக்கரம் ஒட்டையாயது " என்ருன்.

"அப்படியானால் நான் பாடலிபுரம் செல்ல வேண்டும்" என்று கூவி, வண்டிக்காரனுக்கும் என்னுடன் வந்த நாடகக்காரப் பையனுக்கும் இரண்டு ரூபா கொடுத்து என்வீடு போய்ச் சேர்ந்தேன். உடனே எனது வண்டியில் ஏறி நானும் அப்பையாவும் பாடலிபுரத்தை நோக்கிப் புறப்பட்டோம்.

அந்த ரஸ்தா எங்களுக்கு நன்றாகத் தெரியுமாகையால் வெகுவேகமாக வண்டியைச் செலுத்தி சாயங்காலம் மூன்றரை மணிக்கு பாடலீபுரத்தையடைந்து நான்கு மணிக்கு பெரிய கிளப்பிலும் போய்ச் சேர்ந்தோம்.

அக்கிளப்பின் வேலைக்காரியொருத்தியைக் கண்டு விசாரித்ததில் முதல்நாள் இரவு பதினொரு மணிக்கு இரண்டு கனவான், தெலுங்கு தேசத்தவர்கள் போலக் காணப்பட்டார்களாயினும் ஹிந்துஸ்தானி நன்றாகப் பேசிக்கொண்டு வந்து இரண்டு அறைகளை வாடகைக்குப் பெற்று அதனுள் சென்று நித்திரை செய்யாமல் விழித்திருந்தார்கள் என்று சொல்லியதோடு அன்றிரவு இருந்த வேலையாளனைக் கேட்டால் மற்றவை விளங்குமெனவும் கூறினாள்.

அவனைப் போய்க் கேட்டதில், கிளப்பின் வேலையாட்கள் எல்லோரும் படுக்கைக்குச் சென்ற பிறகு தான் நித்திரை செய்யாமல் அவர்களைக் கவனித்ததாகவும் அவர்கள் இரண்டு பெயர்களுமாக அதிக பளபளப்பான ஒரு வஸ்துவைப் பார்த்துக்கொண்டிருந்ததைக் கதவின் சந்து வழியாகக் கவனித்ததாகவும் சொல்லியதோடு ஒரு பெரிய கதையும் சொல்ல ஆரம்பித்தான்.

அவர்கள் இருவருடைய அங்க அடையாளங்களைச் சொல்லிக்கொண்டு வருகையில், தடித்துக் கறுத்த வழுக்கத்தலை மனிதன் என்றது இரங்கையா வென்றும், மற்ற

வன் கொலை பாதகனுகிய நந்தனன் என்றும் தெரியவந்தது. மறுபடியும் அந்த மகாபாபிகள் யாது சதியாலோசனை செய்துகொண் டிருக்கின்றூர்களோ என்று பயந்தேன்.

"விடியற்காலம் நான்குமணி சுமாருக்கு ஒரு சாம்பல் வர்ணமான மோட்டார் வண்டிவந்து நின்றது. அதினின்றும் ஓர் அழகிய யுவதியும் ஒரு கனவானும் இரங்கி அவர்களுடன் சேர்ந்துகொண்டனர். ஏற்கனவே உட்கார்ந்திருந்த இருவரும் வந்தமனிதனை அழகநாதரே என்றழைத்து சந்தோஷமாக வார்த்தையாடத் தலைப்பட்டனர். அந்த வழுக்கைத்தலை மனிதன், 'தெய்வசாக்ஷியாகச் சொல்லுகிறேன். உன்னை மறுமுறையும் பார்க்க நாங்கள் எவ்வளவு ஆசைப்பட்டோம். நீ அதிக சாதுரியமாகத் தப்பித்துக் கொண்டு வந்திருக்கவேண்டும். உன்னுடைய இடத்தில் மற்றவர்கள் இருந்திருந்தால் இவ்விதம் வருவார்கள் என்று நினைக்கின்றுயா? ஆயினும் உனக்கு விரோதிகள் இன்னும் இருக்கின்றூர்கள்—அழகநாதா—ஜாக்கிரதை' என்றுன். 'என்தலைக்குமீது நிற்கும் பயத்தை நான் நன்றுக அறிவேன். கீலக, நீயும் கல்கத்தாவில் அகப்பட்டுக்கொண்டு தப்பியது தம்பிரான் புண்ணிய மாயதாமே. எல்லாம் வரும்பொழுது கல்பலதா சொல்லினள்?' என்றூர். வந்தகனவான், 'ஆமாம். அந்த சமயம் கல்பலதா நடந்துகொண்ட சாமர்த்தியத்தை என்ன வென்பேன்.' 'நீ சதாசிவ பண்டாரத்தைக் கண்டாயோ?' என்று வினவினூர் கீலகன். 'இரண்டு நாட்களுக்கு முன்பு அவரைச் சந்தித்தேன். நடந்த விருத்தாந்தங்கள் யாவும் கூறினூர்" என்று அழகநாதர் பேசுமுன், 'மற்றவைகளை உனக்குக் கல்பலதா சொல்லி இருப்பாள்' என்று கீலகன் கூற 'ஆமாம்,

அஃது நாகநாதருக்குக் கேட்டையே விளைவிக்கும்' என்றார் அழகநாதர் என்னும் கனவான். நான் கேட்டுக்கொண்டிருந்த விஷயம் அவ்வளவே" என்று கூறி முடித்தான்.

"இன்னும் என்னென்ன கேட்டாய், பார்த்தாய்?" என்று கேட்டேன்.

"அவர்களைக் கண்ட தக்ஷணமே நான் சந்தேகித்தேன்" என்று மறுமொழி கூறி, "அவர்கள் நால்வரும் மெதுவாய் ஏதோ பேசிக்கொண்டிருக்கையில் ஒருமோட்டார் வண்டியில் வேறு இருவர் வந்து சேர்ந்துகொண்டார்கள். உடனே அவர்களும் அந்த சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர்" என்று பேசிமுடித்தான்.

"என்ன ஆச்சரியம்! அந்தநேரத்தில் அவர்கள் சபை கூடவாவது பேசவாவது?" என்று நான் குறித்தேன்.

"ஆமாம். எனக்கும் ஆச்சரியமாகவே தோற்றியது. அஃதோர் இரகசியமான சந்திப்பு. அவர்கள் நிமிஷத்திற்கு ஒரு பாஷை பேசுகிறார்கள். கடைசியில் வந்த இருவர் வேற்றூரார்கள்போலக் காணப்பட்டனர்" என்றான்.

"அதில் ஒருவன் தங்க மூக்குக்கண்ணாடி போட்டுக்கொண்டிருந்தானல்லவா?" என்று நான் வினவினேன்.

"இல்லை" என்று பதில் சொன்னான்.

## இருபத்து நான்காவது அத்தியாயம்

### அங்கு சென்றல்

"இல்லை. அவர்கள் இருவரும் யுவா புருஷர்களாக இருந்ததோடு கறுத்த மீசையையும் உடையவர்களாயிருந்தனர். அவர்கள் இருவரும் கனத்த மேற்சட்டையை அணிந்திருந்தனர். அவர்கள் தென்புறத்தினின்றும் வந்தனர். வெகு தூரத்திலிருந்தும் வந்தவர்களாகக் காணப்பட்டனர்" என்று மீண்டும் கூறினன் வேலையாளன்.

"அந்த இரகசியமான கூட்டத்தில் எதைப்பேசி முடித்தார்கள் என்பதை நீ அறியவில்லையா?" என்று மெதுவாகக் கேட்டேன்.

"நான் அவர்களைச் சந்தேகித்தவுடனே, வெளிப்பக்கம் சென்று அவர்கள் கூடி இருந்த அறையின் ஜன்னல் வழியாகக் கவனித்தேன். கல்கத்தாவிலிருந்து வந்தவரே அக்கிராஸனத்தை வகித்தார். அவர் மற்றவர்களுக்கு ஆச்சரியமான விஷயமொன்றைச் சொல்லிக்கொண்டிருந்ததாகத் தோன்றிற்று. அதன் பிறகு ஒரு தேசபடம் மேஜையின்மீது திறந்து போடப்பட அதை எல்லோரும் கண்ணேக்குவாராயினர். பிறகு கீலகன் என்னும் பெயரையுடையவர் இரண்டு புகைப் படங்களைக் காண்பித்தார். அவை இரண்டும் பெண் பிள்ளைகளினுடையவாக இருந்தன. அவர்கள் பேசிக்கொண்டிருந்த விஷயத்தில் அங்கிருந்த யுவதி சம்பந்தப்படாதவள்போலக் காணப்பட்டதோடு இரண்டு புகைப்படங்கள் வரிசையாக அவளுடைய கைக்கு வந்தவுடன் வாய்பேசாமலும் அவைகளைக் கூர்ந்து

கவனிக்காமலும் பக்கத்திலிருந்தவர்களிடம் கொடுத்தனள்" என்றான்.

"அவளுடைய இஷ்டத்திற்கு மாறாக இருப்பவள் போலவா அவள் காணப்பட்டாள் ?" என்று நான் கேட்டேன்.

"அப்படி யொன்றுமில்லை. அங்கிருந்தவர்களோடு நட்பினளாகவே காணப்பட்டாள். கடைசியில் வந்த இருவர் மட்டும் அவளுக்குப் பரிச்சியம்செய்து வைக்கப்பட்டனர்" என்று பதில் சொன்னான்.

"அவளுடைய பெயரைச் சொல்லியா ?"

"ஆமாம். கல்பலதா என்னும் பெயரைச் சொல்லிப் பரிச்சியம் செய்து வைக்கப்பட்டனர்" என்று சொல்லி ஏற்கனவே சொல்லியதை உறுதிப்படுத்தினான். அதற்குள் பெயரையும் மாற்றிக் கொண்டு விட்டாளா என்று எனக்குள்ளே யோசித்து, "கல்பலதா வென்றா ?" என்று ஆச்சரியத்தோடு கேட்டு, "கடைசியாக வந்த இருவருக்காக வேண்டி அவளுக்கு அந்தப்புனை பெயரிட்டனரோ?" என்று வினவினேன்.

"இல்லை, சுவாமி; அந்த அம்மணி வந்தது முதலே, இங்கிருந்த இருவர் அம்மாதைக் கல்பலதாவென்றே அழைத்தனர்" என்று விடை பகர்ந்தான் வேலையாளன்.

"அதுவே அவளுடைய உண்மையான நாமதேயமென்று நினைக்கின்றாயா?"

"அப்படி இருக்குமென்றுதான் நினைக்கிறேன்" என்று சொல்லி என்னைப் பார்த்த மாதிரியிலிருந்து என்னைச் சந்தேகிக்கிறான் என்று கண்டேன்.

"அதன் பிறகு யாது கண்டாய்?"

"அழகநாதர் என்று அழைக்கப்பட்டவர் ஏதோ சில வற்றை யெழுதி ஒருவனிடம் கொடுத்தார். அவர் அதைப் படித்துப் பார்த்து கையொப்பமிட்டு மற்றவரிடம் தந்தார். இவ்விதமே கல்பலதாவைத் தவிர மற்ற அனைவரும் படித்துப் பார்த்துக் கையெழுத்து செய்தனர். கடைசியாக அவளிடம் அது கொடுக்கப்பட அவள் கையொப்பமிடச் சம்மதிக்கவில்லை. அது பற்றி அவள் கட்டாயப் படுத்தப் படவுமில்லை. பிறகு ஒரு மனிதனுடைய புகைப்படம், வந்த புது மனிதர்களுக்குக் காட்டப்பட்டது. அதைக் கொண்டு அவர்கள் செய்ய யோசித்ததை வெகுதூரம் கல்பலதா தடுத்தும் பயன்படவில்லை. அதை நினைக்கும் பொழுது ஆச்சரியமாக இருக்கின்றது. அப்படத்திலுள்ள உருவத்தையும் நான் கவனித்தேன். அஃது தங்களைப் போலவே இருந்தது" என்று கூறி என்னைப் பாதாதி கேசம் கவனித்தான்.

"என்னை!" என்று ஆச்சரியத்தால் கூவி, "அந்த இரண்டு புதிய மனிதர்களுக்கு காட்டினார்களா?" என்று பின்னும் அதிகமான ஆச்சரியத்தோடு கேட்டேன்.

"ஆமாம், ஐயா, அவ்விருவரில் ஒருவன் அந்தப் புகைப் படத்தைத் தன்னுடைய சட்டைப்பையில் போட்டுக் கொண்டான். பிறகு அழகநாதரென்பவர் அக்கிராசனாதிபதியைப்போல் பேசலாயினர். புதிய மனிதர் இருவரும் நகைத்தனர். அவர்கள் பேசிய ஒரு வார்த்தையாவது என்னுடைய செவியில் கேட்கவில்லை. ஆயினும் அழகநாதருடைய முகத்தைப் பார்த்தால் கொண்டகாரியத்தை ஜெயிக்கக் கூடிய உறுதி இருக்கின்றதென்பது நன்கு விளங்கும். கடைசியாக அழகநாதர் அந்தப்

புகைப்படத்தை நெருப்பில் போட்டுக் கொளுத்தினர்" என்று பதில் கூறி முடித்தான்.

"எனது படத்தையா கொளுத்தினர்?"

"ஆமாம்; தங்களுடையதென்றுதான் நான் எண்ணுகிறேன்—ஆயினும் நான் நிச்சயமாகச் சொல்லமுடியாது."

"அதன் பிறகு?"

"நீலகன் என்பவர் ஏதோ பேச வாரம்பித்தார். அங்கிருந்த எல்லோரும் அவ்வறையின் கதவையும் ஜன்னல்களையும் கண்மூடுக்கினர். கடைசியாக வந்த இருவரில் ஒருவன் எழுந்து போய்க் கதவைப் பூட்டிவிட்டு வந்து தன்னுடைய நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். ஏற்கனவே உட்கார்ந்திருந்த வழுக்கைத்தலை மனிதனாகிய நீலகருடன் வந்த மனிதன் தன்னுடைய சட்டைப் பையினின்றும் பளபளப்பான வஸ்து ஒன்றை வெளியில் எடுத்தான். அவன் கையில் ஜொலித்தது ஒரு கல்லிழைத்த அட்டிகை. அதை ஒவ்வொருவராகக் கையில் வாங்கிப் பார்த்து மற்றவரிடம் கொடுக்கலாயினர். கல்பலதாவைத் தவிர மற்றவர்களெல்லாம் பார்த்தாய்விட்டது. அவள் மட்டும் தனியே ஒரு நாற்காலியின்மீது தலையில் கையுடன் ஆயாசம் அடைந்தவள்போல் உட்கார்ந்துகொண்டிருந்தாள்.

"பின்பு?"

"அந்தக் கல்லிழைத்த அட்டிகையை எல்லோரும் பார்த்தான பிறகு கடைசியில் வந்த இருவரில் மூத்தவன் தன்னுடைய கைக்குட்டையில் அதைச் சுற்றித் தனது இரகசியப்பையில் போட்டுக் கொண்டான். பிறகு அழகநாதர் ஒரு பிரசங்கம்போல் செய்தார். அதை எல்லோரும் கவனித்துக்கொண்டிருந்தனர். அதன்பின் நீலகன்

தன்னுடைய கைகளை ஆட்டிக்கொண்டு பேசுகையில் அழகநாதர் புன்முறுவல் பூத்தார். கல்பலதா அழகநாதருடைய காலில் விழுந்து எதையோ செய்யவேண்டுமென்று கேட்க அவர் ஒரே பிடிவாதமாய்க் கூடாதென்று மறுத்தார். அவளுடைய முகம் வெளுத்துக் களைத்திருந்தது. அவள் அதிக பயங்கொண்டவள் போலவும் காணப்பட்டாள். சிறிதுநேரங் கழித்து அழகநாதர் அவளுக்கு அபயம் கொடுத்தார்; அதன்மேல் அவள் மனது சமாதானம் அடைந்தவளாகக் காணப்பட்டாள். கடைசியில் வந்த இருவரும் பக்கத்து மேஜையின்மீது வைக்கப்பட்டிருந்த ஒரு சாராயப் புட்டியைக் காலிசெய்து தோழர்களுக்கும் வந்தனமளித்து வந்தவழியை நோக்கிப் பயணமாயினர்."

"கல்லிழைத்த வைர அட்டிகையையும் எடுத்துக் கொண்டா போய் விட்டனர்?"

"ஆமாம்."

"அந்த யுவதியின் கதியாதாயது?" என்று ஆவலுடன் கேட்டேன்.

"சிறிதுநேரம் கிலகன் என்னும் வழுக்கத்தலை மனிதனுடன் இரகசியமாகப் பேசியிருந்தாள்" என்றான் வேலையாளன். அவரே எனது மாமனும் அமிர்தாவின் தகப்பனுருமாகிய இரங்கையா என்று நிச்சயம் செய்துகொண்டேன்.

"இருவரும்—கிலகனும் கல்பலதாவும்—வெளியே சென்று திரும்பி வந்தனர். கல்பலதாவின் நிமித்தம் அதிகமாக வருந்தப்பட்டவராகக் காணப்பட்டார் அழகநாதர். பிறகு அதிகாலை ஐந்துமணி சுமாருக்குப் புறப்பட்டுப் போயினர். எனக்கு கிலகன் என்னும் பிரபு ஒரு பவுன் கொடுத்துச் சென்றார்" என்று சந்தோஷமாகக் கூறினான்.

"இருக்கட்டும்; அவர்களைப் பற்றி உன்னுடைய அபிப்பிராயமென்ன ?" என்று உசாவினேன்.

"அபிப்பிராயமாவது—அவர்கள் அனைவரும் அயோக்கியர்கள் என்பதுதான். உடனே நான் போலீஸ் சேவகனிடத்தில் சொல்ல நினைத்தேன். யாரையாவது கேட்காமல் செய்யவும் மனமற்றவனாக இருந்தேன்" என்று பதில் பகர்ந்தான்.

"ஆ! இப்பொழுது அதிக நேரமாகிவிட்டது" என்று, அதுவரையில் எம்முடைய சம்பாஷணையைப் பின்னின்று கவனித்துக்கொண்டிருந்த அந்தக் கிளப்பின் எஜமானி, அந்த வேலையாளனைப் பார்த்துக் கூவி, பிறகு என்னைப் பார்த்து, "முழுவிஷயமும் ஆச்சரியமானதாக இருந்தமையால் போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கண்டு சங்கதியைச் சொல்லி விட்டேன். நல்லவேளை அவர்கள் நம்மை விட்டுச் சென்றனரே என்று சந்தோஷிக்கிறேன். அப்படிப்பட்டவர்களுடைய சகவாசம் நமக்கெதற்கு ?" என்று என்னோடு பேசினாள்.

"இருக்கட்டும், இன்ஸ்பெக்டர் என்ன அபிப்பிராயமாக இருக்கிறார் ?" என்று வினவினேன்.

"அபிப்பிராய மென்ன, அவர்களைச் சந்தேகப்பட்ட பேர் வழிகள் என்று மட்டும் குறித்தார்" என்றாள்.

"அவர்களும் அப்பேர்ப்பட்டவர்கள்தான்போ விருக்கிறது?" என்று, நான் இன்னொன்று அவளுக்குத் தெரியாமலிருக்கும்படியாகச் சந்தேகமாகக் கேட்டேன். நான் அழகநாதருடன்—அதாவது யாருடன் என்மனையாளாகிய அமிர்தா நாடகக் கொட்டகையிலிருந்து ஓடிவந்தனளோ அவருடன்—வியாபார விஷயமாகப் பேசவந்தவனென்று ஏற்கனவே அவர்களிடம் சொல்லியிருந்தேன்.

பிறகு நாங்கள் மூவரும் எஜமானியின் அறைக்குச் சென்றோம். கொஞ்சநேரம் பேசிக்கொண்டிருப்பதற்குள் ஒருவேலையாளன் உட்பிரவேசித்து போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்திருப்பதாகவும் உள்ளே வரவேண்டுமென்று கேட்பதாகவும் சொன்னான். அவளுடைய உத்தரவின் பேரில் உள்ளே வந்து சேர்ந்தார் இன்ஸ்பெக்டர்.

“இங்கே வந்திருந்த மனிதர்களைப் பற்றிய இரகசியம் வெளி வந்து விட்டது” என்று கூறி என்னை ஒருமுறை சந்தேகமாகப் பார்த்தார்.

“இவருக்காகத் தாங்கள் சந்தேகப்படவேண்டியதில்லை. தாங்கள் தாராளமாகப் பேசலாம்” என்றாள் அந்த சாப்பாட்டுக்கடையின் எஜமானி.

“உண்மை யாதெனில், விஜயநகர ராஜாவின் குமாரி காசிக்குப் போகும்பொழுது இரயிலில் தனிவண்டியில் வந்ததாகவும், அந்தத் தனிவண்டிக்குப் பக்கத்திலிருந்த சாப்பாட்டுவண்டியிலிருந்து அவள் ஏறி இருந்த வண்டிக்கு போகும்படியான நடுவழி இருந்ததாகவும், வண்டி கல்கத்தாவில் மாற்றப்பட்டு காசிபோய் சேர்ந்தவுடன் அவளுடைய ஒரு சிறு கைப்பெட்டியில் வைக்கப்பட்டிருந்த வைரக்கல்லிழைத்த அட்டிகை களவாடப்பட்டதாகவும், அதி சாதுர்யவானாகிய கள்வன் கல்கத்தாவில் சாப்பாட்டு வண்டியிலேறி சாப்பாடு செய்துகொண்டு ராஜகுமாரியின் வண்டிக்குச்சென்று அந்தச் சிறுபெட்டியை எடுத்து ஏற்கனவே ஏற்பாடு செய்திருந்தபடி குறித்த இடத்தில் கீழே போட்டு விட்டுச் சென்றிருக்க வேண்டுமென்றும், அவனைச்சேர்ந்தவன் அதை—பெட்டியை—எடுத்துக்கொண்டு போயிருக்கவேண்டுமென்று சந்தேகிப்பதாகவும் தந்தி வந்திருக்கிறது. அந்த வைரக்கல்லிழைத்த அட்டிகை ஐம்

பதினாயிரம் பவுன் மதிப்புள்ளதென்றும், ஐந்நூறு வருஷங்கட்கு மேலாக விஜயநகரத்தில் இருந்திருக்கிறதாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்களாம்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"இங்கு சந்தித்தவர்கள்தான் அதைத் திருடியவர்களோ?'' என்று வாய் குழறக் கேட்டாள்.

"ஆமாம் அதிலென்ன சந்தேகம். வண்டி இந்தவழியாகத்தானே சென்றிருக்கின்றது. ஏற்கனவே செய்திருந்த ஏற்பாட்டின்படி திருடர்கள் இருப்புப்பாதையில் காத்துக்கொண்டிருந்திருப்பார்கள். பெட்டி கீழே விழுந்தவுடன் அதோடு இங்கே வந்திருந்து இரவைக் கழித்திருக்கிறார்கள் திருடர்கள்" என்று விபரமாகக் கூறினார்.

"திருடர்களல்ல, திருட்டுச்சொத்தை கைப்பற்றியவர்கள்" என்று சொல்லி அவரைத் திருத்தினேன்.

"ஆமாம், அந்தப்பதமே சரியான பதம்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"அந்த இரண்டு அன்னிய தேசத்தவர்களிடம் அந்த நகை இருக்கிறது. அவர்கள் கல்கத்தாவுக்குச் சென்றுவிட்டார்கள்" என்றான் அதுவரையில் என்னுடன் இருந்த வேலையாள்.

"அதுசரிதான். இந்நேரத்திற்குள் அவர்கள் கல்கத்தாவிலிருந்து இரங்கூனுக்குக் கப்பலேறி இந்தியாவையேவிட்டு நீங்கி இருப்பார்கள். கல்கத்தா போலீஸார் இவ்விதம் தாமதம் செய்கிறது சரியல்ல. ஆனால் இராஜகுமாரி, விஜயநகரத்திலிருந்து வரும்பொழுது அந்த நகைப்பெட்டியைக் கொண்டுவந்தாளா இல்லையா வென்பதே சந்தேகமாக இருக்கிறதென்றும், அவர்கள் விஜயநகரத்திற்கு அதைப்பற்றி தந்தியடித்திருப்பதாகவும், பதில் வந்தவுடன் கல்கத்தா போலீஸார்களுக்குத் தெரியப்படுத்து

வார்கள் என்றும் கேள்வி. அதுபற்றியே கல்கத்தா போலீஸ் தாமதிக்கிறார்கள்" என்று கூறினார் இன்ஸ்பெக்டர்.

"கிலகனும் அவனைச்சேர்ந்த மற்றொருவனும் இங்கு ஏற்கனவே மோட்டார் வண்டியில் வந்து, திருடிக்கீழே எறியப்படும் பெட்டியை எடுப்பதற்கு இருப்புப்பாதையில் காத்திருந்திருப்பார்கள்" என்று நான் குறித்தேன்.

"உண்மை அப்படித்தான் இருந்திருக்கவேண்டும். இந்த அம்மணி அதிகாலையில் என்னிடம் சங்கதியைச் சொல்லும்பொழுதே நான் சந்தேகப்பட்டேன். ஆனால் இந்த வேலையாளன் அப்பொழுதே நம்மிடம் சங்கதி சொல்லியனுப்பி இருப்பானேல் இவ்வளவு சங்கடமும் ஒழிந்திருக்கும்" என்று சேர்ந்துகூறி அவனைப் பார்த்தார்.

"ஆமாம் ஐயா அப்படி நான் செய்யாமற் போனேனே யென்று மிகவும் வருந்துகின்றேன். ஆனால் அதிகாலையில் மற்ற ஜனங்களைத் தொந்தரவு செய்யக்கூடாதென்னும் எண்ணத்தினாலேயே நான் தங்களை வந்து காணவில்லை" என்று ஒரு மன்னிப்புச் சொன்னான்.

"அந்த வண்டிகளின் நம்பரையாவது குறிக்கவில்லையோ ?" என்று இன்ஸ்பெக்டர் வேலைக்காரனைக் கேட்டார்.

"இல்லை" என்று பதில் கூறி, "நாள் ஒன்றுக்கு நூற்றுக்கணக்கான வண்டிகள் வருகின்றமையால் அவைகளை நான் கவனிக்கச் சாவகாசம் ஏது ? அந்த மூன்று வண்டிகள் இன்னின்ன வர்ணமானவை என்று கூட நான் அறியேன்" என்று முடித்தான்.

"ஆ ! அதுதான் நமக்கு உண்மை விளங்கவில்லை ஆயினும், யாரேனும் அவர்களையும் வண்டிகளையும் இங்

கிருந்து போகும்பொழுது வழியில் கண்டிருக்கலாம், அவர்கள் நமக்கு அந்தத் திருடர்களைப்பற்றி விவரிக்கலாம்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"இதோ இருக்கிற கனவான் அவர்களைக் கொஞ்சம் அறிவார்" என்று என்னைக் காட்டினாள். ஆச்சரியத்துடன் இன்ஸ்பெக்டர் என்னைத்திரும்பிப் பார்த்தார்.

"நான்—நான் ஒன்றும் அறியேன்" என்று தட்டுத்தடுமாறிக் கூறினேன்.

"அந்த இரகசியமான சந்திப்பின் அக்கிராசனத்தை வகித்தவரைத் தாங்கள் அறிவதாகச் சொன்னீர்களே?" என்று கபடமற்ற நெஞ்சத்தவளாகிய அவள் கேட்டாள்.

"ஐயா, இந்த முக்கியமான விஷயத்தில் தாங்கள் மௌனம் சாதிப்பீர்களாயின்,—நான் என்ன செய்வேன்,—சர்க்கார் உத்தரவுப் பிரகாரம் தாங்கள் கைதி செய்யப்படுவீர்கள். ஆதலால் இந்த விஷயத்தில் தமக்குத் தெரிந்தவற்றை உடனே சொல்லும்" என்று பயமுறுத்தினார், இன்ஸ்பெக்டர்.

"நான் ஒன்றும் அறியேன்" என்று மறுத்துக்கூவி, "அந்தத் திருட்டைப்பற்றி நான் ஒன்றும் அறியேன்" என்று பின்னும் உறுதிப் படும்படியாகப் பேசினேன்.

"ஆயினும் அவர்களில் ஒருவரைத் தாங்கள் அறிவீர்கள்" என்று குறித்தான் வேலையாளன்.

"அவர்களுடன் இருந்த பெண்பிள்ளையையும் தாங்கள் நிச்சயம் அறிவீர்கள்!" என்று சேர்த்தார் இன்ஸ்பெக்டர்.

"நீங்கள் இவ்விதம் கேட்கும் குறுக்குக் கேள்விகளுக்கு நான் பதில் சொல்லத்தயாராக இல்லை என்பதை அறியுங்கள்" என்று கோபத்தோடு சொன்னேன்.

"தாங்கள் அவ்விதம் சொல்லுவீர்களாயின் அதோ

இருக்கிற போலீஸ்டேஷனுக்கு அழைத்துப்போய் சூப்பிரண்டுதுரை யவர்களிடம் விடவேண்டியவனாக இருக்கிறேனே யென்று வருத்தப்படுகிறேன்" என்று உறுதியாகக் கூறினார்.

"ஆயினும் எனக்கு ஒன்றும் தெரியவராது" என்றேன்.

"என்னோடு வாருங்கள்" என்று, என்னைச்சந்தேகித்த விதமாக அழைத்து, "அங்கு சென்றால் தாங்களே உண்மையைக் கூறும்படியான நிலைமைக்கு வருவீர்கள்" என்று ஒரு மாதிரியான சிரிப்புடன் பேசினார்.

# இருபத்தைந்தாவது அத்தியாயம்

## அவளை அன்பான மொழியில் அழைத்த அழகநாதன்

என் இஷ்டத்திற்கு விரோதமாகப் போலீஸ்டேஷனுக்குச் சென்றேனாயினும் வாக்குமூலம் செய்யும்படி கட்டாயப்படுத்தப் பட்டேன். அந்த வாக்கு மூலத்தில், முதல் நாள் இரவு அந்தத்திருடர்களுடன் இருந்த பெண் பிள்ளை என்னுடைய மனைவி என்பதை முற்றும் மறைத்தேன். நான் தேச சஞ்சாரத்திலிருக்கையில் அழகநாதரைச் சந்தித்ததாகவும், அதுமுதல் அவருக்கும் எனக்கும் கடிதமூலமாக லேவாதேவி நடந்து வருவதாகவும், அவர் கல்கத்தா வந்திருந்ததையறிந்து நான் விசாரித்ததில் பாடலீபுரம் வந்துவிட்டதாகக் கேள்விப்படவே, அவரைச் சந்திக்க எண்ணி இங்கு வந்தேன் என்றும் எழுதிவைத்தேன்.

"இதைத்தவிர இங்கு வந்திருப்பவர்களைப்பற்றி உண்மையாகவே தாங்கள் யர்தும் அறியீர்களோ" என்று இன்ஸ்பெக்டர் என்னை வினவினர்.

"தேச சஞ்சாரத்தில் அழகநாதரைக்கண்டு, அதிக யோக்கியர் என்று எண்ணி, பணம் கொடுக்கல் வாங்கல் வைத்துக் கொண்டதைத் தவிர வேறு யாது உண்மையையும் நான் அறியேன்" என்று விடையளித்தேன்.

அங்கிருந்த சூப்ரெண்டாகிய பெரியதுரை நான் சொல்லிய விதத்திலிருந்து என்னையோர் முட்டாளாகக் கருதி விட்டார் என்று அவருடைய புன்முறுவலால்கண்டு கொண்டேன். உண்மையைக் கூறுமிடத்து என்னைவிட முட்டாள் வேறொருவர் இருப்பார் என்று நான் நினைக்கவில்லை.

"உண்மையாக அவர்கள் அதிக சாதுரியமான மனிதர்கள்" என்று குறித்த பெரியதுரை, "விஜயநகர இராஜகுமாரியின் அட்டிகை புகைவண்டியில் பிரயாணம் செய்த ஒருவனுலேயே களவாடப் பட்டிருக்கவேண்டும். நான் இப்பொழுதே கல்கத்தாவுடன் டெலிபூன் (Telephone) பேசினேன். திருட்டு நடந்த அன்றையத்தினம் ஒரு புதிதான டிக்கட் பரிசோதகர் வண்டியில் வந்து பரிசோதனை செய்ததாகவும், அடிக்கடி இரயிலில் பிரயாணம் செய்பவர்களிற் சிலர் அவன் புதிதாக நியமனம் செய்யப்பட்டவனுக இருக்கக்கூடும் என்றும் நினைத்ததாகவும், அவனும் கம்பெனி சட்டை தலைப்பாவுடன் இருந்தமையால் அவனை யாரும் சந்தேகிக்க இடமில்லாமலிருந்ததெனவும், பாடலீபுரம் வர இரண்டு ஸ்டேஷன்கள் இருக்கையிலேயே பாடலீபுரத்தின் பயணச் சீட்டை எல்லாம் அவன் பிரயாணிகளிடமிருந்து வசூலித்து விட்டான் எனவும், பிறகு பிரயாணிகள் பாடலீபுரம்போய் இறங்கியவுடன் வழக்கம் போல் பயணச்சீட்டை வசூலிக்க இரயில்வே மனிதர்கள் வந்தனரெனவும், பிறகு பிரயாணிகளும் டிக்கட் பரிசோதகர்களும் அந்த ஆச்சரியமான சம்பவத்தை இரயில்வே அதிகாரிகட்குத் தெரியப்படுத்தி இருக்கிறுர்கள் எனவும் தெரியவருகிறது" என்று சொன்னுர்.

"ஆனுல் அந்தப்போலி டிக்கட் பரிசோதகன் ஒருபக்காத்திருடனுக இருக்க வேண்டும்" என்றேன்.

"அதிற் சந்தேகம்இன்று. அவன் அவ்விதம் டிக்கட் பரிசோதிப்பவனைப் போல் வண்டிகளிலெல்லாம் போய் வருகையில் இராஜபுதல்வி ஏறிச்சென்ற தனி வண்டியிலும் போயிருந்து நகையைத்திருடி ஏற்கனவே குறிக்கப்பட்டிருந்த இடத்திற்குச் சமீபமாக இரயிலில் வந்தவுடன்,

அந்நகைப்பெட்டியை எடுத்துக், கீழே எறிந்திருக்கிறான்" என்று கூறினர்.

"என்ன சாதுரியமான திருட்டு" என்று ஆச்சரியத்தோடு அவரைப்பார்த்தேன்.

"ஆமாம்; அந்த வைரக்கல்லிழைத்த அட்டிகை பலபெயருடைய கைகளினின்றும் தாண்டிகடைசியாக இந்தியாவையே விட்டு வெளியே இதற்குள் கொண்டுபோகப் பட்டிருக்கிறதே. இதிலிருந்தே அவர்களுடைய சாதுரியம் நன்கு தெரிகின்றதல்லவா ?" என்று எனக்கு மறுமொழியாகக் கூறினர்.

"ஆமாம்," என்று உறுதியாகக் கூறி, "நான் அவர்களைச் சேர்ந்தவனும் அல்லன்; நான் சொன்ன விஷயங்களைத் தவிர வேறொன்றும் அறியேன். அப்படிநான் அவர்களுடையதோழனுக இருப்பேனுயின் இதுவரையில் இங்கிருந்து அவர்களைப்பற்றிய கதையைக் கேட்டுக்கொண்டிருக்கமாட்டேன்" என்று பெரியவரைப்பார்த்தேன்.

"அதைப்பற்றி அவ்வளவொன்றும் நான் யூகிக்கவில்லை" என்று ஒருமாதிரியாகப் பதில்பகர்ந்து "ஏன்! போலீஸ் சேவகர்களை ஏமாற்றி வேறு வழியில் நடக்கும்படியும், அவர்களைப்பற்றிப் போலீஸார் என்ன ஏற்பாடு செய்கிறார்கள் என்று அறிவதன் பொருட்டும் அவர்களைச் சேர்ந்தவர்களே ஒன்றும் அறியாதவன் போலவேடம் பூண்டு சங்கதியறிந்து போவதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஐடா நான் தம்மைப்பற்றி சில விஷயங்கள் அறிந்து கொள்ளும் வரையில் அதாவது இன்று சாயங்காலம் வரையில் தாங்கள் இருக்கவேண்டும் என்று சொல்லும்படியாக இருக்கின்றதே என்று வருந்துகின்றேன்" என்று அதிசாதுரியமாயும் தாழ்மையாயும் பேசினர்.

"என்ன!" என்று கூவி, "என்னை இங்கு தாமதப்படுத்துகிறீர்களா?" என்று கோபமாய்க்கேட்டான்.

"இதில் அந்தஸ்து குறைவு கிடையாது. தாங்கள் இந்தப்பட்டணம் முழுமையும் எங்குசெல்ல வேண்டுமென்றாலும் செல்லலாம். ஆனால் இப்பட்டணத்தைவிட்டு வெளியே செல்லப் பிரயத்தனப்படாதீர்கள்" என்று எனக்குத் தைரிய வசனம் சொன்னார்.

இதை நான் கேட்டவுடன், என்னைப்பற்றி விசாரிக்கும்படியாக என்னுடைய விலாஸத்தைப் பெரிய துரையிடம் கொடுத்தேன்.

"எனது கடமையை நான் செய்யவேண்டியவனாகிறேனே என்று தான் பரிதாபப்படுகிறேன். நான் தங்களை மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுதலெல்லாம் இன்று சாயங்காலம் வரையில் தயவுசெய்து இவ்வூரிலேயே இருங்கள் என்பதுதான். அந்த கொள்ளைக் கூட்டத்தில் ஒருவனைத் தாங்கள் அறிவீர்கள் என்றீர்களே!" என்றார்.

"சரி தங்களுக்கு யார் யாரைக் கேட்கவேண்டுமோ அவர்களை எல்லாம் கேட்டு சந்தேக நிவர்த்தி செய்து கொள்ளுங்கள்" என்று அவரைப் பொருட்படுத்தாமல் கூறி எனது வக்கீலினுடையவும் பாங்கிக்காரனுடையவும் விலாசங்களைக் கொடுத்துப் போலீஸ்டேஷனினின்றும் வெளியில் சென்றேன்.

அந்த அழகநாதன் என்னும் மனிதன் யாராகஇருக்கலாமோ? அவனுடன் அல்லவா எனது— — — சீ, அவள் ஓடிவிட்டாள். அவன் கெட்ட சூதாடியாயும் மோசக்காரனுயும் இருக்கவேண்டும். அவன் அமிர்தாவை "கண்ணே" என்று அழைத்திருக்கிறான். அவனுக்கே நாடகக்கொட்டகையில் அவள் சைகைசெய்தாள். எனக்குக் கடிதம்

எழுதிவைத்து விட்டே அவள் என்னுடன் நாடகத்திற்கு வந்திருக்கிறாள்.

ஆ! என்னே என்னுடைய சந்தோஷம் இருந்தவா? எனது சுகம் சென்ற விடம் தெரியவில்லை. அந்தப் பழைய பட்டணத்தில் இன்ன விடம் செல்லுகிறேன் என்று தெரியாமல் நடந்து செல்லும் பொழுதே என்னை யறியாமலே எங்கு பட்டணத்து எல்லையைக் கடந்து விடுவேனோ வென்று பயந்து மீண்டும் வந்தவழியே திரும்புவேன்.

சாயங்காலம் ஆறுமணிக்குப் பெரிய ஹோட்டல் போய்ச் சேர்ந்தும் அவளைப் பின்தொடர்ந்து உண்மையை அறிய வேண்டுமென்னும் அவா மேலிட்டு நின்றது.

அந்த ஹோட்டலின் வேலையாளன் என்னைப் பல கேள்விகள் தாழ்மையாகக் கேட்டானெனினும், நான் சரியானபடி பதில் கூறவில்லை; அதிக சீக்கிரம் கல்கத்தா செல்லவேண்டுமென்றுகருதி போலீஸ் இன்ஸ்பெக்டரை எதிர் பார்த்தவண்ண மிருந்தேன்.

சாயங்காலம் எட்டுமணி சுமாருக்குப் போலீஸ்டேஷனை யடைந்து பெரியதுரையைக் கண்டுகொண்டேன். என்னைப்பற்றி அவர் விசாரணை செய்ததாகவும் என்மீது சந்தேகமில்லை என்றும், என்னுடைய இஷ்டம்போல் நான் செல்லலாமென்றும் அநுமதி கொடுத்ததின் பேரில் எனது மோட்டார் வண்டியில் ஏறி அப்பையாவுடன் கல்கத்தாவை நோக்கிப் பயணமாயினேன்.

போகும் பொழுதே, அமிர்தா தனது கணவனையும் தன்னுடைய வீடு வாசல்களையும் வேண்டுமென்று விட்டுப் போகாள் என்றும், யாரிடத்திலோ பயந்து அவன் சொல்லுகிற பிரகாரம் நடந்திருக்கிறாள் என்றும் எனக்குத்

தோன்றியது. ஆனால் என்னுடைய புகைப்படத்தை அழக நாதன் எரித்ததின் காரணம் மட்டும் விளங்கவில்லை.

அந்தகாரம் சூழ்ந்த அவ்விரவில் பனியால் உண்டா கும் குளிரை இலக்ஷியம் செய்யாமல் பிரயாணம்செய்து அதி காலை இரண்டுமணிக்கு முன்னதாகவே வீட்டை யடைந்தேன்.

எனது சையா கிரகத்திற் படுத்தேனாயினும் எனக்கு நித்திரை வந்திலது. அமிர்தா எங்கு சென்றாள்? அவளு டைய இரகசியமான தோழர்கள் யார்? அவளை அன்பான மொழியில் அழைத்த அழகநாதன் யார்? அவர்கள் செய்யும் சூழ்ச்சிக்கு முதற்காரணம் யாது? என்னும் இவைபோன்ற பலஞாபகங்கள் மனத்தே தோன்றிக்கொண் டிருந்தன.

## இருபத்தாறுவது அத்தியாயம்

### மறைந்து தோன்றும் தெய்வசக்தி

நாட்கள் வாரங்களாயின. ஊரிலுள்ள பத்திரிகைக ளெல்லாம் அந்த விநோதமான திருட்டைப்பற்றித் தலையங்கம் எழுதுவதும், குறிப்பு விசேஷக்குறிப்பு எழுது வதுமாக இருந்தன. ஆயினும் உண்மை மட்டும் வெளிவா வில்லை. இதேமாதிரியான திருட்டு ஆறு மாதங்களுக்கு முன்னர் பஞ்சாப்பில் இரயிலில் நடந்ததாகவும், அப் பொழுதும் ஒரு நவீனடிக்கட் பரிசோதிப்பவனே வண்டி யில் காணப்பட்டதாகவும், விலையுயர்ந்த சாமான்களை வண் டியின்றும் கீழே எறிவதே அவர்கட்கு சௌகரியம் என் றும் நான் கேள்விப்பட்டேன். அப்பேர்ப்பட்ட சாதுரி யத் திருடர்களினாலேயே இந்தத் திருட்டு நடத்தப்பட் டிருக்கவேண்டுமென்றும் பலர் சந்தேகித்தனர்.

இந்தத் திருட்டைப் பற்றிப் பத்திரிகையில் வரையப் பட்டுள்ள ஒவ்வோர் வார்த்தையையும் படிப்பேன்; உண்மை யோர்புறம் இருக்க சில பத்திரிகைக்காரர்கள் கண்ணை மூடிக்கொண்டு தனக்கு இஷ்டமான கதைகளைச் சொல்லுவதையும் நான் வாசித்தேன். அவர்களில் ஒரு வர் "எல்லாவற்றிற்கும் அந்தக் கூட்டத்தில் சேர்ந்திருக் கிறதாகக் கூறப்படும் பெண்ணே காரணம் என்று நாம் நம்புகிறோம்" என்று எழுதி யிருந்தார். அவைகளை எல் லாம் படிக்கப் படிக்க இன்னும் என்னென்ன நவீனமான தீங்குகள் விளையுமோவென்று பயந்துகொண் டிருந்தே னுகையால் நான் வெளியில் போவதை யொழித்தேன்.

கோவிந்தராம் புனுவிலிருந்து கல்கத்தா வந்து சேர்ந்

தான். எனது இல்லாள் இல்லாமலிருப்பதைக் காட்டிக் கொள்ள மனமற்றவனாக, அவள் சதாசிவ பண்டாரத்தின் வீட்டுக்குப் போயிருப்பதாகக் கூறினேன்.

"நீ எப்பொழுதும்போல் காணப்படவில்லையே என்ன சங்கதி?" என்று வினவினன் கோவிந்தராம்.

"விசேஷமாக ஒன்றுமில்லை. கொஞ்சகாலமாக கல்கத்தா பட்டணத்தை விட்டு வெளியே போகாமல் இருப்பது எனக்கு ஒருவிதமாக இருக்கிறது. கொஞ்சம் வெளிதேசம் செல்லவும் எண்ணி இருக்கிறேன்" என்று அதிக சிரமப்பட்டுச் சிறிது சிரித்தேன்.

"வெளியில் போவதை உனது மனையாள் வெறுக்கிறதாகச் சொன்னாயே" என்று குறித்து, "நான் விஜய நகரம் சென்று வருகையில், சூரதா ரோட்டில் உனது மனைவியைக் கண்டேன். நான் நேராக இரயிலில் வந்துவிட்டேன். நான் வந்த வண்டியில் அவள் ஏறுமையால் வால்டேர் பக்கம்போகிற இரயிலுக்கே காத்துக்கொண்டிருந்தாள் என்று நினைத்தேன்" என்று சொன்னான் கோவிந்தராம்.

"சூரதா ரோட்டிலா?" என்று ஆச்சரியத்தோடு கூவிக் கேட்டேன்.

"ஆமாம். அவளுடன் வேறொரு மாதும் நின்றாள். அவர்கள் இருவரும் இருந்த விதத்திலிருந்து ஏதோ ஊர்ப்பிரயாணம் போகுமவர்களைப் போன்று காணப்பட்டனர்."

"அவளுடன் கூட இருந்தவளுக்கு வயதென்ன இருக்கும்?"

"நாற்பதுக்குள் இருக்குமென்று நான் நினைக்கிறேன்."

"ஆனால் அது அவளல்ல." என்று யோசிப்பவன் போல் சற்று தாமதித்துச் சொன்னேன்.

"நாகநாதா, என் போன்றவன் வேறொருத்தியைப் பார்த்து அமிர்தாவென்று சொல்லுவானா?" என்றான்.

"கோவிந்தா, ஆயின் அஃது அவளே என்கின்றாயா?" என்று உசாவினேன்.

எனது தோழன் அவனுடைய நீண்ட கால்களை ஜமக்காளத்தின் மீது நீட்டி நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து கொண்டு பின்வருமாறு பதிலளித்து :—

"நான் கண்டது அமிர்தா வென்பதற்கு ஆயிரம் ரூபா பந்தயம் கட்டுகிறேன். அவள் அன்றையத்தினம் வீட்டில் இருந்தாளோ?" என்று கேட்டான்.

இல்லை என்றே நான் சொல்ல வேண்டியவனானேன்.

"அப்படியானால் நான் அவளைக்கண்டது உண்மை தான்" என்று உறுதியாகக்கூறி நிமிர்ந்து உட்கார்ந்தான்.

அவளைப்பற்றி அவனுடைய அபிப்பிராயம் யாதென்று கேட்கவும் நினைத்தேன்; ஆனால் எனது மானத்தை நானே கெடுத்துக்கொள்ள இஷ்டமில்லாதவனாக நிறுத்திக்கொண்டேன்.

பிறகு அவனுடைய கட்டாயத்தின் பேரில், டேவிட் கோட்டை யண்டையிலுள்ள ஓர் வீட்டில் நடந்த உபந்நியாசத்திற்குச் சென்றோம். ஆயிரக் கணக்கான ஜனங்கள் காத்திருந்தனர். ஒரு பெரியவர் வரப்போவதாகக் கேள்விப்பட்டேன். மணி ஆறு அடித்தவுடன் சன்னியாசிக் கோலத்துடன் ஒருவர் அங்கு போடப்பட்டிருந்த உயர்ந்த பலகையின்மீது வந்து நின்றார். முதலில் அவர் யார் என்பது விளங்கவில்லையாயினும் கூர்ந்து கவனிததவுடன் சதா

சிவ பண்டாரம் என்று கண்டு ஆச்சரிய மெய்தினேன். உடனே அவர் பின்வருமாறு உபந்நியாசிக்கலாயினர் :—

"எனது அருமைச் சகோதரர்களே !

இன்றையத்தினம் நான் உபந்நியாசிப்பதாக உள்ள விஷயம், இப்பூவுலகில் மனிதர்களின் நிலைமை இப்பொழுது இருப்பதே சரி, என்பதாகும். அதாவது இறைவனுல் எந் தெந்த வஸ்துக்கள் சிருஷ்டிக்கப்பட் டிருக்கின்றனவோ அவைகள் யாவும் இப்பொழுது இருப்பதே சரி, என்று விளங்கக் கூறுவதே இந்த உபந்நியாஸத்தின் முதன்மை யான கருத்தாகும். சகல வஸ்துக்களும் இப்பொழுது இருப்பதே சரிதானு? என்று கேட்டால் யார் சரி என் பார்? பூலோகத்து விஷயங்களில் அநேகம் பலருக்குச் சரியில்லாதனவாகத் தோன்றும் பொழுது யாரே எல்லாம் சரி என்பார்? அப்படி இதை நம்பும்படியாக அவர்களு டைய மனச்சாக்ஷி தூண்டிய போதிலும் அவர்கள் சரி என்று ஒப்புக்கொள்ளப் பயப்படுவார்கள். இதை ஒப் புக்கொள்ள வேண்டுமானுல் மதசம்பந்தமான நீதிபோத னைகளும், இலௌகிக விஷயங்களில் செய்து வருகின்ற சீர் திருத்தங்களும், தற்காலத்திய மனிதர்களால் புதிது புதிதாகச் சேர்க்கப்பட் டிருக்கிற சட்ட திட்டங்களும், உபயோகமற்றுப் போவதோடு மனிதர்கள் விருத்தியாம் சம் பெறுவதைவிட்டு க்ஷீணித்துப் போவார்கள் என்று அவர்களே எண்ணிக் கொள்ளுகிறுர்கள். வஸ்துக்களின் புறம்பாயுள்ள உண்மைகளைக் கண்டு கொள்ளாமலே, நல்லவை தீயவை, என்று அபிப்பிராயப்பட்டு, நான் சொன்னதை ஒப்புக்கொள்ளாத குற்றம் ஜனசமூகத்தைச் சேர்ந்ததல்ல. ஒருவன் கொலை செய்கிறுன் ; மற்றவன் திருடுகிறுன் ; வேருெருவன் கட்குடிக்கிறுன் ; இந்தவித

மாக மனிதர்களால் அகிருத்திய மென்னப்படுவது எவ்வளவோ இருக்கின்றன. இவைகளை நான் சரியான கிருத்யங்கள் என்கிறேன். இத்துடன் புராதன மகான்கள் நமக்கென்று செய்திருக்கிற நூல்களில், பூலோகமே துக்க சாகரமென்றும் அதன் நாலு இடங்களிலும் படுகுழிகள் பல இருக்கின்றனவென்றும், ஆகையால் ஒவ்வொருவரும் நல்லவை பற்றி அல்லவை ஒழித்து வாழவேண்டு மென்றும் காண்கிறோம்.

"நல்லது தீயது என்பவைகளைப்பற்றிப் பேசப்புகுமுன் முதலில் ஒவ்வொரு மனிதனும் நல்லது இன்னதென்றும் தீயது இன்னதென்றும் தெரிந்துகொண்டால்தான், தானும் தன்னுடைய நடத்தையும், சரியா அல்லவா என்பதைத் தெரிந்துகொள்ளக்கூடும். இவைகளைத் தெளிவாக அறிவதற்கு ஒருபடிக்கல் இல்லாததுதான் குறைவாக இருக்கிறது. அப்படி இருக்குமேயாயின், ஒவ்வொன்றையும் அந்தப்படிக் கல்லை வைத்து நிறுத்திவிடலாம். பின்னும் நன்மை என்று ஒரு சாரார் சொல்லுவதை வேறு சிலர் தீமை என்றும், பலரால் தீமை என்று, நீக்கப்படுவதை அநேகர் நன்மை என்று கொள்ளுவதையும் நாம் கண்கூடாகக் கண்டிருக்கிறோம். ஆகையால் இதனின்றும் நாம் வந்தமுடிவாவது, தீச்செயல்கள் என்பவை அவரவர்களுடைய இனத்திற்கும், காலத்திற்கும் தேசத்திற்கும் போல வேறு படுகின்றன. ஆகையால் குறிப்பிட்ட ஒரு காரியத்தை அஃது நல்லதா அல்லதா என்று யாருமே சொல்லமுடியாது. இப்படி இருந்தும், அநேகர் சிலவற்றை நல்லவை என்றும் சிலவற்றைக் கெட்டவை என்றும் நிச்சயமாகவும், சந்தேகமற்றும், சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்பவர்கள் தங்களுடைய சுய

புத்தியைச் செலுத்தி ஆழ்ந்து யோசித்துச் சொல்லாமல் யாரை அவர்கள் மகான்களாகவும், மேதாவிகளாகவும், பெரிய மனிதர்களாகவும் பாவிக்கின்றார்களோ அவர்களுடைய வாக்கையே ஆதாரமாகக்கொண்டு பேசுகின்றார்கள். அப்படி மற்றவர்கள் சொல்லுவதை நாம் ஏன் நம்ப வேண்டும்? அப்படி நீங்கள் சொல்லுவதற்குக் காரணம் என்ன? என்று அவர்களுடைய மகான்களைக் கேட்டவர்களுமல்லர். சாதாரணமாகவே, உலகத்தில் ஜனங்கள் சிறிதும் மூளையைச் செலவிடாமலே ஒரு விஷயத்தைப்பற்றித் தாங்களே அபிப்பிராயப்பட்டு எல்லாம் அறிந்ததாக மதித்துக் கொள்ளுகின்றனர். நாம் ஆராய்ந்து பார்ப்போமானால் ஒவ்வொரு விஷயத்தினுடைய உண்மையை முற்றும் தெரிந்திருக்கிற ஒருவனைக் காண்பதே இயலாத காரியம். "பிழைசெய்வதே மனித சுபாவம்" என்பது மகான்களுடைய உண்மையான தீர்மானமாகும். பிறகு நமது சொந்த புத்தியினால் தர்க்கித்துக் கண்ட உண்மையை விட, வேறொருவருடைய மனோ அபிப்பிராயத்தை நாம் முற்றும் சார்ந்திருப்பது தகாது. மற்றவருடைய சர்வ சிலாக்கியமான அபிப்பிராயத்தையும் நாம் நம்முடைய நுண்ணிய அறிவால் ஆராயாமல் போவோமானால் நமது புத்தி நாளுக்கு நாள் சுருசுருப்புக் குன்றி கடைசியாக சுத்த சூனியமாகிவிடும். அதுபற்றியே பன்முறையும் நன்கு ஆராய்வதே புத்தி விருத்திக் காரணமாக இருக்கிறது என்று கண்ட நம் முன்னோர்கள் மூளையைப் பலவிதத்தும் அபிவிர்த்தியாக்கும் தர்க்கநூலை உண்டாக்கினர். அடிக்கடி கையாடினாலன்றி எந்த உறுப்பும் பிறகு வேலைக்குப் பயன்பட்டு வாராது.

"எந்த அறிவாளியான தார்க்கிகனும், அறியாததும்

அறியக்கூடாததுமான ஒரு சக்தி இருக்கிறதென்றும், அதனின்றும் வெளிப்படுதல், எவருக்குமே கூடாத காரிய மென்றும், ஒப்புக்கொள்ளுவான். எல்லையற்ற அறிவைக் கொண்டே அந்த சக்தி சகலப் பிராணிகளையும், சகல பதார்த்தங்களையும், நடத்துகின்றது. நம்மை இவ்வுலகில் ஆள்கின்ற இயற்கையின் உண்மையான சட்ட திட்டங் களை நாம் அறிந்து கொள்ளுவோமானால், மனிதனுடைய ஒவ்வொரு எண்ணங்களும் செய்கைகளும் உண்டாவதற் குக் காரண பூதமாக இருக்கிற தெய்வீக சக்தியைத் தெரிந்து கொள்ளுவோமானால், இறைவனுடைய கட்ட ளையை உள்ளபடியே உணர்ந்து கொள்ளுவோமானால், இன்னது சரியென்றும், இன்னது தவறு என்றும் கண்டு கொள்ளுவதற்கு படிக்கல்லாவது வேறு யேதாவது ஒன் றைத் தேடவேண்டிய அவசியமாவது இல்லாமலே, சரி யானவைகள் யாவையென்றும், தவறானவைகள் யாவை யென்றும் எளிதில் சந்தேகமறக் கண்டுகொள்ளலாம்.

"மேலே சொல்லப்பட்ட பலவற்றுள் இறைவனுடைய கட்டளை என்பதைப்பற்றி யோசிப்போம் இறைவனு டைய கட்டளை என்று சொல்லக்கூடிய ஒரு விஷயம் பூலோகத்தில் இருக்கின்றதா ? என்ற வினாவுக்கு விடை. ஆமாம் என்று சொல்லலாம். கிறிஸ்தவர்களுக்குத் தெய்வ கட்டளை பத்து என்றும், இந்துக்களுக்கும் மற்றவர்களுக் கும் கணக்கற்றவைகள் என்றும் நீங்களே அறிவீர்கள். ஒவ்வொரு மதத்திலும் இன்னின்னவைகள் செய்யப்பட வேண்டுமென்றும், இன்னின்னவைகள் செய்யா தொழிக் கப்பட வேண்டுமென்றும், காணப்படுகின்றனவோ அவை களே தெய்வ கட்டளைகளாகப் பாவிக்கப்பட்டு வருகின் றன. ஆதலால் தெய்வகட்டளை என்னப்பட்டது பல

மாறுபாடுடையதாகவும் எண்ணற்றதாகவும் இருக்கின்ற தென்று நாம் தெரிந்து கொள்ளுகிறோம். அப்போர்ப் பட்ட கட்டளைகளை யாரும் மீறி நடக்கிறதில்லையா? எல் லோரும் அவைகளின்படியே தான் நடக்கிறார்களா? என்ற கேள்விகளைக் கேட்போம். இறைவனுடைய அப் பேர்ப்பட்ட கட்டளையை மீறி நடந்ததில்லை என்று எந்த மனிதனும் மனப்பூர்வமாகச் சொல்லான். அதாவது எல் லாமனிதனுமே தெய்வகட்டளையை மீறி நடக்கிறான் என் றாகிறது. என்னை? தெய்வகட்டளையை மனிதர்கள் யாங் ஙனம் மீறி நடக்கக்கூடுமென்ற எண்ணம் என் மனத்தை தடுமாறச் செய்தது. வெகுகாலம் அதைப்பற்றி யோசித்த பிறகு உண்மை விளங்க, மனோசமாதானம் பெற்றேன். ஆகையால் தெய்வ கட்டளைகளென்று ஒரு சில இருக்கு மாயின் அதினின்றும் மனிதர்கள் கடந்துவிட முடியா தென்றும், அதை மீறிநடப்பது கூடாதென்றும் ஒருவித முடிவிற்கு வந்தேன். தெய்வகட்டளைகளாக இருக்குமா யின் மானிடர்கள் அவைகளைமீறுவது கூடாதகாரியமல் லவா? இறைவன் பூலோகத்தின் ஏதோ ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு, தன்னுடைய இஷ்டத்திற்கு மாறாக மனிதர்கள் அவரவர்கள் இஷ்டம்போல் செய்துகொள் ளட்டும் என்று விட்டு இருக்கிறவரா? அப்படியாயின் அவர் கடவுளே யல்ல. சகல சக்திவாய்ந்தவரும் எங்கும் நிறைந்தவருமானவராக அவர் இருக்கையில், அவருடைய இஷ்டத்திற்கு மாறாக மனிதர்கள் எந்தக் கெட்டகாரியத் தையும் அதுவும் அவருடைய முன்னிலையில்—எப்படி செய்யக்கூடும்? அது அவருடைய இஷ்டத்திற்கு விரோத மாக இருக்குமாயின் கண் முன்னிலையிலேயே அதைச் செய்யும்படி விடுவாரா? அப்பேர்ப்பட்ட கெட்ட காரி

யங்கள் செய்த குற்றத்திற்காக தண்டிப்பாரல்லவா! அவ் விதம் தண்டிப்பது அவருக்கு அழகா? தன்னுடைய இஷ்டத்திற்கும் நியாயத்திற்கும் விரோதமான செய்கைகளை மனிதர்கள் செய்யும்படி விட்டுவிட்டு இவைகளின் நிமித்தம் மனிதர்களைக் கண்டிப்பது அவருடைய கருணைக்கு இலக்ஷணமாகுமா? அவர் அவ்விதம் இருப்பது அசாத்தியம் என்பதுமட்டும் உண்மை. ஆகையினால், நான் சொல்வதாவது யாதெனில், தெய்வகட்டளை என்ற ஒன்று இருக்குமாயின் அதை மீறி நடக்கும் ஆற்றல் மனிதர்களாகிய நமக்குக் கிடையாது; நம்மால் கடக்க முடியுமானால் அதைத் தெய்வகட்டளை என்பதையாரே ஒப்புக்கொள்ளுவார்! அப்படி தேவாக்ஞையை மனிதர்கள் கடக்கக் கூடுமானால் அவரை (கடவுளை) அவருடைய ஸ்தானத்தினின்றும் தள்ளிவிட்டு அதை, மனிதர்கள் அடைந்து விடலாமே! ஆஸ்திகர்களாகிய எல்லோரும் அவர் ஒருவரே சகல சக்திவாய்க்கப் பெற்றவர் என்பதை ஒப்புக்கொள்ளுகின்றனர் அல்லவா!

"ஆகையினால் மனிதர்களால் எதெது தடுக்க முடியாதவைகள் என்று கண்டுபிடித்து அததற்கே தெய்வ ஆக்ஞை என்ற பெயர் கொடுப்போம். அப்பேர்ப்பட்ட ஒரு விஷயம் இல்லாமலே இருக்குமாயின், இறைவன் நமக்கு அப்பேர்ப்பட்ட எந்த கட்டளையையும் தந்தருளவில்லை என்றே கொள்ளல் வேண்டும்.

"ஆயின் இறைவனுடைய கட்டளைகள் என்பவைகளே இல்லையா என்று ஒருவன் வினவுவானாயின், புத்தி என்ற விளக்கைக்கொண்டு சற்று சிரமப்பட்டுத் தேடுவானாயின், தன்னுடைய உத்கிருஷ்டமான ஒப்புயர் வில்லாத மனோவபீஷ்டத்தை எந்த மனிதனும் மீறி நடக்கமுடியா தென்

னும் முடிவிற்கு வருவான். இங்கு மனேவபீஷ்டமென்று ஏன் உபயோகிக்கிறேன் என்ருல் நடத்தைகளின் ஆதி காரணமாகிய காதல், பகை, விருப்பு, வெறுப்பு முதலிய வைகளுக்குக்காரணமாக இருப்பதுபற்றி. மனிதர்கள், தங்களுடைய நேயர், தாயார், தந்தையார் குரு முதலியவர்களுடையவும், தாம் வசிக்கும்படியான தேச சக்கிராதிபனுடையவும் கட்டளைகளை மீறி நடக்கின்றுர்க ளாயினும், தம்முடைய இஷ்டத்திற்கு மாருக நடக்கவாவது, இஷ்டத்தைத் தடுக்கவாவது எந்த மனிதர்களுக்கும் சக்தியில்லை. எவைகளைச் செய்ய வேண்டுமென்று இரகசியமாக மனிதன் நினைக்கிருனே, சமயம் வந்தபொழுது அவைகளைச் செய்தே தீருகிருன். அரசனுடையவும், குருவினுடையவும், பெற்ருேருடையவும், நேயருடையவும் உத்திரவு அவைகளைச் செய்யாமல் தடுப்பதற்குச் சக்தியற்றதாக இருக்கிறது. எவ்வளவு இடுக்கண்கள் நேர்ந்தபோதிலும் அதைச் செய்தே முடிக்கிருன். தன்னுடைய சக்தியில் இருந்து, சமயமும் நேருமானுல் எந்தமனிதனும் தன்னுடைய உடலுக்கே தீங்கு உண்டாவதாக இருப்பினும், கொண்ட எண்ணத்தை நிறைவேற்ருமற் போவதில்லை. இதுவே—சகல செய்கைகளுக்கும், காரணமாக இருக்கிறசக்தி—உள்ளுக்குள்ளே இருக்கும் எண்ணமாகிய இதுவே—இறைவனுடைய கட்டளை என்று நான் சொல்லுகிறேன். ஒவ்வொருவனும், மற்ற எல்லாருடைய உத்திரவையும் இஷ்டத்தையும் நிராகரித்துத் தான் கொண்ட ஒன்றையே நிலைநிறுத்த முற்படுகிருனல்லவா? அதற்குக் காரணம் யாதெனில், தன்னையறியாமலே கடவுளினுடைய கட்டளையை மறுக்கச் சக்தியற்றவனுக இருப்பது தான். அவருடைய சர்வ வல்லமையின் முன் மனித

னின் சக்தி பயன்படாமற் போவதுதான்; மீறி நடக்க முடியாத அவருடைய கட்டளையின் பிரபாவம் அதுவே. அவருடைய ஆக்ஞையை நமது இஷ்டத்தின் வழியே செலுத்துகின்றார் என்று சொல்லல் சாலப்பொருத்த முடையதாகும். நமது இஷ்டத்தைமட்டும் நாம் அறிகிறோமே யொழிய அந்த இஷ்டம் ஏன் உண்டாயிற்று என்பது நமக்கே விளங்கவில்லை. நம்முள் இறைவனின் ஆக்ஞாஸ்தானமாகிய, அந்தரங்க மனத்தினின்றும் அவைகள் உண்டாகின்றன. அரசர் பயங்கரமான தண்டனையைச் சொல்லி பயமுறுத்தினுங்கூட ஒவ்வொருவனும் தத்தம் இஷ்டத்தினாலேயே நடத்தப்பட்டோ, இழுக்கப்பட்டோ இருக்கிறான் என்பதை யாருமே மறுக்க முன் வரமாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஏனென்றால் மனிதனுடைய இஷ்டங்களும் உள் எண்ணங்களுமே சர்வஜீவதயாபரனாகிய இறைவனின் கட்டளைகளாகின்றன. அவருடைய கட்டளை ஒன்றேயல்ல(Two things cannot occupy a place)ஒன்று இருக்கும் சமயத்தில் இரண்டிருக்கமாட்டா என்னும் தர்க்க நியாயப்படி, அதாவது தரையின் மீது ஒரு செப்பு வைக்கப்படுமாயின் அது இருக்கிற அதே சமபூமியில் வேறுஎதையும் வைக்கமுடியாதன்றோ? ஆனால் அந்தச் செம்பை யெடுக்காமல் இன்னொருபொருளை அதன் பக்கத்தில் வைக்கலாம்; அதன் மீதும் வைக்கலாம். அந்தச் செம்பை எடுத்துவிட்டு வேறு எதையும் வைக்கலாம். இதையே நான் இங்கு சொல்ல வந்தேன். ஆகையால் தேவகட்டளைகள் ஒரு மாதிரியாக இல்லாமல் வேறுவேறாகவே இருக்கின்றன. சாதாரணமாக மனிதர்கள் சொல்லிக்கொள்ளுகிற நன்மைதீமைஎன்பவைகளை இப்பொழுது ஒதுக்கிவைக்கிறேன். ஒருவனுடைய எண்ணம் அவனைத்

திருடும்படி தூண்டுகின்றது. மற்றவனோ தன்னுடையமனோ பீஷ்டத்தால் பிறர் மனை புகுகிறான். இந்த விதமான இரண்டு எண்ணங்களும் தெய்வ கட்டளை என்று சொல்லக் கூடிய ஸ்ரேஷ்டமான ஆக்ஞைகளேயாகும். அவைகளுக் குக் கட்டுண்டிருக்க வேண்டுமேயொழிய மீறி நடக்க அவ்விருவர்களாலியலாது. அவைகளின்நிமித்தம், பூலோக தெய்வங்களாகக் கருதப்படும் மன்ன மன்னவர்களுடைய சட்ட திட்டங்களைக்கூட அவ்விருவரும் நிராகரிக்கின்ற னர்.

"தங்களுடைய வருகையால் என்னைக் கௌரவப்படுத் திய கண்ணியவான்களே! தாங்கள் அடாத செயல்களா கக் கருதி இருக்குமவைகளைத்தெய்வகட்டளை என்பதற்கு என்னை நிந்தியாமல் போகீர்கள் என்பதை நன்கு உணர் வேன். ஆயினும் தயை செய்து முற்றுங் கேளுங்கள்."

நீண்ட காகோஷம்; மறுபடியும் நிச்சப்தம் குடி கொள்ள பண்டாரம் பேசலாயினர்.

"ஆரியமணிகாள்! அப்படி நீங்கள் நினைத்தபோதி லும் நான் தெளிவுபடக் கூறவேண்டிய வேலையைக் கைக் கொண்டமை பற்றி மறுபடியும் சொல்லுகிறேன். மனிதர் களால், தவறு என்றும், தீங்கு என்றும், பாபம் என்றும் சொல்லப்படும் அவைகளை ஒருவன்செய்வானாயின், அவனை நிந்தனையுடன் பார்ப்பது மாத்திரமன்றி, அவன் தெய்வ கட்டளையின்படி நடந்தான் என்றும் யோசியாமல் அவனைப்புவியில் ஸ்ருஷ்டி செய்ததற்காகவும், அவன் குற்றம்—மனிதர்களால் பாபமாக எற்படுத்தப் பட்டி ருக்கிற குற்றம்—செய்த அந்த இடத்திலேயே அவனைத் தண்டிக்காததற்கும் நீங்கள் கடவுளை நிந்தித்து வரு கின்றீர்கள். தன்னுடைய கட்டளையின்படியே நடந்த ஒரு

வனை இறைவன் ஏன் தண்டிப்பார்? கடவுள் என்றால் என்ன வென்றும், அவருடைய ஆக்ஞையாதென்றும், சிருஷ்டியின் தாத்பரிய மென்ன வென்றும், மனிதர்கள் கொஞ்சமாவது யோசிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள்.

"மனிதன் செய்யும் ஒவ்வொரு காரியமும் அவன் மனத்தே உதித்துள்ள எண்ணத்தை, அதாவது தெய்வ கட்டளையை முன், அறிவிப்பதாக இருக்கிறது. மனிதன் தன்னுடைய உள் எண்ணத்திற்கு மாறாக நடக்கமுடியாமல் இருப்பதோடு, அப்பேர்ப்பட்ட எண்ணம் உதிக்கின்ற தற்குக்காரணம் யாதென்றாவது, அது எவ்விடத்தினின்று உதிக்கின்றது என்றாவது அறியமுடியவில்லை. எதைச்செய்ய வேண்டுமென்று ஒரு மனிதன் நினைக்கின்றானே, அதை மறுநிமிஷத்தில் செய்ய மனமற்றவனாகிறான். அவனுடைய எண்ணம் ஒரு விஷயத்தைச் செய்ய இச்சை கொள்ளினும் கூட உள்மனம் விடாமையால் அதைச் செய்கிறதில்லை. அதற்குக் காரணம் யாது? அவ்விதம் செய்வதானது தன்னுடைய விருத்தியம்சத்தைக் கெடுக்கும் என்பதை உணருகிறான். பிறகு முன்னையினும்விட சிலாக்கியமான எண்ணம் உதிக்க ஆரம்பிக்கிறது. இவ்விதமாக ஒன்றன் பின் ஒன்றாக எழும் எண்ணங்களே மனிதனை மேலும் மேலும் முன்னேக்கிச் செல்லுமாறு செய்கின்றன. ஒரு எண்ணத்திற்கும் மற்றொரு எண்ணத்திற்கும் உள்ள தொடர்பையும் ஒவ்வொரு எண்ணத்திற்கும் தனக்கும் உள்ள பந்துத்துவத்தையும்,ஒவ்வொருஎண்ணம் காரணமாகத்தான்விருத்தியம்சம் பெறுவதற்கு உள்ள சம்பந்தத்தையும் எந்த மனிதனும் தெரிந்து கொள்ளவும் இல்லை, சரியாக அறிந்து கொள்ளவும் முடியாதவனாகவே இருக்கிறான். தன்னு

டைய இஷ்டத்தினின்றும் அடையக்கூடிய அனுபவத்தின் பயன்யாதென்று ஒருவன் ஆழ்ந்து யோசிப்பானாயின் கூர்மையான புத்திவிருத்தியும், வரவர பக்குவஞானம் அதிகரிப்பதுமே என்பதை அறிவான். ஆகையினால் ஒருவனுக்கு உதிக்கும் எண்ணங்கள் அல்லது இச்சைகள் யாவும் மனிதனுடைய நன்மைக்கும் மனிதனுக்கு வழிகாட்டவுமே இறைவனால் அளிக்கப்படுகின்றன என்று நான் சந்தேகமறக் கூறுவேன்.

"ஸர்வ சக்திவந்தருடைய இஷ்டத்தின் பிரகாரம் நடப்பதே சரியென்று மேற்சொல்லப் பட்டவைகளினின்றும் விளங்குகின்றதல்லவா! எல்லோரும் தம்முடைய எண்ணங்களின் படியும் இஷ்டங்களின் படியும் நடந்து இறைவனின் கட்டளைகளை நிறைவேற்றுகிறார்களில்லையா! இப்படி இருக்கையில் பாபத்தையும், தீய செயல்களையும் யார் செய்கிறார்கள்? ஆகையால் எந்த மனிதனால், எந்த இடத்தில், எந்தசமயத்தில், எந்த விஷயம் செய்யப்பட்டபோதிலும் அஃது சரியேயொழிய தவறில்லை.

"மனிதர்களால் செய்யப்படும் தொழிற்களை நீக்கி, மிருகாதிகள் செய்பவைகளைக் கவனிப்போமாயின் அவை எவ்விதமான பாபமும் செய்யவில்லைஎன்றும், ஸர்வேஸ்வரனை கடவுளின் கட்டளைகளாகிய அவைகளின் எண்ணங்களின் பிரகாரமே நடக்கின்றன வென்றும் தெரியவரும். ஒரு மனிதனுடைய செய்கை ஒரு ஜனசமூகத்திற்காவது ஒரு ராஜ்ஜ்யத்திற்காவது தீங்கை விளைக்குமானால், ஜனசமூகத் தலைவர்களும், அரசர்களும் அவனைத் தண்டிப்பது போலவேயே, நாமும் மிருகங்களால் தொந்தரவடையும் போது அவைகளை அடிக்கிறோம் இம்சிக்கிறோம்; அப்படியிருந்தும் அவைகள் வேண்டுமென்று குற்றம் செய்வதாக

நாம் கொள்ளுகின்றோமில்லை. மற்ற உயிர்ப்பிராணிகளை விட மனிதனுக்கே பகுத்தறிவுஉள்ளமையால் அவன் செய்கின்ற காரியங்களுக்கு அவனே உத்திரவாதி யென்று மொத்தமாக ஜனங்கள்கூறுகின்றனர். பகுத்தறிவு ஒன்றே மனிதனைத் தீயவழியினின்றும் கண்டித்து அவனுடைய எண்ணத்தை ஆளுந்திறன் வாய்க்கப்பெற்றுள்ளதென்பது மதியீனம். நமது அனுபவத்தை யொட்டி கவனிப்போமாயின், ஒருவனுடைய எண்ணங்களும், நடத்தைகளும் அதிக நவவலியுற்றவைகளாக இருக்குமாயின் பகுத்தறிவு யாதும் பயன்படாதென்பது மறுக்க முடியாத விஷயம் என்று கண்டு கொள்ளுவோம்; பகுத்தறிவு எனப்பட்டதானது ஸர்வதயாபரனாகிய இறைவனால் நமக்கு அளிக்கப்பட்ட ஒரு சிறு வெளிச்சமென்றும், அதன் உதவியால் நம்மைச் சுற்றியுள்ள சிலவற்றைமட்டும் கண்டுகொள்ள முடியுமே யொழிய மனிதர்களுக்கும் மற்றவைகளுக்கும் புறம்பாயுள்ளவிஷயங்களை அறியமுடியாது. மனிதனுடைய பகுத்தறிவானது அவனுடைய இயற்கையான எண்ணங்களையே சார்ந்திருக்கின்றது. அப்பேர்ப்பட்ட எண்ணங்கள் என்ன வென்று ஆலோசிப்போமாயின் மறைந்து தோன்றும் தெய்வசக்தியால் ஒரு மனிதன் இன்ன விதமாக ஆக்கப்படுவான் என்று முன்னமேயே தெரிவிக்கும் ஒரு ஜோசியம் போலாகும்; மனிதன் அப்பேர்ப்பட்ட தெய்வ கட்டளையுடன் சேர்ந்தே நடக்கவேண்டியவனாகிறான். எண்ணங்கள் பகுத்தறிவால் ஆளப்படாமல் இறைவனுடைய கட்டளையின் படியும் அவனுடைய மேம்பார்வையின்படியும் ஆளப்படுகின்றன என்பதை ஒவ்வொருவரும் மனதில் கொள்ள வேண்டும்.

## இருபத்தேழாவது அத்தியாயம்

"இராம ப்ரஸாத் அவர்களே!"

"இவைகளை நாம் தேவகட்டளையாகக் கொள்வோமாயின் இதன் பிரகாரம் நடக்கும் ஒரு மனிதன் தனக்காவது ஜனசமூகத்திற்காவது தீங்கை இழைப்பவனாவானென்று கவனிக்கவேண்டியது அவசியம். இதைக் கவனிப்பதற்குமுன், சில காரியங்களை மட்டும் பாபம் என்று ஏன் சிலர் கருதுகின்றனர் என்று யோசிப்போம்; அத்தொழிற்கள், செய்வோரையும் செய்யப்படுவோரையும், துக்கத்திலும் சங்கடத்திலும் ஆழ்த்துகின்றமையால் சாதாரண ஜனங்கள் அப்பேர்ப்பட்ட கிருத்தியங்களைத் தீயவைஎன்று அழைக்கின்றனர் என்றுதோன்றுகின்றது. இறைவன் கட்டளைகளாகிய இயற்கை. சட்டதிட்டங்களை அறியாமையால் மட்டும் இடுக்கண் என்பதை மனிதர் வெறுக்கின்றனர். இடுக்கண்களானவை ஆத்மவிருத்திக்கு உபகாரிகளாக இருக்கின்றனவென்றும், அப்பேர்ப்பட்ட துக்கங்கள் மட்டுமே ஆத்மாவுக்கு உண்மையும் பிரயோஜனமான உதவியைக் கொடுக்கக் கூடியவைகளென்றும், மனிதர் தெரிந்து கொள்ளுவார்களாயின் அவைகளைப் பாபகிருத்தியங்கள் என்று இகழமாட்டார்கள். எல்லாம் வல்ல கடவுளினுடைய சிருஷ்டி சாமர்த்தியமே சாமர்த்தியம்! புல் பூண்டு முதல் மனிதன் வரையிலுள்ள சகல ஜீவராசிகளையும் உற்பத்திசெய்து, அவைகள் எல்லாவற்றையும் மனிதனுக்கு இயற்கைக்குருவாக நியமித்திருக்கிறார். அப்படி அந்த மனிதன் அந்த வஸ்துக்களிடத்திலிருந்து கற்றுக்கொள்ளாமல் இருந்தானாயின், துக்

கத்தை அவனுக்கு உண்டுபண்ணி அவன் கற்காமல் விட்டவைகளைக் கற்கும்படியாகச் செய்கிறார்.

"கஷ்டங்கள் இறைவனால் நமக்கு அளிக்கப்பட்ட ஆசீர்வாதங்களாகும்; பாபம் செய்வதன் பலன் கஷ்டத்தை யனுபவிப்பதேயாகும், என்பது மனிதருடைய கொள்கை. பாபத்தைச் செய்து அதன் பலனாக இடுக்கண்களை அனுபவியாமல் போனால் ஒருவனுடைய ஜீவன் மேலான பதவியை அடைவது யாங்ஙனம் கூடும்? நடக்கப் பிரியங் கொண்டிருக்கிற குழந்தை பன்முறையும் நடக்க முயன்று கீழே அநேக தடவைகள் விழுந்து தானே நடக்கக் கற்றுக்கொள்ளுகின்றது. அவ்விதம் விழுந்து விடுவோமே என்ற பயம் அதற்கிருக்குமாயின் அது எப்படி நடக்கக் கற்றுக்கொள்ளும்? அந்த மாதிரியாகக் கற்றுக் கொள்ளவேண்டி எழும்புவதே நாம் நம்முடைய வாழ்நாட்களில் செய்துவருகின்ற பாபகிருத்தியங்களென்றும், அவ்வாறு எழுந்து விழுவதால் உண்டாகும் காயங்களே நாம் அனுபவிக்கும் துக்கங்கள் என்றும் கொள்ளல் வேண்டும். இது நிற்க, இன்னுமோர் உதாரணங் கூறுகின்றேன். ஒரு சித்திரக்காரன் அத்தொழிலை அப்பியஸிக்கும்பொழுது, எவ்வளவு காகிதம் பென்சில் முதலியவைகளை வீணாக்குகிறான்? எவ்வளவு படங்களை எழுதிக் கிழித்தெறிகிறான்? இவைகள் யாவும் என்ன? அவனுடைய தவறுகளல்லவா? அந்தத் தவறுகளினின்றும் அடையும் பயன், அவன் கைதேர்ந்த ஒரு சித்திரக்காரனாவதேயன்றோ. அஃதேபோல மனிதன் செய்யுந் தவறுகளும், குற்றங்களும், பாபங்களும் இறுதியில் வெற்றிக்கும், மேன்மைக்கும் காரணங்களாக இருக்கின்றன.

" ஒருவன் திருடுகிறான்; மற்றவன் அப்படிச் செய்வ

தில்லை. இதைப்பார்த்த மனிதர்கள் திருடனைப்பார்த்து, தன்னுடைய எண்ணங்களைக் கட்டுப் படுத்தக்கூடிய வன்மை இருந்தும், திருடுவதற்கு தன் புத்தியை விடுவதால் கெட்டவன் என்று அவனை இகழ்ந்தும், மற்றவனை அப்பேர்ப்பட்ட எண்ணங்களைத் தன் மனதினின்றகற்றுவதால் நல்லவனென்று புகழ்ந்தும் பேசுகின்றார்கள். ஆனால் உண்மையை ஆராய்வோமானால் அவர்கள் சொல்லுவது தவறென்பது விளங்கும். ஆனால் இவைகளை நாம் கூர்ந்து யோசிப்போமாயின் முன் சொல்லப்பட்டவனாகிய திருடனுயை ஆத்மா சுமார் பத்து வயதுள்ள குழந்தைக்குச் சமமாகவும், அப்படிச் செய்யாமலிருக்கிற மற்றவனுடையதோ நல்ல முதிர்ந்த ஒரு பெரிய மனிதனுக்குச் சமமாகவும் ஒப்பிடலாம். பத்து வயதுள்ள ஒரு குழந்தை அதிக பாரத்தைச் சுமக்கக்கூடாமையை நாமே கண்டிருக்கிறோமல்லவா? நாம் சித்தாந்தத்திற்கு வருவதெல்லாம் ஸ்தூல உலகத்தைக் கொண்டே வருவது சரியன்று. ஸூக்ஷ்ம உலகத்தைக் காண நாம் சக்தியற்றிருப்பது காரணமாக எல்லாருடைய ஆத்மாவும் ஒரே மாதிரியாக இருக்கின்றனவென்று சொல்லுவது பெரும் பிழையாகும். எப்படி இரண்டு முகங்கள் ஒன்றுபோலிருப்பதில்லையோ அப்படியே ஆத்மாவும் ஒன்றைப்போலிருப்பதில்லை. மனிதர்களுடைய ஆத்மா ஒரே விதமாகவும் ஒரே சக்திவாய்க்கப் பெற்றதாகவும் இருக்குமாயின் அவர்களுடைய நடத்தைகள் யாவும் ஒருவிதமாகவே இருக்கும். ஒவ்வொரு ஆத்மாவும் வேறுபட்ட குறிப்புகளினின்றும் புறப்பட்டு வெவ்வேறு விதமாக நிற்பதோடு அவரவர்களுடைய வழியும் வேறுபட்டிருக்கிறது. ஒருமனிதன் ஒருசமயத்தில் செய்யும் காரியத்தை மற்றவர்களெல்லாம் செய்வார்கள் என்றெந்த

மனிதனும் பகுத்தறிவைக் கொண்டு ஆராய்ந்து சொல்லான். ஒரு வாலிபன் எப்படி சரியான வயதடைந்தவுடன் பளுவான வஸ்துவைத் தூக்குவானே அஃதேபோல ஒருவனுடைய ஆத்மா சரியான பக்குவதிசை யடையுமாயின். தீச்செயல்களைச் செய்யான். இதிலிருந்தும், தீச்செயல்கள் அவ்வளவு பாரமானவை யல்லவென்றும், நல்ல காரியங்கள் அதிகமான பளுவென்றும் நாம் கொள்ளவேண்டும்.

"ஒருவன் தீங்கு செய்வதின் பிரயோஜனம் யாது? கஷ்டத்தை யனுபவித்தல். மனிதனை நல்வழிப் படுத்துவதற்கு கஷ்டத்திற்கே அதிகமான சக்தி இருக்கிறது. எப்பேர்ப்பட்ட கைதேர்ந்த உபாத்திமாரையும்விட ஒருவனுடைய அனுபவமே—அதிகமான கஷ்டத்தினாலும் மனோவியாகூலத்தினாலும் பெற்ற அனுபவமே—அதிகப்பயனுள்ளதாகிறது. மேற்சொன்னவைகளிலிருந்து, தவறு, பாபம், இவைபோன்றவை, அவை செய்பவனுக்குப் பிரயோஜனமாக இருப்பது மாத்திரமன்றி, அவனுடைய முன்னேற்றத்திற்கு அவை அத்தியாவசிய மாகவும் காணப்படுகின்றன.

"தீய செயல்கள் எப்படி ஜனசமூகத்திற்குக் கேட்டை யுண்டாக்குகின்றனவென்று பார்ப்போம்;—நடுவழியில் ஒரு மனிதன் கொள்ளையடிக்கப்படுகிறான். அத்துடன் சிலசமயங்களில் திருடன் அவனை அதிகமாகக் காயப்படுத்தியும் செல்லுகிறான். திருடனோ நகையால் லாபமடைகிறான். நகையை இழந்தவன் அடியுண்டுகஷ்டப்படுகிறான். பிறகு, அடிபட்ட மனிதன் இனி தனியே செல்லுவதில்லை. என்று சரியான பாதுகாப்புடன் செல்லத் தொடங்குகிறான். அடிபட்டதற்குப் பிரயோஜனமாக அவ்விதம் செல்லுவது தவறென்னும் ஓர் அனுபவத்தைப் பெறு

கிறுன். இவ்விதமான குற்றங்கள் அதிகமாகுமாயின் அக்குற்றவாளிகள் அரசாங்கத்தாரால் தண்டனேயடைவதிலிருந்து அப்பேர்ப்பட்ட காரியங்களினின்றும் விலகுவார்கள். ஆகையால் ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமான கஷ்டத்தை யனுபவிக்கின்றுனே அவ்வளவுக் கவ்வளவு முன்னேற்றமடைகின்றுன். கடைசியாக பாபம், குற்றம் இவைகள் யாவும் ஜனசமூகத்திற்கு மொத்தமாகவும், குறிப்பிட்ட ஒரு மனிதனுக்குத் தனித்தனியாகவும் கேட்டையாவது கஷ்டத்தையாவது கொடுக்காமல் முன்னேற்றம் அடைவதற்கே காரணங்களாக இருக்கின்றன.

“ஒரு மனிதனுவது, அவனுடைய மனமாவது முன்னேற்றம் அடைவதென்றுல், மனிதனுடைய ஒரு பாகமாக இருக்கிற மனது ஏராளமான அனுபவஞானம் பெற்றிருக்கின்றதென்று கொள்ளல்வேண்டும். அப்பேர்ப்பட்ட ஞானத்தை ஒருமனிதன் அடைவதென்றுல் கஷ்டத்தை அனுபவிப்பதினுல் மட்டுமே அடையலாம். கூரிய புத்தியால் எதை நாம் அடையமுடியாதோ அதை கஷ்டம் அனுபவிப்பதால் அடையலாம். புத்திசாலியான சிலருடைய நடத்தைகள் அவர்களுடைய புத்திக்குச் சமானமற்றதாக இருப்பதை நாம் அனேகமுறை கண்டிருக்கின்றேம். இதற்குக் காரணம் அவர்களுடைய செய்கைகளால் தம்மைக் கஷ்டத்திற்குள்ளாக்காம லிருப்பதே என்று தோன்றுகின்றது. மனிதனுடைய மனேவழிகளைத் திருப்புவது அவனுடைய கஷ்டானுபவங்களே யொழிய அவனது புத்தி சாதுரியமல்ல.

“இறைவன் இவ்விதமாகவே மானிடர்கட்கு, மனதில் மேலும் மேலும் ஆசையை விருத்தி செய்து துக்கத்திற்கு

ஆளாகி, அதிலிருந்து அவர்களை முன்னேற்றதிற்குக் கொண்டுவருகிறார். இயற்கை சட்டங்களிலேயே அவை கள் இருக்கவேண்டிய அவசியம் ஏற்படுகிறதை நாம் உறு திப்படுத்துகிறோம். ஆகையால் எந்த மனிதனும் தவறும், பாபமுமாகிய செயலைச்செய்யவில்லை என்பது நன்றேவிளங் கும். தம்முடைய முன்னேற்றைத்தையும் பிறருடைய க்ஷேமத்தையும் கருதியே தெய்வகட்டளைகளாகிய அவை களுக்கு மனிதர்களெல்லோரும் கீழ்ப்படிந்து நடக்கின்ற னர். மேற்சொல்லி வந்த ஒவ்வொன்றையும் ஒன்றன்பின் ஒன்றாக ஒருவன் ஆராய்வானாயின், உயிருள்ள பிராணிகள் செய்யும் ஒவ்வொரு தொழிலும் சரியேயொழிய தவறல்ல என்னும் சித்தாந்தத்திற்கு வருவான்.

" கடைசியாக என் பிரிய சகோதரர்களே, தாங்கள் பார்ப்பவைகள் யாவும் சரியே என்று எண்ணுங்கள்! எல் லாம் நியாயமானவைகளாகவே கொள்ளுங்கள்! சகலமும் நன்மைக்கே என்னும் சித்தாந்தத்திற்கு வாருங்கள்! இவைகளை எல்லோருக்கும் பொதுவாக யான் சொன்னே னெனினும், ஸத்வ குணசீலர்களை உத்தேசித்தே சொல்லி யிருக்கிறேன். ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரகர்த்தாவாயும், ஸர்வக்ஞராயும், ஸர்வசக்திவந்தராயும், சித்ஸ்வரூபராயும், ஆநந்தமயராயும், கருணாசாகரமாயும் இராநின்ற இறை வன் உங்கள் எல்லோருக்கும் மேலேசொன்ன ஞானத்தைக் கொடுத்து இரக்ஷிப்பாராக ?" என்று சொல்லிக் கீழே இறங்கியவுடன் நீண்ட கரகோஷம் காதைத் துளை செய்தது. அவருடன் நான் பேசவேண்டுமென்னும் அவா வுடன் வெளியில் வந்து காத்திருந்தேன். ஆனால் கூட்டத் தோடு அவர் சென்றனரோ தெரியவில்லை; அன்றையத் தினம் அவரைப் பார்க்க முடியாமல் வீடு சென்றேன். வீடு

போய்ச் சேர்ந்தவுடன் அமிர்தாவின் ஞாபகங்கள் வந்தன. புராண வைராக்கிய மாகிய, உபந்நியாஸத்தின் நினைவு வரவே, அமிர்தா என்னை விட்டோடியதும், அவளுடைய நேயர்கள் என்னைக் கொலைசெய்யப் பிரயத்தனப்பட்டது சரியாவென்னும் சந்தேகம் ஜனித்தது. ஒரு நிமிஷம் சரியே என்றும் நினைத்தேன். மறு நிமிஷத்தில் இப்பேர்ப் பட்ட உபந்நியாஸகர்கள், தம்முடைய வாக்சாதுரியத்தைக் காண்பிக்கப் பேசுகிறார்களே யொழிய அவர்கள் தாம் சொல்லியபிரகாரம் நடந்து காண்பிப்பதில்லை என்றும், அஃது அவர்களாலாவது மற்ற சாதாரண மனிதர் களாலாவது செய்யும்படியான விஷயம் அல்லவென்றும் நன்கு உணர்வோனாதல் பற்றி அந்த உபந்நியாஸத்தை அதிகம் கௌரவிக்கவில்லை.

"மறுநாள் நான் சந்திரகாசியை அடைந்து சதாசிவ பண்டாரத்தைக் கண்டு முதல்நாள் செய்த உபந்நியாஸ சம்பந்தமாகப் பேசியபின்னர் பத்திரிகையில் சதா நீண்ட பத்திகளாக எழுதப்பட்ட கல்லிழைத்த பதக்கம் திருடப் பட்டதைப் பற்றியும் பேசினேன்.

" நான் காலைத்தபால் (Morning Post) பத்திரிகைக்கு விஷயதானம் செய்து வருகிறேனாயினும் அதில் வரும் பயங்கர விஷயங்களைப் பார்ப்பதில்லை," என்று மறுமொழி தந்தார்.

எம்முடைய வார்த்தையை வேறு வழியாகத் திருப்பு வதின் பொருட்டோ, அல்லது யாதுகாரணம் பற்றியோ அதைக் குறித்தார்.

அவர் அமிர்தாவினுடைய க்ஷேமத்தைக் குறித்துக் கேட்டபோது எனது பந்துவின் வீட்டிற்குப் போயிருப்ப தாகக் கூறும்படி நேர்ந்தது. சிறிது நேரஞ் சென்ற

பின்னர், " இரங்கையாவைத் தாங்கள் சமீபத்தில் கண்டீர்களோ?" என்று நான் வினவினேன்.

"இப்பொழுது ஒருமாதமாக ஒன்றும் இல்லை. அவர் பஞ்சாபிலிருந்தபோது எனக்குக்கடிதம் எழுதியிருந்தார்" என்று மறுமொழி தந்து, " தாங்கள் அவரைப்பார்த்தீர்களோ?" என்று கேட்டார்.

"சமீபத்தில் இல்லை" என்று ஒருமாதிரியாகப் பதில் பகர்ந்து மறுபடியும் அந்தத் திருட்டைப் பற்றிக் கேட்கலாயினேன்.

"ஐயா, நாகநாதரே, அந்த இரகசியமான குற்றங்களைப்பற்றி விசாரித்து, நீங்களேன் கஷ்டப்படுகிறீர்கள். தாங்கள் துப்பறியும் நாவல்கள் படிப்பவர்போலும்! துப்பறியும் நாவல்கள் படிப்பவர்களுடைய மனம் சமாதானம் அடையாமல் மேலும் மேலும் கதையையே தொடர்ந்து செல்லுகின்றது" என்று அந்த நவீனகங்களில் வெறுப்பு உள்ளவர்போலப் பேசினார். இன்பமான கட்டுக் கதைகளாக இருப்பினும் அவைகளைப் படிக்கும் அவா எனக்கு அதிகம் உண்டென்பதை அவரிடம் சொன்னேன்.

"இக்காலத்தில் நடைபெறும் பத்திரிகைகளே இன்பமான கட்டுக்கதைகளாக இருக்கின்றன. நான் பத்திரிகைகளில் வரும் வர்த்தமானங்களைப் பார்ப்பதே கிடையாது. ஒரு பத்திராதிபருக்கு எழுத விஷயம் அகப்படாமற் போகுமாயின், " லண்டன் நகரத்திலோடும் தேம்ஸ் நதியின்மீது சென்ற ஞாயற்றுக்கிழமையத்தினம் மேலிருந்து கீழே சென்ற கப்பல்கள் ஐயாயிரத்து நானூற்று நாற்பத்தொன்று." என்றும், " ஆபிரிக்கா சஹாரா பாலைவனத்தில் இருக்கும் ஒரு பனைமரத்தில் எழு கிளைகள் இருக்

கின்றன," என்றும் எழுதுவது வழக்கம்" என்ருர் பண்டாரம்.

சாயங்காலம் ஐந்துமணி வண்டியில் புறப்பட்டு வீடு வந்துசேர்ந்தேன். அமிர்தா ஏதேனும் கடிதம் எழுதியிருக்கிருளாவென்று விசாரித்ததில் அப்படியொன்றும் வரவில்லை. அவள் எனக்கு எழுதிவைத்துச் சென்ற கடிதம் பார்த்தபிறகும் அவள் கடிதம் எனக்கு எழுதுவாளா என்று சந்தேகநிவர்த்தி செய்துகொண்டேன்.

இராப்போஜனம் செய்துவிட்டு உட்கார்ந்திருக்கையில் என்னுடைய வேலைக்காரனுகிய அப்பையா பிரவேசித்து "சுவாமி, யாரோ ஒரு கனவான் தங்களை அதிமுக்கியமான விஷயமாகக் காணவேண்டுமென்கிருர்" என்று சொல்லி என்னிடம் ஒரு சிறிய துண்டுக் கடிதத்தைக் கொடுத்தான்; அதில் "இராமப்பிரஸாத்," என்று அச்சிடப்பட்டிருந்தது.

அந்தப் பெயரைப் பார்த்தமாத்திரத்தில் நான் திடீரென்று நின்றேன். அக்கொலைபாதக சங்கத்தில் சேர்ந்தவன் ஒருவனை எனது வீட்டிலேயே பிடித்துக்கொண்டு அவனிடமிருந்து உண்மையை அறிந்துவிடலாமென்று எண்ணி,

" அவர் எங்கே?"

"நம்முடைய முதற்கூடத்தி லிருக்கிருர். அவர் பிற நாட்டுக் கனவான்போல் தோன்றுகின்ருர்" என்று பதிலளித்தான்.

உடனே அவனை நான் போய்ப் பார்த்து, "இராம் பிரஸாத் அவர்களே!" என்று கூவி "தாங்கள் என்னைக் காணவந்த காரியம் யாது ?" என்று கடாவினேன்.

# இருபத்தெட்டாவது அத்தியாயம்

## " எனது மனைவி எங்கே "

தங்க மூக்குக் கண்ணுடியை அணிந்திருந்த குட்டையான மனிதன் எனக்கு மரியாதையாக வந்தனமளித்து, "ஐயா, நாகநாதரே, தங்களுடைய மனைவியைப் பற்றி சில இரகசியமான கேள்விகள் கேட்க விரும்புகிறேன்" என்று நான் கேட்ட கேள்விக்குப் பதில் பகர்ந்தான்.

" ஏது, மிதமிஞ்சிப் போய்விட்டாப்போலிருக்கிறது! எனது மனைவியின் விஷயங்களைப்பற்றிக் கவலை எடுக்கத் தாங்கள் யார்?" என்று அதிகமான கோபத்துடன் கேட்டேன்.

" ஆ, தயவு செய்து கோபசமனம் செய்யுங்கள். நான் தங்களுடைய நேயனாக இவண் வந்தேன்" எனவுறிந்து ஸ்தானியில் நவின்றான்.

" நீர் சொல்லுவதை நான் கொஞ்சமும் நம்பவில்லை. எனது நேயன், என்னுடைய விரோதிகளுடன் ஒருபொழுதும் சேர்ந்திரானே! விஜயநகர அரச குமாரியின் நகையைத் திருடியதில் சம்பந்தப்பட்டுள்ள இரங்கையாவுடனும் நந்தனனுடனும் நீர் சேர்ந்திருக்கின்றீர் என்பதை நான் அறிவேன்" என்றேன்.

சட்டென்று என்னைக் கூர்ந்து பார்த்து, "அதைப் பற்றித் தாங்கள் யாது அறிவீர்கள்?" என்று அதிகமான ஆவலுடன் என்னை வினவினான்.

எனக்கு எவ்வளவு தெரியுமென்று நீர் நினைத்திருக்கின்றீரோ அதைவிட நான் அதிகம் அறிவேன் என்பதை நம்பும்" என்று விடைகூறி " அதைத் தங்களிடம் சொல்ல

வும் தயாராக இல்லை. நந்தனன், ஜயன் இருவர்களைப் பற்றிய உண்மையையும், அவர்களுக்கும் எனது மனைவிக்கும் உள்ள சம்பந்தத்தையும் ஒளியாது புகல்வீராயின் தப்புவீர் ; இல்லையேல் அந்தக் கொள்ளைக் கூட்டத்தாருடன் சேர்ந்திருக்கிற தம்மை இந்த க்ஷணமே கைதி செய்வேன்" என்று பயமுறுத்தினேன்.

"ஐயா," என்று மரியாதையாக அழைத்து, எனக்குத் தெரியாத விஷயத்தைப்பற்றி நான் யாது சொல்ல முடியும். நான் இங்கிருப்பதின் காரணம் ஒரு உண்மையைப் பற்றித் தங்களைக் கேட்டு——" என்று ஏதோ சொல்லி முடிக்குமுன்.

"கேட்டு என்னைத் தப்பான வழியில் நடத்துவதற்கோ?" என்று கோபமாகக் கூவி, "நீரும் உம்முடைய நண்பர்களும் அதிகசாதுரியவான்களாக இருக்கலாம்—எனது காதலியை வீட்டினின்றும் வெளிப்படுத்துவதில் ஜெயம் அடைந்தீர்கள். காளிகட்டத்தில் நான் உயிர் தப்பியதே பெரிதாயது. ஆகையால் அந்தக் கூட்டத்தில் ஒருவனையாவது போலீஸார் வஸம் ஒப்புவிக்கிறேன்" என்று உறுதியாகக் கூறினேன்.

"ஓ! ஆனால் என்னைத் தாங்கள் 'அரஸ்டு, செய்வீர்களோ?" என்று உண்மையான பார்வையுடன் என்னைப் பார்த்துக் கேட்டான்.

"ஆமாம், நான் அதை உத்தேசித்திருக்கிறேன்" என்று என்னுடைய கைத் துப்பாக்கியைக் கையில் எடுத்துக் கொண்டு பதில் சொன்னேன்.

"தயவு செய்து அதை உள்ளே வையுங்கள்" என்று கெஞ்சி, "தாங்கள் செய்யப்போவதை யோசியுங்கள். என்

னைக் கைது செய்வதால் தாங்கள் அடையும் பயன் யாது?" என்று தாழ்மையாகக் கேட்டான்.

"நீர் உண்மையைப் பேசினால் ஆயிற்று, இல்லையாகில் போலீஸார் வசம் ஒப்புவிப்பேன். நான் இந்த மணியை அடிக்கவேண்டியதுதான் தாமதம். உடனே ஒரு போலீஸ் சேவகன் வந்து தம்மைக் கைது செய்வான்" என்று சொல்லி மேஜையின் மீதிருந்த மணியைச் சுட்டிக் காண்பித்தேன்.

"என்னைப் போலீஸாரிடம் கொடுப்பதாக நிச்சயித்தா விட்டீர்கள்?" என்று கேட்டு என்னைப் பார்த்துப் புன்னகை புரிந்தான்.

"அதைச்செய்யப் போகிறேன் என்பது நிச்சயமே" என்று முனிந்து பதில் பகர்ந்தேன்.

"அவ்விதம் தாங்கள் செய்வதற்கு முன்னால் நாம் சாவதானமாகச் சிறிதுநேரம் பேசுவோமே" என்று கூறி, "தாங்கள் காளிகட்டத்தில் உயிர் துறக்கும்படியாக வந்தது என்றீர்களே, அஃது எந்த இடத்தில்?" எனக்கேட்டான்.

"ஹனுமான் மந்திரத்தில் நடந்தது உமக்குத் தெரியாதது போல் ஏன் பாசாங்கு செய்கிறீர்?"

"நான் பாசாங்கு செய்யவில்லையே! நந்தனன் ஐயன் என்பவர்களைப்பற்றித் தாங்கள்யாது அறிவீர்களோ என்று தெரிந்து கொள்ளவே ஆசைப்படுகிறேன்" என்றான்.

"உமது நேயர்களைப்பற்றி நான் யாதும் அறியேன்" என்று உடனே பதில் பகர்ந்து, "அதைப்பற்றிப் பேச வேண்டியதில்லை. நான் இப்பொழுது வேண்டுவதெல்லாம் என்னுடைய மனைவியின் இருப்பிடமே" என்று ஆவலுடன் கேட்டேன்.

"தாங்கள் மனைவி எங்கு சென்றிருப்பார்களோ, நான் அறியேன்" என்று பதில் சொன்னான்.

"தமக்குத் தெரிந்தே இருக்கும்" என்று நான் அவரைக் கோபமாகப் பார்த்து, "உம்முடைய சகோதரசங்கத்தில் சேர்ந்தவரும், அவளுடைய தகப்பனுருமாகிய இரங்கையாவுடன் இருப்பாள்" என்றேன்.

"தங்களுடைய மனைவி இரங்கையாவுடன் இல்லை என்பது மட்டும் நிச்சயம்" என்று மறுமொழி தந்து, "அழகநாதனுடனேயே இருக்கவேண்டுமென்று நினைக்கிறேன்" என்று உறுதியாகக் கூறினான்.

"அந்த அழகநாதன் என்பவன் யார்?" என்று வினவினேன்.

சிறிதுநேரம் மௌனம் சாதித்து, "தயவுசெய்து தங்களுடைய மனைவியைக் கேளுங்கள்" என்று மொழிந்தான்.

"எனது மனைவியின் மீது வீண்பழிச் சொல்லையா கொண்டுவந்து வைக்கப் பார்க்கிறீர்?" என்று முன்னையினும் அதிகமான ஆக்குரோதத்துடன் வினவினேன்.

"சுவாமி, அப்படி நான் ஒருபொழுதும் நினைக்கவில்லை. நான் தங்களுடைய கேள்விக்கு விடையளித்தேன்" என்று தாழ்மையாகப் பதில் பகர்ந்தான்.

"இந்த உபயோகமற்ற பேச்சை நிறுத்தும். அவன் யாரென்று சொல்லுவீரா, மாட்டீரா?" என்று முனிந்து வினவினேன்.

"தற்போது முடியாதென்றே சொல்லவேண்டியவனாகிறேன்."

"அப்படியானால் மணியை அடித்துத் தம்மைக் கைதியாக்கும்படி செய்வேன்."

"ஆ, அதுவும் ஒருவேடிக்கையாகத்தான் இருக்கும்.

"தமக்கல்ல—எனக்கே வேடிக்கை."

"தங்களுக்கு என்ன இஷ்டமோ அதுபோல் செய்ய லாம்" என்றான் என்னைக்காணவந்த மனிதன்.

அவன் பேசியமாதிரியிலிருந்து கோபம் மூண்டவனாக, மேஜையின் மீதிருந்த மணியை அடித்தேன். உடனே எனது சேவகன் டெலிபூன் மணியை அடித்த சப்தம் எனது செவிக்கு எட்டியது.

"நான் வெளியே போகவேண்டும்" என்று கதவண்டையில் அவன் போகுமுன் கையில் துப்பாக்கியுடன் நான் வாசற்படியில் நின்று கொண்டேன்.

"ரொம்ப சரி;" என்று அவன் சிரித்து, "நாகநாதரே, தாங்கள் அநீதமான காரியம் செய்கிறீர்கள். நான் தங்களுடைய நேயனாக இங்குவந்திருக்கிறேன் என்று சொல்லும் உண்மையையும் நம்பேன் என்கிறீர்கள்!" என்றான்.

"தாங்கள், நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமையால் தான்."

அவன் அதற்குப் பதிலளிக்காமலிருந்தமையால், "எனது மனைவி எங்கிருக்கிறாள் என்பதை நன்கு அறிவீர்" என்றேன்.

"ஐயோ! எனக்குத் தெரியவராதே" என்று கெஞ்சுபவன் போலப்பேசி, "தங்களைச் சில விபரம் கேட்கவே நான் வந்தேன்" என்று முடித்தான்.

"கொலைபாதகர்களாகிய நந்தனன் ஜயன் இருவரையும் உமக்குத் தெரியாதென்று சொல்ல முடியாதல்லவா?" என்று கேட்டேன்.

"அவர்களைத் தெரியாதென்று நான் சொல்லவில்லையே" என்று பதில் பகர்ந்தான்.

"அப்படி இருந்தும், பாடலீபுரத்தில் அன்றிரவு

அக்கிராசனத்தை வகித்த—எனது மனைவியை வீட்டினின் றும் வெளிக்கிளப்பிச் சென்ற—மனிதனைத் தமக்குத் தெரிய வாதென்கிறீரே!"

"தாங்கள் என்னிடத்தில் உண்மையைக் கூறுவது போலவே நானும் தங்களிடத்தில் எதையும் ஒளிக்காமல் சொல்லியிருக்கிறேன்" என்று மறுமொழி யளித்தான்.

அவன் நேயன்போலப் பாவனை செய்து என்னை ஏமாற்ற எண்ணங்கொண்டிருக்கிறதாக அவனுடைய வேடிக்கையான சம்பாஷணையிலிருந்தும் அறிந்துகொண் டேன். ஆகையால் அவன் மீது என்னுடைய பகைமை அதிகரித்தது. அவனைக் கைதியாக்குவதே சரி என்று தீர்மானம் செய்துகொண்டேன்.

உடனே கதவை யாரோ தட்டுகிற சப்தம் கேட்டமை யால் கதவைத்திறந்தேன். அந்நேரத்தில் உள்ளே நுழைந் தார் ஒரு போலீஸ் அதிகாரி.

"நான் இந்த மனிதனைத் தங்களிடம் ஒப்புவித்துக் கைதியாக்க விரும்புகிறேன்" என்று உத்தியோகஸ்த னுக்கு மூக்குக்கண்ணாடி அணிந்திருந்த மனிதனைக்கையால் குறிப்பித்தேன்.

"என்ன குற்றத்திற்காக ஐயா?" என்று போலீஸ் அதிகாரி வினயமாகக் கேட்டார். அவருடைய பருத்த சரீரம் அந்த வாசற்படியின் வெளிப்புறத்திலிருந்த காற்றை உள்ளே விடவில்லை. அவருக்குப் பின்னால் மற்றொரு போலீஸ் சேவகன் நின்றுகொண்டிருந்தான்.

"விஜய நகரத்து இராஜ புத்திரியின் நகை களவாடப் பட்டதில் சம்பந்தப்பட்டிருக்கிறதற்காக" என்று நான் மறுமொழி கொடுத்தேன்.

வந்த போலீஸ் சேவகன் அவரையே கவனித்த வண்ணம் இருந்தான்.

"ஐயா, நாம் வெகுநேரம் இந்த விஷயத்தை வெகு தூரம் வளர்த்திவிட்டோம். இதோ பாரும்" என்று சொல்லித் தன்னுடைய சட்டைப் பையினின்றும் அவனுடைய புகைப்படம் ஒன்றை எடுத்துக் கொடுத்தான்—மூக்குக் கண்ணாடி யணிந்து என்னைக் காணவந்த மனிதன். அதில் "இராமப் பிரஸாத், இந்துதேசமுதல் துப்பறியும் உத்தியோகஸ்தர்" என்று எழுதப்பட்டு இராஜப் பிரதிநிதியவர்களின் கையொப்பத்துடன் ஆபீஸ் முத்திரையும் காணப்படவே நான் அவரை இன்னாரென்று அப்பொழுது தான் அறிந்துகொண்டேன்.

அதைப் படித்துப் பார்த்தவுடன் அந்தப் போலீஸ் உத்தியோகஸ்தரிடம் அதைக் காண்பித்தேன். அந்தப் புகைப்படத்தைப் பார்த்ததும் திடீரென்று தலையிலிருந்த குல்லாவைத் தொட்டு சலாம் செய்தார் வந்த போலீஸ் உத்தியோகஸ்தர். அதற்கு இராமப் பிரஸாத் மறுசலாம் செய்தார். அவ்விதமே தலை வணங்கினான். பக்கத்தே நின்றிருந்த சேவகனும்.

"ஐயா, எஜமானைப் பார்த்தபோதே சந்தேகங்கொண்டேன். ஆயினும் தாங்கள் பூண்டிருக்கிற வேஷத்தால் நான் உண்மையை அறியமுடியாதவனாயினேன்" என்று இராமப் பிரஸாதைப் பார்த்துச் சொல்லிவிட்டு, "இதுவரையில் இவரைத் தாங்கள் தெரிந்துகொள்ளாமல் இருந்ததுதான் ஆச்சரியமாக இருக்கிறது நேற்றையதினம் அலஹபாத்தில் இரண்டு தெலுங்கு தேசத்தவர்களைக் கைதி செய்திருக்கிறார் என்றதைத் தாங்கள் பத்திரிகை மூலமாக அறியவில்லையோ! அவ்விருவரும் காளிகட்டத்

தில் ஒரு அதிசயமான கொலை செய்த குற்றத்திற்காகப் பிடிக்கப்பட்டிருக்கின்றனர்" என்று போலீஸ் உத்தியோகஸ்தர் என்னைப் பார்த்துக் கூறினார்.

"காளி கட்டத்திலா? ஹனுமான் மந்திரத்திலோ!" என்று அவனுடன் வினவினேன்.

"ஆமாம்" என்று விடையளித்த துப்பறியும் உத்தியோகஸ்தர், "நந்தனன் ஜயன் இருவரையும் நான் அறிவேன். சில உண்மைகளை அறியவேண்டுமென்று நான் விரும்பியே அவர்களைத் தெரிந்துகொண்டேன். அவர்களுடைய நண்பனாகவும் நடித்தேன். அவர்கள் என்னைச் சந்தேகப்படவே இல்லை. அலஹபாத்தில் அவர்கள் இருவரையும் கைதி செய்துவிட்டு, சஹாராம், துள்ஜாராம் என்னும் இருவரையும் அரஸ்டு செய்து அவர்கள் இருந்த அறையைப் பரிசூதித்ததில் துள்ஜாராமுடைய அறையில் அந்த நகையைக் கண்டு பிடித்தேன்" என்று பின்னுங் கூறிமுடித்தார்.

"இவர்கள் இருவருமாகிய சஹாராமும், துள்ஜாராமுந்தான் பாடலீபுரத்தில் கடைசியாக நகையுடன் சென்றவர்களோ! அவர்கள் வெளிதேசத்திற்கல்லவோ போய் விட்டார்கள் என்று எண்ணினேன்" என்றேன்.

"தாங்கள் மாத்திரமா! எல்லோருமே அவ்விதம் எண்ணி இருந்தார்கள். நான் மட்டும் எல்லாத் துறைமுகங்களிலும் ஆள்வைத்திருந்தேன். அவர்கள் அந்த ஏற்பாட்டுக்கு பயந்தோ அல்லது யாது காரணங்கொண்டோ இங்கே வருபவர்களைப்போல் நடித்து அலஹபாத் சென்றுவிட்டனர். சின்னாட்கள் அங்கே வசித்துவிட்டு எல்லோரும் இந்த விஷயத்தை மறந்த பின்னர் வெளிச் செல்ல

எண்ணி இருந்தார்கள் போலும். அந்த எண்ணத்திற்கு நான் நடுவில் போய்ச் சேர்ந்தேன்" என்றார்.

அதன்பிறகு ஜயன் என்பவனே டிக்கட் பரிசோதகன் வேஷம் பூண்டு பெட்டியை எடுத்துக்கீழே எறிந்தான் என்றும், அந்த இடத்தில் அதாவது பாடலீபுரம் ஸ்டேஷனுக்கு எட்டுமைல் முன்னரே இரங்கையாவும் நந்தனனும் கைவிளக்குடன் நின்றார்கள் என்றும், அந்த விளக்கின் அடையாளத்தைக்கொண்டே ஜயன் பெட்டியைக் கீழே போட்டான் என்றும் உண்மையை உள்ளபடியே சொன்னார் இராமப்பிரஸாத்.

"ஆயின் என்னுடைய மாமனார் ஒரு திருடனாகவேண்டும்!" என்று குறித்து, "அதுபற்றியேதான் எனது மனைவி உண்மையைக் கூறப்பயந்து ஓடிவிட்டாள்" என்றேன்.

"தாங்கள், இரங்கையா என்னும் கிலகனையா அமிர்தாவின் தந்தையாகக் கொண்டிருக்கிறீர்கள்? அஃது தவறு" என்று கூறி,

"அவனைப்பற்றிய பெருங்கதை, எனது நீண்டகால அனுபவத்தில் இதுவரையில் கண்டிராத அவ்வளவு சாதுரியமான திருட்டும் கொலையும் கலந்த பெருங்கதை, யொன்றிருக்கிறது" என்று சொன்னார் இராமப்ரஸாத்.

"தயை கூர்ந்து அதைச் சொல்லுங்கள்!" என்று கேட்டு "எனது மனைவி எங்கே?" என்று பின்னும் பணிவுடன் வேண்டினேன்.

## இருபத்தொன்பதாவது அத்தியாயம்

### வாலிபனுடைய மிருத சரீரம்

"ஆ! நான் அதைப்பற்றி அறியாம லிருக்கின் றேனே என்று தான் வருந்துகின்றேன். ஆயினும் தங்களுடைய மனைவியின் நிமித்தம் நான் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்."

"அவள் நிமித்தமா? அஃது என்ன?" என்று அவசரமாய்க் கேட்டேன்.

"அவளைத் தாங்கள் நிந்தனை செய்யலாகாது. அவள் தங்களை விட்டுப் பிரிந்ததற்கு——சரி, பிரிந்ததற்குச் சரியான காரணம் இருக்கிற தென்பதைத் தாங்கள் ஒருநாள் அறிவீர்கள். அப்பொழுது அவளைக் கோபிக்கமாட்டீர்கள்" என்றார்.

"நான் அவளை என் முழுமனத்துடன் காதலிக்கும் பொழுது எங்ஙனம் கோபிக்க முடியும். எனக்கு ஏற்பட்ட கஷ்டங்களுக்கு அவள் காரணம் இல்லை என்பதை நான் நன்கு அறிவேன்" என்று பதில் கூறினேன்.

"அந்த இரண்டு கொலை பாதகர்களிடம் அவள் தப்பியது அவளுடைய நற்காலமென்றே சொல்லவேண்டும். பலமாதங்களாகவே அவர்களைக் கையும் களவுமாகப் பிடிக்கலாம் என்று சமயம் பார்த்தேன்; ஆயினும் அவர்கள் என்னைவிட சமர்த்தர்களாக இருந்தனர். இப்பொழுது அவர்களைத் தண்டிப்பதற்கு காளிகட்டம் ஹனுமான் மந்திரத்தின் கொல்லைப்புறத்திலிருந்து அகப்பட்டதே சாக்ஷி. நம் நாட்டிலே கொள்ளைக் கூட்டத்தவர்கள் சங்கம் என்றோர் சங்கம் நிலைபெற்றிருக்கிறது. அச்சங்

கத்தின் ஒருவனுகிய மணி என்பவன் ஹரிஹரன் என்னும் பெயரோடு இப்பொழுது அந்தமான் தீவில் வாஸம் செய்கிறுன். ராஜப்பிரதிநிதியின் இரண்டாவது காரியதரிசியாக இருந்த சிவகுமாரனைக்கொன்ற குற்றத்திற்காக ஹரிஹரன் தீவாந்தர சிக்ஷையடைந்தான். ஆனுல், இரங்கையா என்பவன் கொண்டுவந்த பொய்ச் சாக்ஷியினுல் அழகநாதன் என்பவனே சிவகுமாரனைக் கொலைசெய்ததாக ருசுப்படுத்தப்பட்டு இவனும் தீவாந்திரம் அனுப்பப்பட்டான். அந்த அழகநாதன் அந்தமான் தீவினின்றும் தப்பித்துக்கொண்டு வந்துவிட்டான்" என்று சொல்லி முடிக்குமுன்,

"அழகநாதன்!" என்று கூவி, "மனைவியுடன் ஓடியவனும், பாடலீபுரத்தில் அந்த இரகசியமான கூட்டத்தில் தலைமை வகித்தவனும் அவன் தானே?" என்று கேட்டேன்.

"ஆமாம். அவன் முதல்முதல் நமது கவர்ன்மெண்டில் நல்ல உத்தியோகத்தை வகித்திருந்தான். பிறகு அவன் பிடிபடுவதற்கு முன் அதிக சாமர்த்தியசாலியான கொள்ளைக் கூட்டத்தவர்களுக்குத் தலைவனுக இருந்தான். அவர்களைக் கண்டுபிடிப்பது இயலாத காரியமாக இருந்தது. ஏனெனில், அவர்கள் ஏராளமான பணத்தின் உதவியாலும் இரசாயன சாஸ்திரத்தின் உதவியாலுமே வேலை செய்வார்கள். அவன்—அதாவது அழகநாதன்—பிடிபட்டு தீவாந்தர சிக்ஷைபெற்று அந்தமான் தீவுக்கு அனுப்பப்பட்டவுடன் அந்தச் சங்கத்தின் தலைமை ஸ்தானத்தை இரங்கையா என்பவன் வகித்தான். அவன் தன்னுடன் சேர்ந்து திருடும் சகோதரர்களுக்கும் உண்மையானவனுக இரான். அவன் ஈனசாதியில் பிறந்தவன். அதிக தாழ்மையான புத்தியை யுடையவன்" என்ருர்.

"தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டும்" என்று முன்னர் வெளியே சென்ற போலீஸ் உத்தியோகஸ்தர் உள்நுழைந்து "ஹனுமான் மந்திரத்தின் கொல்லைப்புறத்தைப் பரிசோதிக்கையில் நமது இலாகாக்காரர்கள் இரண்டு எலும்புகளையே வெளியே எடுத்திருப்பதாகவும், அவைகளில் ஒன்று ஆணினுடைய தென்றும் மற்ருென்று பெண்ணினுடையதென்றும் பிரபல டாக்டர் சொல்லியிருக்கிருர். இவைகளைச்சொல்லவே வந்தேன்" என்று கூறி துப்பறியும் உத்தியோகஸ்தரை நோக்கிய வண்ணம் நின்ருன்.

"கொலை செய்யப்பட்ட இருவருடைய எலும்புகள்!" என்று அனுதாபமாகக் கூறி, "ஆயின் அங்கு தோண்டப்பட்டிருந்த குழி என்னை புதைப்பதற்காகவா தயார் செய்யப்பட்டிருந்தது?" என்று ஆவலுடன் வினவினேன்.

"ஆமாம் அதுதான் உண்மை" என்று மறுமொழி தந்த இராமப்பிரஸாத், வந்த போலீஸ் உத்தியோகஸ்தனைப்பார்த்து "நான் நந்தனைப்பற்றியும், ஜயனைப்பற்றியும், சந்தேகித்து உங்களுக்குத் தெரியப்படுத்தியபோது ஒருவரும் கவனித்தீர்கள் இல்லை. ஆனல் எனக்குமட்டும் அவர்கள்மீது சந்தேகந்தான். ஓ! போலீஸார் இப்பேர்ப்பட்ட விஷயங்களில் அதிகக் கவலை செலுத்தாமல் இருப்பது சரியன்று" என்று சொன்னர்.

வந்த மனிதன் எம்மிருவருக்கும் வந்தனம் செய்து சென்ருன்.

"இரங்கையாவைப்பற்றி இன்னும் அதிகம் சொல்லுங்கள்" என்று வேண்டினேன்.

"அவன் தங்களுடைய முதல் பகைவன். அவன் அமிர்தாவின் தந்தையைப்போல வேஷம்போட்டிருந்தும் அவனை

நேசித்திலன். அவளையும் வெறுத்தான், ஜயனை மணக்கும் படி அமிர்தாவை வற்புறுத்தினுன். ஆனால் அவள் தங்களைச் சந்தித்துக் காதலித்துக் கலியாணம் செய்துகொண்டாள். அவர்களை எல்லாம் வெறுத்ததே அவள் தங்களைக் காதலித்ததற்குக் காரணம். அவள் தங்கள் மீதுள்ள அன்பே காரணமாக, தங்களைக் கொல்லுவதற்காக அந்தப் பாவிகள் செய்யும் சதியாலோசனையை என்னிடம் வெளியிட்டாள். பிறகு அவளுடைய தகப்பனுரைப் போன்று வேஷம் பூண்டிருந்து தங்களுடைய நட்பைப்பெற்ற இரங்கையாவே, அந்த கொலை பாதகர்களாகிய ஜயன், நந்தனனிடத்தில், கல்பலதா அதுதான் அவளுடைய உண்மையான நாமதேயம்—அவர்களைக் காட்டிக்கொடுத்த விஷயத்தைப்பற்றி, ஒரு பொய்க்கதை சொல்லிவிட்டான்; இதனுலேயே அவர்கள் இருவரும் உங்களைக் கொல்லுவதற்கு ஏற்பாடு செய்தனர். நான் பின்னர் கேட்டதிலிருந்தும், அவர்கள் உங்கள் இருவரையும் சாதுரியமாக அழைத்து பாம்பின் பக்கத்திலிருந்த மரண சமானமான நாற்காலியில் உட்கார வைத்துவிட்ட தாகவும், அவளையும் பக்கத்து அறையில் அவ்விதமே பாடுபடுத்தியதாகவும், அவளுடைய நினைவு கெடுவதற்குள் யாரோ ஒருஊமைப்பையன் கொல்லைப்புறத்தில்—அவர்கள் கையில் அகப்பட்டு உயிர் துறந்துள்ள பலருடைய எலும்புகள் புதைக்கப்பட்டிருக்கிற கொல்லைப் புறத்தில்—நடமாடுவதையறிந்து, நீங்கள் உயிர் துறந்து விட்டீர்களா என்றும் கவனியாமல் கீழே சென்று விட்டனரென்றும், பிறகு அவள் வந்து தங்களை இரக்ஷித்த தாகவும் நான் அறிந்தேன். நீங்கள் பிழைத்திருப்பதை அவர்கள் அறிந்தவுடன் உங்களை எப்படியாவது கொலை செய்து விடவேண்டுமென்று அவர்கள் பகீரதப் பிரயத்

தனம் செய்தனர். நான் மட்டும் தங்களைக் காப்பாற்றும் வேலையைக் கைக்கொள்ளாமலிருப்பேனாயின், நல்லகாலத்தினால் அழகநாதன் அந்தமான் தீவிலிருந்து தப்பித்துக் கொண்டு வந்து தனது புதல்வியைக்காப்பாற்றாமல் இருப்பானாயின் நீங்கள் இருவரும் இறந்து வெகு நாட்களாகி இருக்கும்" என்று முடித்தார்.

"அவருடைய புதல்வியா" என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"ஆமாம். கல்பலதா, சுந்தரமூர்த்தி என்று சொல்லப்பட்ட அழகநாதனுடைய புதல்வியே. இரங்கையாவின் பொய்மொழியாலேயே அவன்சிவகுமாரனுடைய கொலையில் சேர்க்கப்பட்டு அந்தமான் அனுப்பப்பட்டான். கார்க்குடியில் அவளுடைய தந்தையை நான் கைதிசெய்தவுடன் இரங்கையா என்பவன் அவளைத் தன்னுடைய மகளாக இருந்து காலந்தள்ளும்படி, இருவித நோக்கங்களுடன், வற்புறுத்தினான். முதலாவதாக அவளுடைய லாவண்யமாகியவலை, செல்வம் படைத்த யுவாபுருஷர்களைப் பிடிப்பதற்குப் பயன்படும் என்றும், இரண்டாவதாக, எப்படியாவது ஜயனை அவள் மணந்துகொள்ளுவாளேயானால் அவன் செய்யும் அடாத செயல்கள் அவளால் வெளியே வாராமலிருக்குமே யென்றும், எண்ணியே இரங்கையா அவளை அந்த விதமாக வற்புறுத்தினான்" என்று விடை கொடுத்தார்.

"ஆயின் கடைசிவரையில் அவர்கள் என்னைக் கொல்லவா உத்தேசித்திருந்தனர்?" என்று மீண்டும் வினவினேன்.

"ஆமாம், தாங்கள் உயிர்துறந்தால், கல்பலதா ஏராளமான பணத்திற்குச் சொந்தக்காரியாக ஆவாள் என்பதை மறந்தா விட்டீர்கள்? எந்த விதத்திலாவது தங்கள் உயி

லைப் போக்கவேண்டு மென்பதே அவர்களுடைய முக்கியமான நோக்கம். உங்களுடைய நல்லகாலமே அவர்கள் விஜய நகரத்திய அரசகுமாரியின் நகையைக் களவாட ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். அதனாலேயே தாங்கள் அவர்களுடைய கைகளினின்றும் தப்பினீர். ஆ! நாக நாதரே, இப்பொழுது கிலகனால் நடத்தப்படுகிற இந்தக் கொள்ளைக்கூட்டம், எப்பேர்ப்பட்ட காரியத்தைச் செய்வதிலும் வல்லவர்களாகவும், அதிகமான சரீரபலம், மனோபலம் வாய்க்கப் பெற்றவர்களாகவும், எவருக்கும் அஞ்சாதவர்களுமாகிய மனிதர்களால் ஒருகாலத்தில் நிறைந்திருந்தது."

"ஆயின் எனது அருமைக் காதலி உண்மையாகவே, அக்கூட்டத்திற்கு முன்னர் தலைவனாக இருந்தவருடைய புதல்வியா?" என்று மீண்டும் உசாவினேன்.

"ஆமாம். அவள் தன்னுடைய உயிருக்கே கேடுவிளையுமென்று பயந்திருந்தமையாலும், தனது தகப்பனாரின் பக்கலில் இருந்தால் தானும், தன்னைக் காதலிக்கும் நீங்களும் தீங்கினின்று வெளிப்பட்டிருக்கலா மென்று கருதியமையாலும் அவள் தன் தகப்பனாருடன் தப்பித்துக் கொண்டு வெளியே சென்றாள். ஏனென்றால், சுந்தரமூர்த்தி அதிக பலவானும், குற்றவாளிகள் செய்யும் விஷயங்களிலெல்லாம் கைதேர்ந்தவனுமாக இருந்தான். அவனுடைய வார்த்தை அக்கூட்டத்தவர்களுக்கு ஒரு தேவமந்திரமாக இருந்தது. எனது சாதுரியத்தை முற்றிலும் காட்டியும் அவர்களுடைய பிரிவுகளை நான் கண்டுகொள்ளவே முடியவில்லை" என்று விடை கொடுத்தார் இராமப் பிரஸாத்.

"ஆனால் சுந்தரமூர்த்தி குற்றவாளிகளில் உலகப் பிரசித்தி பெற்றவரோ?" என்று மறுபடியும் கேட்டேன்.

"அவனைத் திருடர்களுக்கு அரசனென்றே சொல்ல வேண்டும். ஆயினும், அவனுடைய தைரியமான செயல்களுக்கும், எடுத்த காரியத்தை முடிப்பதில் அவன் பெற்றிருந்த ஊக்கத்திற்கும் அவனை எல்லோரும் கொண்டாடவே வேண்டும். அவன் ஹிந்துஸ்தானம் முதல், தெக்ஷணம் வரை வெவ்வேறு பெயர்களுடனும், புதிது புதிதான நடையுடைகளுடனும் வசித்து வந்தான்; அப்படி இருந்தும் அவன் ஏழைகளுக்குக் கெடுதல் செய்யான். அவன் அந்தமான் சிக்ஷை யடைந்ததுமட்டும் அநியாயமே. அதற்குக் காரணம் இரங்கையா அவனுடைய ஸ்தானத்தை அடைய விரும்பிப் பொய்சொல்லியதே" என்றார் இராமப்ரஸாத்.

"என்னைத் தீங்கினின்றும் காப்பாற்ற எண்ணங்கொண்டே அவள் என்னைப் பரிந்தாள் என்கிறீர்களா?"

"ஆமாம். அதைப் பன்முறை வேண்டு மென்றாலும் உறுதியாகக் கூறுகிறேன். நான் முன்னம் ஒருமுறை இங்கு வந்திருந்தது ஞாபகத்திலிருக்கிறதா? அப்பொழுது அநேக உண்மைகளை அவள் எனக்குச் சொன்னாள்."

"ஆனால் இரங்கையா தங்கள் கையில் அகப்பட்டுக் கொண்டானா?" என்று கேட்டேன்.

"இல்லை, அவனுக்குள்ள சகஜமான சாதுரியத்தால் தப்பித்துக் கொண்டான்" என்று பதில் அளித்தார்.

"அவன் எங்கிருக்கிறான்? தாங்கள் அறிவீர்களோ?" என்று உசாவினேன்.

"எங்கிருக்கிறான் என்பது எனக்கு இன்னும் நிச்சயப்படவில்லை. ஆயினும் அவனைச் சேர்ந்த நால்வரைப் பிடித்துக் கைதிசெய்த பிறகு அவன் ஒளிந்திருக்குமிடம் தெரியாமல் போகாது." என்று சொல்லிப் புன்னகை புரிந்தார்.

"சுந்தர மூர்த்தியின் கதியும் அதுவேயோ?"

"இல்லை; இரங்கையா என்னும் கிலகனே தாங்கள் அகப்பட்டுக் கொண்டதற்குக் காரணம் என்றும், அவன் தப்புவதற்கே அவர்களைக் காட்டிக் கொடுத்து விட்டா னென்றும் இப்பொழுது அகப்பட்டிருக்கிறகைதிகள் உண் மையை அறிந்துகொண்டு அவனை வெறுத்தும், சுந்தர மூர்த்தியைப்பக்தி பூர்வமாக நேசித்தும் வருகிறார்கள். சுந் தரமூர்த்தி யடைந்த தீவாந்திர சிக்ஷைக்குக்காரணம் இரங் கையாவே என்பதை அவர்கள் அறியாமலிருக்கவில்லை. ஆகையால் அவர்கள் இரங்கையாவை இலேசில் விடார் கள். கொள்ளைக் கூட்டத்தவர்களுடைய பகைமை பூலோ கத்தில் எவர்களுடைய விரோதத்தையும் விட பயங்கர மானது. சுந்தர மூர்த்தி, நாகப்பட்டணத்தைச் சேர்ந்த கார்க்குடியில் குடிபுகுவதற்கு முன் அவனுடைய கொள் ளைக் கூட்டத்தில் அதி சாமர்த்தியவாதியான ஆணையும் பெண்ணையும் அடக்கி யாண்டு வந்தான். அப்பொழுது ஆறுமாதத்திற்கு ஒரு முறை அந்தத் திருடர்கள் யாவரும் கான்பரன்ஸ்போல் ஓர்இடத்தில் கூடுவார்கள். அச்சமயம் அவர்களில் ஒவ்வொருவருக்கும் சுந்தரமூர்த்தி ஒவ்வொரு கட்டளையிடுவான். அவர்களைப் பாதுகாப்பதற்குப் பலர் நியமிக்கப்படுவர். அவர்கள் செய்யும் வேலையை நாங்கள் கண்டுபிடிக்க முடியாது. சுந்தரமூர்த்தியின் புத்திசாலித் தனத்திற்கு அவன் ஒரு இராஜதந்திர நிபுணனாக இருக்க வேண்டும். இவர்கள் சிறு கூட்டங்களாகப் பிரிந்து தங்க ளுடைய தொழிலை நடத்துவார்கள். நாங்கள் இவர்களைச் சந்தேகித்து இரண்டு நாட்கள் கவனித்தோமாயின் மூன் றாவது நாள் வேறொரு கூட்டத்தவர் அங்கிருப்பார்கள்; ஏற்கனவே இருந்தவர்களைக் காணுவதென்பது எம்மா

லாகாத காரியம். எங்கு களவு செய்தால் ஏராளமான பொருள் அகப்படுமோவென்று பார்த்துக்கொண்டிருந்து சாதுரியமாகக் கனவான் வீட்டில் வேலைக்கு அமர்வார்கள். அவர்கள் பெரிய கனவான் போலவும் நடிப்பார்கள். கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்போலவும் வேஷம்பூண்டு கொள்வார்கள். ஆனால் அவர்களை எவரும் கண்டுகொள்ள முடியாது. எப்படி இருந்தபோதிலும் அக்கூட்டத்திற்கு சுந்தரமூர்த்தி தலைமை ஸ்தானத்தை வகித்திருந்த வரையில் கொலை என்பதே நடப்பதில்லை. தலைவன் தீவாந்திர சிக்ஷை பெறவே, கீழிருந்த அநேகர் பிரியலாயினர். அதற்குப்பின் தலைவனாக வந்த இரங்கையா, ஜயன் நந்தனனோடு சேர்ந்து, பணம் சம்பாதிப்பதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு கண்டபடி மனிதர்களை அபாயத்திற்குள்ளாக்கி பணம் சம்பாதித்து, உண்மை எங்கு வெளியாகி விடுமோவென்று ஐயுற்று, அவர்களைக் கொன்றும் விடுவான். திக்கற்றவர்களையும் குற்றமற்றவர்களையும் கொலை செய்தமையால் அநேக ஆயிரம் பவுன் சம்பாதித் திருக்கவும் கூடும்" என்றார் இராமப்ரஸாத்.

"சுந்தர மூர்த்தியைத் தாங்களே கார்க்குடியில்கைது செய்ததாகக் கூறினீர்களே?" என்று கடாவினேன்.

"ஆமாம். அது மூன்று வருஷங்களுக்கு முன்னர் ஹரிஹரனைக் கைதி செய்வதற்கு முன் நானும் எனது தோழனான ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டரும் கார்க்குடி சென்றோம். அன்று இரவு ஒரு ஆச்சரியமான சம்பவம்—இன்னும் வெளிவராத ஆச்சரியமான சம்பவம்—ஒன்று நடந்தது. அதைப் பிறகு சொல்லுகிறேன். இப்பொழுது நான் ஹனுமான் மந்திரம் போய் அங்கு நடப்பதைப் பார்க்க வேண்டும். கொஞ்ச நேரத்திற்கு முந்தியே நான்

அலஹபாத்திலிருந்து வந்தேன்" என்று கூறினர் இராமப்ரஸாத்.

வெகுதூரம் அவரை நான் வேண்டியதின்பேரில் அரைமனதுடன் என்னை அங்கு கூட்டிப்போகச் சம்மதித்தார். போகும்வழியில், சுந்தரமூர்த்தியைக் கைதிசெய்த இரவு கார்க்குடியில் தன்னைப்போல் வேஷம்பூண்டு உயிர் துறந்த ஒரு மனிதனுடைய விசித்திரமான கதையைச் சொன்னர்.

நாங்கள் நடந்து காளிகட்டத்தை அடைந்து ஹனுமான் மந்திரத்திற்கு எதிரில் சென்றவுடன், ஒரு போலீஸ் சேவகன் கையில் நீண்ட புகைச்சுருட்டுடன் உலாவிக் கொண்டிருந்தான். அவன் முதலில் எம்மை ஹனுமான் மந்திரத்துள்விட மறுத்தான். பிறகு இராமப்ரஸாத் தான் இன்னர் என்று சொல்லிக்கொண்டவுடன் அவன் வாய் பேசாமல் நின்ருன். நாங்கள் உள் நுழைந்தோம். அந்த வீட்டின் கொல்லைப்புறம் பல விளக்குகளின் வெளிச்சத்தால் பிரகாசித்தது. அநேகம் பெயர்கள் பூமியை வெட்டிக்கொண்டும் மற்றவர் பூமியின் மீது முளைத்திருந்த புற்களைப் பிடுங்கிக்கொண்டும் இருந்தனர். எனக்கென்று வெட்டப்பட்டிருந்த குழியின்மீது கறுப்புத் துணியொன்று போடப்பட்டிருந்தது. அதன் பக்கலில் கிழிந்த தோற் செருப்பொன்று—வெகு நாட்களாக மண்ணில் கிடந்ததாகத் தோன்றிய தோற் செருப்பொன்று—கிடந்தது.

நாங்கள் கவனித்துக்கொண் டிருக்கையிலேயே வேலைசெய்து கொண்டிருந்த ஒருவன் ஆச்சரியத்தால் கூச்சலிட்டான். பலர் அவனுக்கு ஒத்தாசை செய்ய ஓடிப்போய் பார்க்கையில் அங்கியணிந்திருந்த மனிதனுடைய கையொன்று காணப்பட்டது. மற்ருேரிடத்தில்

ஒரு வாலிபனுடைய மிருத சரீரம் அகப்பட்டது. வேறொரு இடத்தில் ஒரு கிழவனுடைய சரீரம் தோண்டி எடுக்கப்பட்டது.

ஆ! இராஜதானிப் பட்டணத்திலும் நாகரீகமான நகரத்திலும் நடக்கும் இப்பேர்ப்பட்ட அநீதிகளை நினைக்கும்போது குடிசைகளால் நிறைந்த கிராமத்தில் வசிப்பதே மேலென்று தோன்றுகின்றது. எப்பொழுது நாகரீகம் விருத்தியாகின்றதோ, அப்பொழுது, திருட்டு, கொலை, வியபசாரம் முதலியன விருத்தியாகின்றன. ஆனால் சாதாரண மூட ஜனங்களால் கண்டுபிடிக்க முடியாத அவ்வளவு சாமர்த்தியமாக அவைகள் நடைபெறுகின்றனவே, அவைதான் நாகரீக முதிர்ச்சி போலும்!

# முப்பதாவது அத்தியாயம்

## சங்கிலித் தொடர்போன்ற உண்மை

தினசரிப் பத்திரிகைகளைப் பார்க்கும் தங்களைப்போன்ற நண்பர் அப்பொழுது வெளிவந்த அதிசயமான சம்பவத்தை அறியாமலிருக்கமாட்டீர்கள். தினமும் ஹனுமான் மந்திரத்தில் வெட்டி எடுக்கப்பட்ட உருவங்களைப் படமெடுத்து எல்லாப் பத்திரிகைகளும் வெளிப்படுத்தின. நான்கு மாதங்களுக்கு முன்னர் காணமற் போனவர்களுடைய சரீரங்கள் அகப்பட்டன. ஒரு விஷயத்தை ஆங்கிலப் பத்திரிகை எழுதி விடுமேயாயின் அந்தச் சம்பவம் நடந்து பல வருஷங்களாயினும் கூட நேற்று நடந்ததாக எழுதும் தமிழ்ப் பத்திரிகைகளிலும் இந்த விஷயம் வெளிவரலாயது.

நான் எனது காதலியாகிய அமிர்தா—கல்பலதா—இடத்திலிருந்து ஏதாவது ஒரு நற்செய்தி வருமென்று எதிர் பார்த்த வண்ணம் இருந்தேன்.

கல்கத்தாவிலேயே வசித்து வந்த இராமப்பிரஸாத், அமிர்தா தன் தகப்பனாராகிய சுந்தரமூர்த்தியுடன் ஜாக்கிரதையாக ஒளிந்து சௌக்கியமாக வசிக்கிறாள் என்று எனக்குத் தைரியம் சொல்லி வந்தார்.

"அவர் அகப்படுவாராயின் தாங்கள் அவரைக் கைதி செய்வீர்களல்லவா ?" என்று நானும் இராமப்பிரஸாதும் அவருடைய அறையில் உட்கார்ந்திருக்கும்பொழுது அவரை வினவினேன்.

"எனது பிரியமான நாகநாதரே, அவரைப்பிடிக்க வேண்டும் என்னும் எண்ணம் எனக்குக் கனவிலும் கிடை

யாது" என்று தயவாய் மறுமொழி தந்து, "சுந்தரமூர்த்தி, தான் செய்து வந்த தீச்செயல்களை நினைத்து மனம் வருந்துவதாயும், அவர் கார்க்குடியில் வசித்துவரும் பொழுது அவரைச் சேர்ந்த பலரையும் யோக்கியமான பட்டணவாசிகளாக இருக்கும்படி கட்டளை யிட்டதாகவும், அஃதன்படி பலர் ஆங்காங்கு தங்கி, தம்முடைய தீச்செயல்களை நீக்கி விட்டதாகவும் கேள்விப்பட்டுள்ளேன். பொய்யான குற்றத்தின் நிமித்தம் தான் அடைந்த தண்டனை காரணமாக ஒரு வேளை திரும்பவும் ஹிம்சை செய்வாரோ வென்று பயமடைகிறேன். அவ்விதம் எவருக்கும் இனி தீங்குசெய்வதில்லை என்ற உறுதிமொழி கொடுப்பாராயின் அவரைத்தொந்தரவு செய்யேன்" என்று முடித்தார்.

"அவரைப் பிடிப்பதற்கு வாரண்டு ஒன்று காத்துக்கொண் டிருக்கிறதே?" என்று கேட்டேன்.

"உண்மை தான். அந்தமான் தீவிலிருந்து திரும்பி ஓடிவந்த குற்றத்திற்காக அவரைப் பிடிக்கவேண்டுமென்று பிரயத்தினம் செய்கிறார்கள். அவர் தப்பி வந்தது மிகவும் வியப்பைத் தருகின்றது. அத்தீவிலிருந்து ஐந்து மைல்கள் போல நீந்தி வந்ததையும் பிறகு அங்கு வந்த புகைக் கப்பலைக்கண்டு, அதன் தலைவனுடைய உதவியால் இலங்கை வந்து சேர்ந்ததையும் நினைக்கும் பொழுதே ஆச்சரியமும் பயமும் உதிக்கின்றன" என்று உத்தரம் சொன்னார்.

"அவர் இங்கு வரக்கூடாதோ? வந்தால் கண்டு பிடிக்கப்பட்டு மறுபடியும் தீவுக்கு அனுப்பப்படுவாரோ?" என்று பயத்துடனும், அனுதாபத்துடனும் கேட்டேன்.

"யார் அறிவார்? அதிசாமர்த்தியசாலியும், எதற்கும் அஞ்சாதவருமாகிய அந்த மனிதனைப்போல் நான் யாரை

யும் கண்டதில்லை. வேண்டுமானால், நானும் ஏமாந்து போகும் விதமாகத் தன்னுடைய உருவத்தை மாற்றிக் கொள்ளுவார்" என்றார் இராமப் பிரஸாத்.

"கல்கத்தா டவுன் போலீஸார் அமிர்தாவை—கல்பலதாவை—அவருடைய குமாரி என்று அறிவார்களாயின் எனது வீட்டை அவர்கள் கவனிப்பார்களே"! என்று கூறி பயத்துடன் அவரைப் பார்த்தேன்.

"ஆமாம் அப்படியே நடக்கவும் கூடும்?" என்று ஒப்புக்கொண்டு, "தங்களுடைய சம்சாரத்தைக் காண வேண்டிய ஆசை தங்களுக்கு இருக்குமாயின் எவரும் சந்தேகப்படாத இடத்திற்குத் தாங்கள் சென்றுவிட வேண்டும். தாங்கள் போகும் விலாஸத்தை என்னிடம் விட்டுச் செல்வீர்களானால் அவர்களிடம்—கல்பலதாவினிடமும், அவள் தந்தையிடமும்—தம்முடைய வாசஸ்தலத்தைப் பற்றி இரகசியத்தில் தெரிவிப்பேன்" என்று சொல்லி எனது பதிலை ஆவலுடன் எதிர் பார்த்தார்.

இரம்பாவிலுள்ள சத்திரம்—அழகிய இயற்கைக்காக்ஷிகள் நிறைந்த சத்திரம்—முதன் முதல் என் பிரிய கல்பலதாவைச் சந்தித்த சத்திரம் ஞாபகத்திற்கு வந்தது. அந்த விலாஸத்தை அவரிடம் புகன்றேன்.

"ரொம்ப சரி" என்று சந்தோஷத்துடன் கூறி, "நாளையத்தினம் நான் அலஹபாத் போகிறேன். அங்கு அந்தக் கைதிகளினிடமிருந்து சுந்தரமூர்த்தி யிருக்கும் இடத்தைப் பற்றிய உண்மை ஏதாவது தெரியுமாயின், அவருடையமருமகன் இன்னவிடத்தில் அவருக்காகக் காத்திருக்கிறார் என்று சொல்ல, தக்கஏற்பாடு செய்கிறேன்" என்று எனக்குத் தைரிய வசனம் கூறினார்.

அவருக்கு நான் மனமுவந்த வந்தனம் செய்து பிரிந்தேன்.

சுந்தரமூர்த்தியை அரஸ்டு செய்த அன்றிரவு ஒரு மனிதன் கொல்லப்பட்டதாயும், அவன் தன்னைப்போல் இருந்தானென்றும், அதன் இரகசியம் தனக்கொன்றும் தெரியவில்லை என்றும் இராமப்பிரஸாத்—இந்துதேசம் முற்றும் துப்பறியும் தொழிலில் பிரக்கியாதி பெற்ற இராமப்பிரஸாத்—சொன்னதிலிருந்து அதன் உண்மையை அறியவேண்டுமென்னும் அவா, என்னைப் பற்றியது.

மறுநாட் சாயங்காலம், சதாசிவபண்டாரம் என்னை வந்து கண்டு வெகு நேரம் பேசிக்கொண்டிருக்கையில், என்னைப் பரிதாபமாகப் பார்த்துப் பின்வருமாறு பேசலாயினர்—"நாகநாதரே நான்,—சுவாமி கோவிலுக்குப் பூசை செய்யவேண்டிய தொழிலைக் கைக்கொண்டிருக்கிற பூசாரியும் பண்டாரமுமாகிய நான்—கெட்ட நடத்தைக் காரர்களுடன் சேர்ந்திருப்பது தமக்கே ஆச்சரியத்தைக் கொடுக்கும். அவர்களில் நால்வர் கைதிசெய்யப்பட்டனர்; ஐந்தாவன் வெகு சீக்கிரம் பிடிபடுவான். தங்களுடைய சந்தேகம் நீங்கும்படியாக எனக்குத் தெரிந்ததைத் தெளிவாகக்கூறுகிறேன். சுந்தரமூர்த்திமுதலியார் தன்னுடைய பெண்ணாகிய கல்பலதாவுடன் கார்க்குடியில் வந்து குடியேறினர். பிறகு நாங்களிருவரும் அத்தியந்த நண்பர்களானோம். ஒருநாள் சாயங்காலம் நான் அவருடன் பேசிக்கொண்டிருக்கையில், நான் கொள்ளைக்கூட்டத் தலைவனாகிய அழகநாதன் என்றும், தன்னுடைய தீச்செயல்களுக்காகத் துக்கப்படுவதாயும், அவைகளினின்றும் நீங்கி மனோசமாதானம் அடையவே அங்கு வந்து வாழ்நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கையில், தான் வெகு சீக்கிரம் போலீ

ஸாரால் பிடிக்கப்படப் போவதைத் தெரிந்து கொண்ட தாயும் என்னிடம்சொல்லி அதற்கு யாதுயோஜனை என்று கேட்டார். ஒரு புத்திமானுன மனிதனைப்போல நடந்து கொள்ள வேண்டுமேயொழிய தற்கொலை தகாது என்று தடுத்தேன். அவர் என்னிடம் சொன்ன உண்மையைக் கேட்டவுடன் அப்பேர்ப்பட்ட எண்ணம் எனக்குள் உதித்தது எனக்கே ஆச்சரியமாக இருந்தது. அவரைக் காட்டிக்கொடுத்த கிலகன் மீது எனக்கு ஒருவிதமான வெறுப்பு உண்டாயிற்று. அந்த கிலகனை நான் ஒரே முறை சந்தித்திருந்தேனுயினும், இருபது வருஷங்களுக்குமுன்னர் நான் காதலித்த ஒரு மாதினுடைய மனத்தைக் கெடுத்து அழைத்துக் கொண்டுபோய் அவளைத் திண்டாட விட்ட பாபியென்று நான் அதுவரையில் அவனைச் சந்தேகிக்கவில்லை. எனக்குள் உண்டான கோபத்தை நான் அடக்கிக் கொண்டேன். பிறகு சுந்தரமூர்த்தி அன்றிரவே பிடிக்கப்பட்டார். பிறகு அவருடைய குமாரியாகிய கல்பலதா, இராமப்ரஸாத் தங்களிடம் சொல்லிய காரணங்களின் நிமித்தம் எனது ஜென்ம விரோதியாகிய இரங்கையா என்னும் கிலகனைத் தனக்குத் தந்தையாகக்கொண்டாள். அதனாலே நான் அவளைப்பற்றி அவ்வளவு கவலை எடுத்துக் கொண்டேன். கடைசியாக அவள் தங்களுடைய மனைவியான செய்தியைக் கேட்டவுடன் சந்தோஷம் அடைந்தேன் ”

“ இரங்கையாவின் மீது தங்களுக்கு உண்டான உணர்ச்சியை மறைத்துக் கொண்டிருந்தீர்களாகையால் அவன் தங்களுடைய நண்பன் என்றே எண்ணினேன் ” என்று சொன்னேன்.

"நான் கல்பலதாவின் நண்பனேயொழிய அவனுடைய நண்பனல்லன்" என்று மொழிந்தார்.

"இராமப்ரஸாத் போன்ற வேஷத்துடன் வந்து சுந்தரமூர்த்தியின் வாசலில் உயிர் நீங்கிய மனிதன் சங்கதி ஞாபகத்தி லிருக்கின்றதல்லவா?" என்று நான் வினவினேன்.

"ஆகா நன்றாக ஞாபகத்திலிருக்கின்றது. அது எவராலும் இன்னும் கண்டுபிடிக்க முடியாத அவ்வளவு இரகசியமாக இருக்கிறது. ஒருகால் சுந்தரமூர்த்திக்குத் தெரியலாம். அப்படித் தெரியாவிட்டாலும் அதைப்பற்றி நுணுக்கமான அபிப்பிராயமாவது அவர் கொடுக்கலாம்" என்று விடை கொடுத்தார்.

நானும் அவருமாகப் பல்வேறு விஷயங்களைப்பற்றிப் பேசிஇருந்தோம். எங்களுடைய சம்பாஷணையினிடையே, கல்பலதா என்னை அன்புடன் காதலித்ததாயும், காதலிக்கிறதாயும், அவள் தன்னுடைய தகப்பனுருடன் இருந்தால் எனக்கு யாதொரு கேடும் விளையாதென்றும் என்னுடைய க்ஷேமத்தை நாடியே என்னைப் பிரிந்திருக்கிறதாயும் கூறினார்.

எதற்காக அவளை நான் பார்க்கவேண்டுமென்று ஒவ்வொருநிமிஷமும் ஆசைகொண்டேனோ அந்தஉண்மையை அறிந்தேன்.

இன்னும் மீந்திருக்கின்ற சங்கிலித்தொடர் போன்ற உண்மையை அறியவேண்டியே அவளையும் அவளுடைய தந்தையான சுந்தர மூர்த்தியையும் பார்க்க அவா மிகக் கொண்டேன்.

## முப்பத்தோராவது அத்தியாயம்

### வெளிவராத இரகசியம்

பத்து தினங்கள் கழிந்தன. ஒருநாட் காலையில் இராமப் பிரஸாத் இடமிருந்து ஒரு கடிதம் வரப் பெற்றேன். அதைக் கண்ணுக்குமிடத்து நான் உடனே புறப்பட்டு இரம்பாவை அடுத்துள்ள சங்கரபுரத்தின் சத்திரத்தில்போய் நீலன் என்ற பெயருடன் காத்திருந்தேனாயின் எனது பொறுமைக்குப் பரிசு கிடைக்கும் என்று வரையப்பட்டிருந்தது.

அவர் சொன்னபடியே சங்கரபுரம் போய் ஆறு நாட்களாயின. ஒருநாள் சாயங்காலம் எனது பிரத்தியேகமான அறையில் உட்கார்ந்து ஒரு பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருக்கையில், அவ்வறையின் கதவு மெதுவாகத் திறக்கப்பட்டது. யாரோ கதவைத் திறக்கிறார்களென்றெண்ணித் திரும்பிப் பார்க்குமுன் என் காதலி ஓடிவந்து என்னை ஆலிங்கனம் செய்து கொண்டாள்.

அச்சமயம் நான் அடைந்த சந்தோஷத்தை உள்ளபடியே சொல்லவும் எனக்குச் சக்தி இல்லை. அப்படி சொல்வேனாயினும் என் பிரிய வாசகர்களே, நீங்கள் அதை அனுபவித்திருந்தாலொழிய நான் வீண் தற்புகழ்ச்சி பேசியதாகவே நீவிர் கருதுவீர். அவளை நானும் அணைத்து, அவளுடைய கபோலங்களில் வழிந்தோடிய கண்ணீரைத் துடைத்து அநேகமுறை முத்தமளிக்கும் போது சொன்ன சொற்கள் இப்பொழுது ஞாபகத்தில் இல்லை.

அவளுடைய பின்புறத்தில் கெட்டையான கனவான்

ஒருவர் மௌனமாக நின்றுகொண்டிருந்தார். அவருடைய முகத்தைப் பார்த்தபொழுதே பல தடவைகளில் மாறுவேடம் பூண்டிருக்கிறார் என்னும் அடையாளங்கள் சிலகாணப்பட்டன.

"இவர்தான் என்னுடைய தந்தையார்" என்று எனது காதலி தனது இரண்டு கைகளாலும் அவரை மரியாதையாகக் காட்டினாள். நான் உடனே அவருடைய பாதங்களில் பணிந்தெழுந்து அவருடைய கையில் முத்தமளித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டேன். அவரும் என்னை அன்புடன் கட்டிக்கொண்டார்.

"கல்பலதா நடந்த எல்லா சங்கதிகளையும் எனக்குச் சொன்னாள்," என்று கூறி, "அக்கொலை பாதகர்கள் தங்களுக்கும், கல்பலதாவுக்கும் செய்த தீங்கை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் மனம் நடுங்குகின்றது. இராமப்பிரஸாத் துப்பறியும் உத்தியோகஸ்தராக இருந்தபோதிலும், மஹா நல்லவர். அவர் நேற்றே கீலகனை—என்னுடன் உபகாரிபோல் நடித்து என்னையே காட்டிக் கொடுத்த கீலகனை—ஹைதராபாத்தில் பிடித்ததாகவும், அவனைக் கொடுக்கவேண்டுமென்று நிஜாம் அவர்களை உத்தரவுகேட்டு அவனை கல்கத்தா கொண்டுபோயிருப்பதாகக் கேள்விப்பட்டேன்" என்று மொழிந்தார்.

நாங்கள் இருவரும் ஒரு சோபாவின்பேரில் உட்கார்ந்துகொள்ள, கல்பலதா அந்த சோபாவின் பின்புறத்தைப் பிடித்துக்கொண்டு நின்றாள்.

"மாமா, தாங்கள் அரஸ்டு செய்யப்பட்ட அன்றிரவு ஒரு அதிசயமான சம்பவம் நடந்தது ஞாபகத்திலிருக்கின்றதா?" என்று சுந்தரமூர்த்தியாரை வினவினேன்.

"இருக்கிறது?" என்று விடை பகர்ந்து, "நான் அந்தமான் தீவைவிட்டு வெளிக் கிளம்பும் பொழுது உண்மையை அறிந்தேன். என்னைத் தொலைத்து விடவேண்டுமென்று எண்ணிய கிலகன் இராமப் பிரஸாத்போல் ஒருவனை வேஷம்போட்டுத் தயாரித்து, என்னை வந்து கண்டு தற்கொலை செய்துகொள்ளுமாறு, சொல்லும்படி ஏற்பாடு செய்திருந்தான். அந்த மனிதனே என்னை மாறுவேஷத்துடன்வந்து தற்கொலை செய்து கொள்ளுமாறு அபிப்பிராயம் சொன்னான். நான் கார்க்குடியில் இருந்த சங்கதியைக் கிலகன், இராமப்பிரஸாதாகிய துப்பறியும் உத்தியோகஸ்தனுக்கு எழுதி இருக்கிறான் என்பதை இறந்த மனிதன் அறியான். அவன் என்னுடைய வீட்டினின்றும் வெளிவந்து நான் யாது செய்கிறேன் என்று ஒளிந்திருந்து கவனித்திருக்கிறான். மணி என்கிற ஹரிஹரன் என்னை இரகசியத்தில் சந்திக்க எண்ணி வந்திருக்கிறான். அந்தச் சமயத்தில் இராமப்பிரஸாத் போன்ற ஒரு மனிதன் என் வீட்டின் முன் தோட்டத்தில் ஒளிந்து நடமாடுவதைக்கண்டு அவன் கூச்சல்போடும் முன் ஒரே அடியாக அடித்துக்கொன்றிருக்கிறான். மணி யென்பவன் பிறகு எங்கள் ஜன்மப்பகைவனாகிய இராமப் பிரஸாத் என்பவரைக் கொன்றுவிட்டதாகச் சந்தோஷித்துச் சென்றிருக்கிறான். சிறிது நேரம் கழித்து என்னைக் கைதி செய்யவந்த இராமப்பிரஸாத் இறந்த மனிதனுடைய பிணத்தைக் கண்டார்" என்று எந்தக் கதையை நானும் என்போன்ற பலரும்கேட்க ஆசைமிக்க கொண்டிருந்தோமோ அதைச் சொல்லி முடித்தார் எனது மாமனாராகிய சுந்தரமூர்த்தி.

"ஹரிஹரன் இதை ஒப்புக்கொண்டானா?" என்று ஆச்சரியமாகக் கேட்டேன்.

"ஆமாம். அவன் இறக்குந் தருவாயில் உண்மையை என்னிடம் கூறினான். நான் தப்பித்துக்கொண்டு வருவதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்பு மணி, மலைக் காய்ச்சல் கண்டு மாண்டான்" என்று பதில் கூறி, "நாகநாதரே, ஜயனும், நந்தனனும், எங்ஙனம் உங்கள் இருவரை ஹனுமான் மந்திரத்தில் கொலைசெய்யப் பார்த்தார்கள் என்று கல்பலதா சொல்லியதிலிருந்தும் அறிந்தேன். நல்ல வேளையாகக் கல்பலதா புத்தி தடுமாறுமுன்னர் அவளைவிட்டு ஓடினார்களாம்" என்று எங்களுடைய வார்த்தையைத் திருப்பினார்.

"ஆமாம்" என்று கூடச்சொல்லிய என் பிரியை, "தங்களை விட்டுவந்த சரிதையை என்னிடம் அவர்கள் சொல்லக்கேட்டு நான் வருந்திப் பயந்துகொண் டிருக்கையில் நல்லவேளையாகக் கீழே ஓடிப்போயினர். நான் தாங்கள் இருந்த அறையில் புகுந்து தங்களையும் விடுவித்து, அந்தப் பாம்பையும் கொன்றுவிட்டு, அங்கிருந்தால் தாங்கள் என்னைச் சந்தேகிப்பீர்கள் என்று பயந்து ஓடிப்போய் விட்டேன்" என்று முடித்தாள்.

"என் கண்மணி! நீயன்றோ என் உயிரைக் காத்தவள்!" என்று கூவி அவளுடைய அதரத்தில் முத்தமளித்தேன். பிறகு சுந்தரமூர்த்தியாகிய எனது மாமனாரைப் பார்த்து, "மாமா, தங்களையோ போலீஸார் எங்கும் தேடிக்கொண் டிருக்கிறார்கள். மறுபடியும் தாங்கள் பிடிபடாத விதமாக ஒரு இடத்தில் அமரக்கூடாதா?" என்று வினயமாகக் கேட்டேன்.

"தெய்வ சங்கல்பத்தால் நாளை வரையில் சௌக்கியமாக இருப்பேனாயின்" என்று புன்சிரிப்புடன் கூறி, "புதுச்சேரியைச் சேர்ந்த கிராமத்தில் சந்தோஷமாகவும்,

மனோ வமைதியுடனும் வசிப்பதாக உத்தேசித் திருக்கி றேன்" என்று முடித்தார்.

"நாதா! நான் தங்களுடன் கல்கத்தா வருகின்றேன். நானும் தந்தையாரும் திபேத் போய் இப்பொழுதே இங்கு வந்தோம். இனி எந்த விதமான பயமும் இல்லை" என்று கொஞ்சும் மொழியில் நவின்றாள் என் காதலி.

"என் அன்பே!" என்றழைத்து, "ஒன்றிரண்டு விஷயங்கள் பயங்கரமாகத் தோற்றியபோதிலும் உன்னை நான் சந்தேகப்படவில்லை" என்று கூறினேன்.

"நான் அவைகளைத் தடுக்கச் சத்தியற்றவளாக இருந் தேன்" என்று கூறி, "எனக்கும் தங்களுக்கும் ஒரு புதிய தீங்கிழைக்க அவர்கள் எண்ணி யிருப்பதை யறிந்து, நான் எனது தகப்பனுருடன் சேர்ந்திருந்தால் நம்மிரு வரையும் அவர்கள் ஒன்றும்செய்ய முடியாதென்று கண்டு அன்று நாடகக் கொட்டகையில் தங்களைப் பிரிந்தேன்; எனது தகப்பனுர் மற்றவர்களையும் பாடலீபுரத்தில் சந் தித்த பொழுது கிலகன், ஜயன், நந்தனன் முதலியவர்க ளுடைய நகைத் திருட்டை அறியார்" என்று கல்பலதா சொல்லியவுடன் சுந்தரமூர்த்தி "இல்லை. எனக்கு அந்தச் சங்கதியே தெரியாது; அவர்களுக்குப் பிரிவு வந்தனம் சொல்லுவதற்கே நான் அவர்களை அன்று அங்கே சந்தித் தேன். நான் அவர்களுடைய சங்கத்தை விட்டுப் பிரிந்து மூன்று வருஷங்களாகின்றன. அதாவது என்னைப் போலீ ஸார் பிடிக்கும் முன்னமேயே" என்று எனக்கு நம்பிக்கை வரும் விதமாக "நான் அவர்களுடைய சங்கத்தினின்றும் நீங்கினேன்" என்று சுந்தரமூர்த்தி மொழிந்தார்.

சிறிதுநேரம் பற்பல விஷயங்களைப் பற்றிப் பேசி இருந்து எனது காதலிக்கு என் காதலின் அறிகுறியாக

அவளைப் பன்முறையும் தழுவி முத்தமளித்தேன். மேல் நடந்த விஷயத்தைப்பற்றி நான் சொல்ல வேண்டிய தென்ன இருக்கிறது?

கல்பலதா என்னுடன் சுகமே திருச்சியில் வாழ்ந்து வருகிறாள். நான் கல்கத்தாவில் வீடுவாங்கியது முதல் அனுபவித்த கஷ்டத்தை நிவர்த்திசெய்ய எண்ணி என்னுடைய வீட்டைப் பதினாயிர ரூபாவுக்கு விற்றுவிட்டு என் திருச்சி வீட்டை நன்றாகக் கட்டிக்கொண்டேன்.

நானும் எனது மனைவியும் சந்தோஷமாக இருக்கிறது போல் எக்கொழுநனும் மனைவியும் இருக்கவில்லை.

நாங்கள் வருஷத்திற்கு இரண்டு முறை புதுச்சேரியடைந்து எங்களுடைய பந்துவும் அவ்வூரில் பிரக்கியாதி வாய்ந்திருக்கிறவருமான பக்தகோடியாரைக் கண்டு வந்தோம். எந்தத் தருமத்திலும் இவருடைய பெயரே முதவில் நிற்கிறது. இவருடைய விருத்தாந்தத்தை யறிந்தவர்கள் புதுவையில் கிடையாதே யொழிய இவரைத் தெரியாதவர்கள் இரார். முன் பிரக்கியாதி பெற்ற பகற்கொள்ளை கூட்டத் தலைவனாகிய அழகநாதரே பக்தகோடியார் என்று எவரும் அறிந்திலர்.

எனது நண்பனாகிய கோவிந்தராம், புனாவிலேயே பிரபல கனவானாக இருக்கிற ஜெயராமுடைய ஏகபுத்திரியாகிய விஜயாளை மணந்துகொண்டு சந்தோஷமாகக்காலம் கழிக்கிறான். இப்பொழுது எங்கள் கம்பெனியின் முதல் தொகை எழுபதுகோடி ரூபாவாகும். அதற்கு நானும் கோவிந்தராமுமே சொந்தக்காரர்கள். அதைத் தவிர எனக்குச் சொந்தமான பணம் பூமிமுதலியவைகளும்; அவனுக்குச் சொந்தமான நிலம், பணம் முதலியவைகளும் உண்டு.

not [illegible] 6/10/86